தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு – 117.

# தனிப்பாடற்றிரட்டு

(பொழிப்புரையுடன்)

## முதற் பாகம்



பதிப்பாசிரியர் :

வித்துவான் ச. பாலசுந்தரம்,
தமிழ்ப் பேராசிரியர்,
கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்.




இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்



1990

விலை ரூ. 30-00

தஞ்சை சரசுவதி மகால் வெளியீடு – 117.

# தனிப்பாடற்றிரட்டு

(பொழிப்புரையுடன்)

## முதற் பாகம்



பதிப்பாசிரியர் :

வித்துவான் ச. பாலசுந்தரம்,
தமிழ்ப் பேராசிரியர்,
கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்.




இயக்குநர்
சரசுவதி மகால் நூலகம்
தஞ்சாவூர்



1990

விலை ரூ. 30–00

# INTRODUCTION

Thamizhaham, adorned with Nature's choicest gifts of beauty and ennobled with one of the most ancient and yet unbroken lines of literary traditions, has produced a galaxy of great poets who can take their place with pride in the Universal brotherhood of poets. Apart from their numerous master-pieces of classical poems, which, in richness of literary beauty and universality of appeal, are a standing source of envy and emulation to the rest of the world, these great children of the Tamil Muse have bequeathed to posterity an unbounded treasure in the form of stray and occasional stanzas of great merit. Some of these have been collected and published as anthologies under the caption "*Thanippadal*" on different occasions by different compilers. There is still a vast amount of unpublished poetic pieces of this category, preserved in palm leaf manuscripts in the Sarasvati Mahal and elsewhere. The Library has planned to print and publish as many of them as possible and to make them available to the Tamil reading public.

Pulavar S. Balasundaram of Karanthai Pulavar Kalloori has undertaken on our behalf this pleasant but difficult task of compiling, from the several manuscripts, the unpublished stray stanzas of serveral Tamil poets and of editing them with a lucid rendering of the substance. The difficulties which he had to surmount in collecting the manuscripts and in sifting the published verses from the unpublished ones have been set out in his own preface. The Administrative Committee of the Library is indeed thankful to the learned Editor for his commendable performance. It is our hope to continue this edition of *Thanippadal Thirattu* in another volume, even now under preparation.

We are thankful to the Curator of the Government Oriental Manuscript Library, Madras for having kindly lent us for our collation, comparison and selection, the transcribed copy of the manuscript of *Thanippadal Thiratru* from his library.

I am sure that the vast number of readers of Tamil language and literature will join the authorities of the T. M. S. S. M. Library, Thanjavur in voicing forth their deep sense of indebtedness to the Government of Madras for their financial aid to the Library for publishing this and other similar unprinted works. It is our fervent hope and prayer that the Government may come forth with greater and greater aid in future to unearth the vast treasures in this library in larger numbers and at quicker pace.

**Sarasvati Mahal Library,**
**Thanjavur.**
**25—3—'67**

**O. A. NARAYANASWAMI,**
Honorary Secretary.

# முன்னுரை



மண்ணாகி விண்ணாகி மலையு மாகி
வயிரமுமாய் மாணிக்கந் தானே யாகிக்
கண்ணாகிக் கண்ணுக்கோர் மணியு மாகிக்
கலையாகிக் கலைஞானத் தானே யாகிப்
பெண்ணாகிப் பெண்ணுக்கோர் ஆணு மாகிப்
பிரளயத்துக் கப்பாலோர் அண்ட மாகி
எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்து மாகி
எழுஞ்சுடராய் எம்அடிகள் நின்ற வாறே!
[திருநாவுக்கரசர்]

உலகின்கண் விளங்கும் ஒவ்வொரு நாட்டையும் அதன் கண் வாழும் மக்களையும் அம்மக்களின் அரசியல், சமயவியல், வாழ்வியல், கலையியல் ஆகிய இவை காரணமாக விளங்கும் பண் பாட்டையும், நாகரிகத்தையும் விளக்குவன அவ்வந்நாட்டிடத்து வழங்கும் மொழிகளாலாய இலக்கியங்களேயாம். பொதுவாக ஒரு நாட்டின் வரலாற்றினை அறிந்துகொள்வதற்குப் பெருமளவு துணை செய்வதும் இலக்கியங்களேயாம்.

அவ்வளவில் வடவேங்கடம் தென்குமரிக்கு இடைப்பட்ட தென்னகத்தில், சிறப்பாகத் தமிழகத்தில் தொல்காப்பியர் காலந் தொட்டு அகப்பொருளிலும் புறப்பொருளிலும் (அறம் பொருளின்பம் வீடு பற்றிய) இலக்கியங்கள் போற்றத்தக்க அளவில் நிலைபெற்றுத் திகழ்கின்றன. இவ் விலக்கியங்கள் அமைந்த முறைகளைத் தொல்காப்பியர், "அம்மை அழகு, தொன்மை தோல் விருந்து இயைபு புலன் இழைபு" என எண் வகையாகப் பிரித்துக்காட்டி, அவை "பாட்டு உரை நூல் வாய்மொழி பிசி அங்கதம் முதுசொல்

வாழ்த்து'' என ஏழுவகையாக யாக்கப்படும் என்றும் இயம்பியுள்ளார். இவ்விலக்கண மரபை இடைக்காலத்தாரும் பிற்காலத்தாரும் நெகிழ விட்டு, வடநூன் முறையை ஓரளவு தழுவிச் சிறுகாப்பிய, பெருங்காப்பிய நெறியை ஒட்டி நூல்களை யாத்துள்ளனர்; யாத்து வருகின்றனர். அம் முறையிற்றான் சிலப்பதிகாரம் போன்ற காப்பியங்களும், கம்பராமாயணம், வில்லி பாரதம் போன்ற இதிகாசங்களும், பிற தொடர்நிலைச் செய்யுட்களும் அமைந்துள்ளன.

இனி முத்தகமாகவும் குளகமாகவும் வரும் செய்யுட்களைத் தொகுத்துச் செய்யும் நூல் வகையும் உளது. அதனைத் தொகை நிலைச் செய்யுள் என்ப. அவை

"தொகைநிலைச் செய்யுள் தோன்றக் கூறின்
ஒருவர் உரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருளிடம் காலம் தொழிலென நான்கினும்
பாட்டினும் அளவினும் கூட்டிய வாகும்."

[தண்டி—5]

இவ்வாறுகப் பலதுறை யறங்களையும் இல்லறம் துறவறம் அரசியல் அமைச்சியல் குடியியல் இன்பவியல் முதலாகத் தனித்தனி விதந்து தொகுத்துரைக்கும் திருக்குறளும், களவு—கற்பு ஆகிய அகப்பொருளின் இருவகைக் கைகோளினுள்ளும் வரும் கிளவிகளையும் துறைகளையும் தனித்தனி விதந்து கூறும் அகப்பொருட் கோவைகளும், கலம்பகம் முதலியவைகளும், வெட்சிமுதல் பாடாண் ஈருக உள்ள புறத்திணைகளின் துறைகளைத் தனித்தனி விளக்கித் தொகுத்துரைக்கும் புறப்பொருள் வெண்பாமாலை போன்ற மாலைகளும், தேவார, திருவாசக-திவ்வியப் பிரபந்தங்கள், திருப்புகழ் முதலிய அருளிச்செயல்களும் தொகை நூல்கள் எனத்தகும். இருப்பினும் சான்றோர்கள், அவை ஏதேனும் ஒரு பொருளைப் பற்றித் தொடர்ந்துள்ளமையால் அவை போன்றவற்றை விடுத்து, அகமும் புறமும் பற்றி அவ்வப்போது, புலவோர் மொழிந்த தனிப்பாக்

களைத் திரட்டிக், குறுந்தொகை, நெடுந்தொகை, கலித்தொகை, புறநானூறு முதலாகப் பெயரிட்டுத் தொகுத்து அவற்றை 'எட்டுத் தொகை' என வழங்குகின்றனர். புலவோர் 'இவை தனிப் பாடல்கள் தாமே' என எளிதாகக் கருதித் திரட்டித் தராதிருந் திருப்பாராயின் பெருமைக்குரிய சங்க நூல்கள் நமக்குக் கிடைத்திரா; சங்ககால மக்கள் வாழ்க்கை, பண்பாடு, நாகரிகம், வேந்தர் சிற்றரசர் வேளிர் பிற பெருமக்கள், அவர் தம் வரலாறு, ஆகியவற்றை அறியும் வாய்ப்பும், பேறும் நமக்குக் கிட்டியிரா.

இலக்கிய மதிப்பிற்குரிய பத்துப்பாட்டினைப் பாடிய புலவர் களே தொகை நூலுள் காணப்பெறும் தனிப் பாக்களுள் பலவற்றைப் பாடியுள்ளனர். பத்துப்பாட்டினால் பெறும் பயனைக் காட்டிலும் தொகைப் பாக்களால் பெறும் பயனே தவப்பெரிதாக உள்ளமையை யாவரும் அறிவர். இதனால் தனிப்பாடல்களின் சிறப்பும்-பயனும் இலக்கிய மதிப்பும் தெற்றெனப் புலனாகும். ஒரு காப்பியத்திற்கு எவ்வளவு மதிப்புண்டோ அதற்குச் சிறிதும் குறையாத மதிப்புத் திரட்டப்பெற்ற நூல்களுக்கும் உண்டென்பது தெளிவு. தனிப் பாடலை அதன் சிறப்பு நோக்கித் 'தனியன்' என வைணவ நூல்கள் வழங்கும். மணிமேகலைக் காவியத்தைப் பாடிய கூலவாணிகன் சீத்தலைச்சாத்தனார் பாடல்கள் எட்டுத் தொகை நூல்களுள் காணப்பெறுதல் போலக் கவிச் சக்கரவர்த்திகளாகிய கம்பர், ஒட்டக்கூத்தர், தெய்வப்புலமைச் சேக்கிழார். முதலியவர் களும், வில்லிப்புத்தூரார், பரஞ்சோதியார் போன்ற பெரும்புலவர் களும் தாம்தாம் செய்த பெருநூல்களே யன்றி அவ்வப்போது அரிய பல பாக்கள் பாடியிருக்கக் கூடுமன்றோ? அவ்வாறு எண்ணிய தமிழ்ப் பேரறிஞர்களும், சுவைஞர்களும் பெரிதும் முயன்று தேடி அரிதின் தொகுத்தளித்தவைகளே இப்பொழுது நாம் பெற்று மகிழ்ந்து வழங்கும் தனிப்பாடற்றிரட்டு நூல்கள்.

இத் தனிப்பாடல் நூல்களை ஒரு புலவர் ஒரு பொருளைப் பற்றிப் பாடிய பாக்கள், பல பொருள்களைப்பற்றிப் பாடிய பாக்கள்; பல புலவர்கள் ஒரு பொருளைப்பற்றிப் பாடிய பாக்கள், பல பொருள்களைப்பற்றிப் பாடிய பாக்கள் என நால்வகையுள் அடக்கலாம். இவ்வாறு பலரால் பல காலங்களில், பல்வேறி

டங்களில் பல பொருளைப்பற்றிப் பாடப்பெற்ற பாக்களைத் தொகுத்தோர் அவற்றைத் தனிப்பாசுரத் **தொகை**—தனிச் செய்யுட்**கோவை**-தனிப்பா**மஞ்சரி**—தனிச்செய்யுட்**கொத்து**—தனிப்பா**மாலை**— தனிப்பாடற்**றிரட்டு** எனப் பலவாறு பெயரிட்டு வழங்கினர். பயன் நோக்கித் தனிச்செய்யுட் **'சிந்தாமணி'** எனவும் வழங்குகின்றனர்.

இவ்வகைத் தனிப்பாடல்கள் தோன்றுவதற்குப் பெரும்பாலும் நிலைக்களமாக இருந்தவை. கோயில்களும் — சமயச் சார்பான மடங்களும்—வேந்தர், சிற்றரசர் சமீந்தார்கள் ஆகிய இவர்களின் அவைக்களங்களுமேயாம் சிறுபான்மை பிற இடங்களும் உண்டு அவை தோன்றுவதற்குப் பெரும்பாலான காரணங்கள் புலவர்கள் தத்தம் கல்விப் பெருக்கையும் கலைச் செருக்கையும் புலப்படுத்த எண்ணிய எண்ணமும் அவர் தம்மைப் பற்றி நின்ற வறுமை முதலாய துன்பங்களும், அவ்வப்போது வந்துற்ற இன்பத்துன்ப இடையூற்றுணர்ச்சிகளுமேயாம். இத்தகைய இலக்கியச் செல்வமாகிய தனிப்பாக்களைச் சங்ககாலப் பெருமக்கள் தொகுத்தனர். அதனால் நமக்கு எட்டுத்தொகை, பத்துப்பாட்டு பதிணென்கீழ் கணக்கு முதலாய சங்க இலக்கியங்கள் கிடைத்துப் பயனும் பெருமையும் எய்தி நிற்கின்றோம். அவ்வாறே இடைக்காலப் பிற்காலச் சான்றோர்கள் முயன்று இப்பொழுதுவரை வழங்கிவரும் தனிப்பாடற்றிரட்டுகளில் உள்ள பாடல்களைத் தொகுத்தளித்திரா விட்டால் பத்தாம் நூற்றூண்டிற்குப்பின் பத்தொன்பதாம் நூற்றுண்டு வரை வாழ்ந்த ஒரு சில வேந்தர்கள் சிற்றரசர்கள் சமீந்தார்கள் போன்ற பெருமக்களின் கொடை அளி செங்கோல் அறம் மறம் முதலிய வரலாறுகளையும், கவிஞர், கலைஞர், புலவர் போன்ற அறிஞர்களின் கல்வி, தொண்டு முதலிய வரலாறுகளையும், அவ்வக் காலத்து வாழ்ந்த மக்களின் நாகரிகப் பண்பாட்டுப் பழக்கவழக்க வரலாறுகளையும் நாம் கண்டிருக்க வியலாது. எனவே தனிப்பட்ட தலைமக்களை வைத்துச்செய்த காப்பியத் தொடர்நிலைச் செய்யுள் நூல்களைக் காட்டிலும் தனிப்பாடற்றிரட்டுக்கள் ஓராற்றன் மிக்க பயனும் சுவையும் தருவன எனலாம்.

எட்டுத்தொகை நூல்களுள் நற்றிணையைத் தொகுப்பித்தோன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி (தொகுத்தோர் தெரியவில்லை) குறுந்தொகையைத் தொகுத்தோர் பூரிக்கோ (தொகுப்பித்தோர் தெரியவில்லை) ஐங்குறு நூற்றினைத் தொகுத்தோர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் தொகுப்பித்தோன் யானைகட்சேய் மாந்தரஞ்சேரலிரும் பொறை புறநானூற்றைத் தொகுத்தோரும் தொகுப்பித்தோரும் தெரியவில்லை. இவ்வாறே இடைக்காலப் பிற்காலத் தனிப்பாடல்களைத் தொகுத்தோரையும் தொகுப்பித்தோரையும் நோக்கும்போது, இந் நூற்றாண்டின் தொடக்கத்திலே இராமநாதபுரத்தில் வாழ்ந்த பொன்னுச்சாமி தேவரவர்கள் சந்திரசேகர கவிராச பண்டிதரவர்களைக்கொண்டு தன்காலத்திலும் தனக்கு முற்காலத்திலும் பாடப்பெற்ற தனிப் பாடல்களையெல்லாம் தொகுத்துத் தனிப்பாடற்றிரட்டு என்னும் பெயரோடு இரண்டு பகுதிகளாக வெளியிட்டார். பின்னர் முறையூரில் வள்ளலாக விளங்கிய சண்முகஞ் செட்டியார் என்பவர் தம்முடைய அவைப் புலவராயிருந்த கொட்டாம்பட்டிக் கருப்பையாப் பாவலர் என்பவரைக் கொண்டு மேலும் பல பாடல்களைத் திரட்டிச் சந்திரசேகரக் கவிராயர் திரட்டியவற்றோடு கூட்டித் **தனிச்**செய்யுட் சிந்தாமணி என்னும் பெயரோடு வெளியிடச் செய்தார். இதன் பின் மதுரைமாநகரில் வாழ்ந்த மு. ரா. கந்தசாமிக் கவிராயர் மேலும் சில பாக்களைத்திரட்டி மூவாயிரத்து எண்ணூற்றுப் பதினைந்து பாடல்களாகச் சேர்த்து தனிச்செய்யுட் சிந்தாமணி என்னும் பெயராலேயே வெளியிட்டார். இவையேயன்றிச் சங்கத் தொகை நூல்களில் காணப்பெறாமல் தொல்காப்பியம் முதலிய நூல்களின் உரையிடத்தே எடுத்துக்காட்டாக வந்துள்ள பாக்களையும் அவைபோன்ற பிறவற்றையும் தொகுத்துப் பேராசிரியர் S. வையாபுரி பிள்ளை பி.ஏ.,பி.எல். அவர்கள் புறத்திரட்டு என்பதொரு நூலும், அவ்வாறே பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் பெருந்திரட்டு என்பதொரு நூலும் வெளியிட்டனர். முதற்கண் கூறிய தனிப்பாடற்றிரட்டுக்களையன்றிப் பிறநூல்கள் இப்பொழுது கிடைத்தற்கரியவாக உள.

தற்போது திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் இதுகாறும் வந்துள்ள தனிப்பாடல் நூல்களில் கண்ட பாக்களோடு - செந்தமிழ் - செந்தமிழ்ச்செல்வி - தமிழ்ப்பொழில் முதலான இலக்கிய இதழ்களில் வெளிவந்த பாக்களையும் தற்காலப் புலவர் சிலரின் தனிப்பாக்களையும் தொகுத்து, நான்கு பகுதிகளாக ஏறக்குறைய மூவாயிரத்துத் தொள்ளாயிரத்து எழுபது பாடல்களை வெளியிட்டுள்ளனர். இவையேயன்றி இன்னும் அச்சில்வராத பல பாக்கள் சென்னை அரசினர் கையெழுத்துச்சுவடி நூல்நிலையத்து உள. அவ்வாறே முயன்று தேடினல் மேலும் பல விடங்களிலும் கிடைக்கலாம்.

இனி வரலாற்றுப் புகழ்பெற்று விளங்கும் தஞ்சைமாநகரில் இடைக்காலச் சோழ வேந்தர்க்குப்பின் ஆண்ட மன்னர்களுள் சிறந்தவர்களாகிய மகாராட்டிர அரசர்கள் வழிவந்த அருங்கலை விநோதராகிய சரபோசியரசர் சிறந்தவர். அவர் ஆட்சிக் காலத்தில்-பல கலைகளிலும் வல்ல பல்வேறுபட்ட அறிஞர்களையும் புலவர்களையும் ஆதரித்து அவர்களைக்கொண்டு இசை-நாடக-இலக்கிய-கணித-மருத்துவ நூல்களை எழுதச் செய்து தொகுத்து ஒப்பற்றதொரு நூல் நிலையத்தைச் 'சரசுவதி மகால்' என்ற பெயரோடு அமைத்தார். அது வழி வழிப் பெருகி நின்றது. இந் நூல் நிலையத்தில் பலதுறை நூற்சுவடிகளுக்கிடையே 'தனிப்பாடல் திரட்டு' ஓலைச்சுவடிகளும் பல இருந்தமைகண்டு அவற்றை ஆய்ந்த பண்டித L. உலகநாதப் பிள்ளையவர்கள் அச்சுவடிகளிற் கண்ட பாடல்களில் சில அச்சாகியும் பல அச்சாகாமலும் உளவெனக் குறித்திருந்தார்கள். ஆதலின் அவற்றுள் அச்சாகாத பாக்களைத் தொகுத்து வெளியிடும் பணியைத் தற்போது பொறுப்பிலிருக்கும் சரசுவதி மகால் நூல்நிலையத்தார் எனக் களித்தனர்.

இந்நிலையத்தில் M. No. 690 a/340, 690/ F 3.4, 703, 697 D-351 497, 693, 691, 706 ஆகிய எண்களுள்ள ஓலைச் சுவடிகளையும் அவற்றின் கையெழுத்துப் பிரதிகளையும் நன்கு ஆராய்ந்தேன். ஆயுங்கால் பாக்களின் வடிவு தெரியாமல்

சிதைந்தும், சொற்சீர்கள் பிறழ்ந்தும், சொல்வடிவங்கள் திரிந்தும், எழுத்துப் பிழைகள் மலிந்தும் காணப்பெற்றன. பொருட்டொடர்ச்சியில்லாத் தனிப்பாக்களாதலின் முன்னும் பின்னும் ஒப்பிட்டுப் பார்க்கவும் இயலாத நிலையில், பல பாக்கள் ஒரு நூலுக்கு எடுத்துக் கொள்ளவேண்டிய முயற்சியையும் துன்பத்தையும் அளித்தன. செம்மை பெற்று அமையும் போதெல்லாம் எல்லையற்ற இன்பத்தையும் அளித்தன. மேலும் அவற்றுள் ஆச்சானவை எவை எவை என ஆய்ந்தபோது முயன்று திருத்தப்பெற்றவையுள்ளும் பலகழிந்தன. அவ்வாறு அச்சானவற்றை நீக்கி (என் பார்வைக்குத் தப்பி ஒருசிறிது இந்நூலில் கலந்திருக்கவும் கூடும்) எஞ்சியவற்றை மீண்டும் ஆராய்ந்து செப்பம் செய்தேன். செம்மைப்படாத பாக்களைக் குறித்துத் தனியே வைத்துள்ளேன். அவற்றோடுகூட அச்சான பாடல்களில் சிறந்த பாட வேறுபாடுள்ள பாக்களையும் தனியே தொகுத்துவைத்துள்ளேன் (அவை அடுத்த பகுதியில் வெளிவரலாம்) இத்திரட்டினுள் காணப்பெறும் பாடல்களுள் கல்வி நலஞ்சான்ற புலவர்களே யன்றிச் சிலபாக்கள் தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சிக் குறைபாடுடையவராலும் எழுதப்பெற்றிருக்கக் கூடும். என எண்ணவேண்டியிருத்தலின், நூலகத்தார் ஓரளவு மூலபாடத்தை விளங்கிக்கொள்ளும் அளவிற்குப் பொழிப்புரையும் இன்றியமையாத குறிப்பும் சேர்த்து வெளியிடக் கருதினராதலின், அவ்வாறே ஓரளவுக்கு எளிய நடையில் உரையும் குறிப்பும் எழுதி இணைத்துள்ளேன்.

இச்சுவடிகளுள் பதிப்பாக வேண்டிய பாக்கள் ஏறக்குறைய அறுநூறுக்குமேல் உள்ளன. இப்பொழுது M.No. 690a/340, 690 F/341, 697 D. 351 எண்ணுள்ள சுவடிகளிலிருந்து 216 பாடல்கள் மட்டும் முதற் பகுதியாக வெளிவருகின்றன. தொடர்ந்து அடுத்த பகுதிகள் வரும். இந்நூலுள் காணப் பெறும் பாக்களின் சிறப்பும், புலவர்கள், சமீந்தார்கள், பெருமக்கள், தலங்கள் முதலானவற்றின் வரலாற்றுக் குறிப்புகளும், அவை பற்றிய ஆராய்ச்சியும் கிட்டியமட்டில் பின்னர் அடுத்த பகுதியில் சேர்க்கப் பெறும்.

இந்நூலைச் செப்பஞ்செய்து அச்சிட்டுத்தரும் பணியை எனக் களித்த பெருமகனார், பொதுநல ஊழியர், கல்வி கலைத்துறை ஆக்கங்களுக்குப் பணியாற்றுவதையே பிறவிப்பயனாகக் கொண்டிலங்கும் சரசுவதிமகால் மதிப்பியற் செயலாளர் திருவாளர் O.A. நாராயணசுவாமி அய்யர், பி.ஏ., பி.எல்., அவர்கட்குப் பெரிதும் நன்றிக்கடப்பாடுடையேன். இந்நூல் அமைப்பிற்கும். உரைக் குறிப்பிற்கும் ஆக்கமான தக்கநெறிகளைக்கூறி அன்பு காட்டியுதவிய பேராசிரியரும், வடமொழி வல்லுநரும், நூல் நிலைய ஆட்சிப் பொறுப்பாளருமான திருவாளர் V. கோபால அய்யங்கர், எம்.ஏ., அவர்கட்கு என் உளமார்ந்த நன்றி உரித்தாகும். கையெழுத்துப் படிகளோடு ஓலைச்சுவடிகளை ஒப்பிட்டு நோக்கவும், அவ்வப்பொழுது ஏற்படும் ஐயப்பாடுகளை நீக்கவும் பெரிதும் துணையாக நின்றதோடு என்னுடைய கையெழுத்துப்படியை ஆய்ந்து அமைத்து அச்சுப் பிழைகளையும் திருத்தி, ஆக்கமான பல கருத்துக்களையும் கூறி உதவிய என் அன்பிற்குரிய நண்பரும், மகாலின் தமிழ்த்துறைப்பிரிவின் தலைவருமான புலவர் திரு வீ. சொக்கலிங்கம் அவர்களுக்கு என் உளங்கனிந்த வாழ்த்தும் உவப்புமிக்க நன்றியும் உரியவாகும். எல்லாவற்றிற்கும் மேலாகத் தோன்றாத் துணையாக இருந்து பல்லாற்றானும் குறைபாடுடைய என்னை இப்பணியில் ஈடுபடுத்தி நிறை வாக்கியருளும், இறைவன் திருவருளையும், தமிழன்னையின் மலரடிகளையும் வந்தித்து வணங்கி மகிழ்கின்றேன்.

கரந்தை,
25—3—67.

**ச. பாலசுந்தரம்,**
பதிப்பாசிரியர்

ஓம்

# தனிப்பாடற்றிரட்டு

தோற்றுவாய்

இச்செய்யுள், வெள்ளை வாரணப் பிள்ளையாரை வழிபடுவார்க்கு, எல்லாத் துயரங்களும் நீங்கி, இன்பம் பெருகும் என, விநாயகக் கடவுள் வணக்கங் கூறுகின்றது.

(வஞ்சித்துறை)

1. வெள்ளை வாரணப்
பிள்ளை யார்பதம்
உள்ள மேறநங்
கள்ள மாறுமே.

வெள்ளை வாரணராகிய பிள்ளையாருடைய துணைப்பாதங்கள், நம் உள்ளத்தில் ஏற ஏறக், கள்ளமாகிய இருள் நீங்கி, ஞானமாகிய ஒளிவீசும். ஆதலின் அவற்றை நினைந்து வழிபடுவோம்.

—0—

தோற்றுவாய்

இச்செய்யுள், பொன்னம்பலத்தே ஆடும் கூத்துடையான் திருவடிகளைக் கண்டும், நினைந்தும், வணங்கியும் வழிபடல் வேண்டுமென்கின்றது.

(நேரிசை வெண்பா)

**2. காணத் தொழப்புகழக் கண்ணுங்கை யும்நாவும்**
**சேணிந் திரன்வாணன் சேடன்போல்—வேணும்**
**பணகசய னத்துறங்கும் பச்சைமால் தேடும்**
**கனகசபை யிற்சிவந்த கால்.**

பாற்கடலின் கண்ணே பாம்பணையின் மேல் அறிதுயில் கொள்ளும் மரகதமேனி மாயோனால் தேடப்பெறும் (இறைவனின்) பொன்னம்பலத்துள் ஆடுதலாற் சிவந்துள்ள பாதங்களைக்காண, தேவேந்திரனைப் போல ஆயிரங்கண்களும், தொழ வாணாசுரனைப் போல ஆயிரங்கைகளும், புகழ ஆதிசேடனைப்போல ஆயிரம் நாவுகளும் வேண்டும்.

—O—

தோற்றுவாய்

இச்செய்யுள், யாவற்றையும் அருளும் தமிழ்த் தெய்வமாகிய சேயோனை, உள்ளம் உருக 'முருகா' என்னும் மந்திரத்தைச் சொல்லி வழிபடுவார்க்கு உள்ள வல்வினைநோயை, அவன் ஞான வேல் தீர்க்கும் என்கின்றது.

(நேரிசை வெண்பா, பின்முடுகு)

**3. ஓராறு சென்னி ஒருமுருகா என்பவர்க்குத்**
**தீராத வல்வினைநோய் தீர்க்குமே—போராடக்**
**கொக்கரித்து டற்கலித்த கொக்கசுர னைத்துணித்த**
**விக்ரமத்தி ருக்கரத்தின் வேல்**

'ஒப்பற்ற ஆறு திருமுகங்களையுடைய ஒரு முருகா' எனச் சிந்தித்து வழிபடுவாருக்கு, அனுபவித்தாலன்றித் தீராத வலிய

வினையாகிய நோயை அறப்போக்கிவிடும். அஃது யாதெனில்? தான்பெற்ற வரங்களின் செருக்கால் போரிட எண்ணி, உடல் செருக்கிக் கொக்கரித்து வந்து, மாமரமாக நின்ற சூரனைத் துண்டுசெய்து கொன்ற, போர்த்தொழிலால் வென்றிமிக்க, முருகனது அழகிய கரத்திலே விளங்கும் வேல்.

—*—

தோற்றுவாய்

'நாமகள் அருளால் புலமையுடைய நாம், நம்முடைய வறுமையை நீக்கவேண்டி, மன்னு மனிதரைப் பாடிச் சிறுமை யுருமல், யாவர்க்கும் அருள் புரியும் திருவலஞ்சுழி வெள்ளை விநாயகரைப் போற்றி உய்வோம்' என ஒரு புலவர் பிற புலவர் களை நோக்கிக்கூறியது.

இச்செய்யுள், வெள்ளை விநாயகரை 'வெள்ளத்தி மரம்' எனச் சொல்லணிச்சிலேடை நயம்பட விளக்குகிறது.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

4. வள்ளற்கைத் தலமில்லா மானிடரைப்
பாடியவர் வாசற் போந்து
தள்ளத்தள் ளுணடைந்த நோவெல்லாம்
புலவீர்காள் சாற்றக் கேளீர் !
உள்ளத்தன் பாற்கண்ணீர் வூற்றவலஞ்
சுழியில்வளர்ந் தொருகொம் போங்கும்
வெள்ளத்தி யடையின்பால் இட்டத்தால்
நமக்காறி விடுங்கண் டீரே !

புலவர்களே! வறியோர்க்கு வழங்கும் வள்ளன்மை இல்லாத கைகளையுடைய மானிடரை, ஊணுக்கும், உடைக்கும் பாடிக்

கொண்டு, அவர்தம் மனைவாயிலில் புக, அவர் எள்ளித் தள்ளுதலால் தள்ளுண்ட உடம்பு வலியெல்லாம் நீங்குதற்கு மருந்து ஒன்று கூறுவேன் கேட்பீராக! உள்ளத்தெழுந்த அன்பினால் ஆனந்தக் கண்ணீர் வழிய வழிபடுவார்க்கு அருள்புரியும் பொருட்டுத் திருவலஞ்சுழியில் எழுந்தருளியுள்ள நீண்ட ஒற்றைக் கொம்பையுடைய வெள்ளை விநாயகர்பால் சரண் அடைந்தால், நமக்கு உற்ற நோயெல்லாம் தானே நீங்கிவிடும்.

சிலேடைப் பொருள்:- அன்பர்கள் முயற்சியோடு நீரூற்றி வளர்க்க வளர்ந்து, வலப்பக்கம் சுழித்தெழுந்து ஒரு பக்கத்தில் நீண்டு வளர்ந்திருக்கும் அத்திமரக் கிளையில் உள்ள இலையின் பாலை இட்டுத் தேய்த்தால், உடம்பு வலி நீங்கி ஆறிவிடும் என்பதாம்.

அத்திமர இலையின் பால் உடல் வீக்கத்தையும், வலியையும் நீக்கும் என்னும் மருத்துவக் குறிப்புத் தோன்ற அமைந்துள்ள நயம் படித்து மகிழத்தக்கது.

[வெள்ளத்தி=வெள்ளையானை—ஈண்டு வெள்ளை விநாயகரை உணர்த்தியது.]

—*—

தோற்றுவாய்

இதுவும் முற்பாடலைப் போன்றது. இதனுள் 'தஞ்சை வெள்ளைப் பிள்ளையாரைப் புகழ்ந்தால் நம்மை வறுமை வந்தடையாது' எனப் புலவர் கூறுகின்றார்.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

5. தன்னைக்கும் அன்னமிடார் தலைமக்காம
தேனுவெனச் சாற்றி வீணே

**கொள்ளைச்செந் தமிழ்உகுத்தால் மிடிபோமோ ?**
**புலவீர்காள் ! கூறக் கேளீர் !**

**வள்ளைத்தண் குழைகொளிரு பெண்ணையணை**
**ஒருபெண்ணை வண்கைத் தஞ்சை**

**வெள்ளைப்பிள் ளையைப்புகழ்ந்தால் கறுப்புப்பிள்**
**ளைக்கொடியாள் மேவி டாளே.**

புலவர்களே! ஈன்ற தாய்க்கும் அன்னமிடாத உலோபிகளைக் 'காமதேனுவே' எனச் சொல்லி வீணே புகழ்ந்து, அங்கணத்துள் உகுத்த அமிழ்தம் போலப் பலப்பல செந்தமிழ்ப் பாக்களைப்பாடி உகுப்பதனால் உமது கொடிய வறுமை நீங்கிவிடுமோ? செவிகளில் வள்ளைமலரோடு அழகிய குழைகளையுடைய 'சித்தி, புத்தி' யாகிய இரு தேவிமார்களை அணைத்திருக்கும் பெரிய பனைபோலும் வண்மை பொருந்தியதொரு துதிக்கையை உடையவராய்த் தஞ்சையில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் வெள்ளைப் பிள்ளையாரைப் புகழ்ந்துபாடி வணங்கினால், காக்கையைக் கொடியாக உடையமூதேவி நும்மைப் பொருந்தாது ஒழிவாள்.

இதனுள் 'வெள்ளைப் பிள்ளை' 'கறுப்புப் பிள்ளை' என்னும் சொற்குறிப்பும் 'கொடியாள்', கொடியை உடையவள்; கொடுமையானவள் என்னும் சிலேடைப் பொருளும், (கறுப்புப் பிள்ளை = காக்கை) பஞ்சமாகிய பிள்ளை என்னும் தொனிப்பொருளும் விளங்குகின்றன. வெள்ளை – ஒளி. கறுப்பு – இருள். 'ஒளியை வேண்ட இருள்தானே விலகும்' என்ற நயமும், 'ஞானந்தோன்ற மாயை விலகும்' என்ற உள்ளுறையும் அமைந்து இருக்கின்றன. "தம்மையே புகழ்ந்திச்சை பேசினும் சார்வினும் தொண்டர்த் தருகிலாப் பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவிர்காள், இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்தலும் இடர் கெடலுமாம்'' என்ற ஆளுடைய நம்பிகள் அருள் மொழியையும்,

என்னுவது எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள்
மன்னு மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும்பொருள்
மின்னுர் மணிமுடி விண்ணவர் தாதையைப்பாடினுல்
தன்னுகவே கொண்டு சன்மம் செய்யாமையுங்
கொள்ளுமே.

என்ற நம்மாழ்வார் திருவாய்மொழியையும் இப்பாடல்கள் அடியொற்றி வந்தமை காணலாம்.

—*—

தோற்றுவாய்

வினை முடித்து மீண்டுவரும் தலைவன் மேகத்தொடு கூறியது:

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

6. விண்வழியே ஓடுகின்ற மேகங்காள்
ஒருவார்த்தை விளம்பிச் சேறீர் !
மண்வழியே புகழ்நிறுத்தும் மகதேச
வாணன்றன் வரையிற் சென்ருல்
கண்வழியே முத்தொழுகக் கைவழியே
சங்கொழுகக் காமன் எய்த
புண்வழியே உயிரொழுக வரும்வழியே
பார்த்திருக்கும் பூவை யார்க்கே.

மேகங்களே! என் தேரைக் காட்டிலும் விரைந்து வான் வழியே செல்லும் நீங்கள், உலகமெங்கும் தன் புகழை நிலைபெறச் செய்து ஆளுகின்ற மகதேசவாணனுடைய மலைநாட்டின் வழியே

செல்ல நேர்ந்தால், ஆங்கு முத்துமுத்தாகக் கண்ணீர் சிந்தி ஒழுக, உடம்பு மெலிதலால் கைவளைகள் கழன்றுவிழ, மாரவேள் எய்த மலரம்புகளால் எய்திய மனப்புண்வழியே உயிர் ஒழுகுமாறு வருந்தி, யான் வரும் வழியைப் பார்த்துக் கொண்டே என் வரவிற்காக உயிர்தாங்கியிருக்கும் பூவை போலும் மொழியையுடைய என் தலைவியிடத்தே (யான் விரைந்து வந்துகொண்டிருக்கிறேன் என) ஒரு வார்த்தை விளம்பிச் செல்வீராக.

—*—

தோற்றுவாய்

இரவுக் குறியிடத்துத் தலைவியை எதிர்ப்பட்ட தலைவன் அவள் மனைக்காவல் நீங்கி வந்த அருமையையும், அதன் அழகையும், தன் ஆர்வம் தோன்றப் பாராட்டியது:

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

7. சொரிந்தாரப் பொருள்வழங்கும் இராம ராசத்
துன்முகிரா சன்வரையில் தோகை யன்னீர் !

தருந்தாயர் அறியாமற் பாதி நேரம்
தாமரைக்கோ யிலைத்திறந்து தனியே வந்தீர்

வருந்தாதோ திருமேனி ? இடைநோ காதோ ?
மணிச்சிலம்பு புலம்பாதோ ? வளையேங் காதோ ?

கருந்தாரை யளகாறு மலர்சிந் தாதோ ?
கன்றாதோ நும்பாத கமலந் தாமே. ?

கொள்வோர் உளம்நிறைய அவர் வேண்டிய பொருளை மழை போலச் சொரியும் வள்ளன்மையுடைய இராமராசத்துன் முகிராசன் மலைநாட்டில் வாழும் மயிலை ஒத்த சாயலையுடையீர்! உம்மைப்

புரந்து, காவல் புரியும் நற்றாயும், செவிலித்தாயும் அறியா வண்ணம், இந்த நள்ளிரவாகிய பாதிநேரத்திலே துணையின்றிச், செந்தாமரையாகிய உமது வீட்டைத்திறந்து கொண்டுவந்தீர்! இவ்வாறு வந்தால் உமது மெல்லிய இடைவருந்தாதோ? மாணிக்கப்பரலமைந்த காற் சிலம்பு ஒலிக்காதோ? கையிலணிந்துள்ளவளை ஒலிக்காதோ? மழைபோலும், கூந்தலில் அணிந்துள்ள முல்லை மலர்கள் சிந்தாவோ? மேலும்,. தாமரைமலர்போலும் மென்மையான பாதங்கள் கன்றிவிடாவோ? இவையெல்லாம் நிகழ வந்தவாறு வியப்பேயாம்.

—*—

### தோற்றுவாய்

மல்லையர் கோமான் வீதியுலா வருகிறான். அக் காட்சியைக் காணத்துடிக்கிறாள் ஒருமங்கை. அவளைச் செவிலியும், உடன் பிறந்த தங்கையும், தமக்கையும் அகத்தே இழுக்க, அவள் ஆசை புறத்தே இழுக்கத் தடுமாறுகின்ற அவள் நிலையைக் கண்டார் கூறியது :

### (எண்சீர் ஆசிரிய விருத்தம்)

8. ''மன்னுபுகழ்ப் பொன்னம்பலத் தொண்டை வேந்தன்
மல்லையர்கோ மான்பவனி வருவான் வந்தால்

இன்னுமவன் பவனியிற்செல் லாதே சென்றால்
இருகைவளை யுங்கலையும் இழப்பாய்'' என்றே

அன்னைபிடித் திழுக்கஅயல் இழுக்கத் தங்கை
அங்கையினைப் பிடித்திழுக்க அதுதா னன்றிப்

பின்னையுமோர் தமக்கைபிடித் திழுக்க ஆசைப்
பேய்இழுக்க ஒருத்திமனம் பேதித் தாளே.

"நிலைபெற்ற புகழையுடைய மல்லையர் கோமானாகிய பொன்னம்பலத் தொண்டைவேந்தன் பவனிவருவான், வந்தால் நீ காணச்செல்லாதே; மறுத்துச் சென்றாயாயின் உன்னிருகை வளையல்களையும், உடையையும் இழந்துவிடுவாய்" எனக்கூறிச் செவிலி மனையகத்தே இழுக்க, அதுகண்டு யாதுமறியாத அவள் தங்கை, கையைப் பிடித்திழுக்க, (அவ்வருத்தத்தினால் தலைவி தடுமாறும்போது) பெண்ணியல்பறியும் பருவத்தாளாய அவள் தமக்கையும் பிடித்திழுத்தாள். இவர்கட்கு எதிராக ஆசைப் பேயானது புறத்தே இழுக்க ஒரு தலைவி உள்ளம் பேதித்துச் சுழன்றாள். (இது மிகவருந்தத்தக்கதெனக் கண்டோர் கூறினர்.)

இவள் பேதைப் பருவத்தாளாய் இருந்தபோது அவன் பவனி வரக்கண்டு, இனந்தெரியாமல் மோகித்து மயங்கியவளாதலின், மங்கைப்பருவத்தாளாய இப்பொழுது கண்டால் என்படுமோ என அஞ்சிய செவிலி "இன்னுமவன் பவனியிற் செல்லாதே" என்றாள். பெண்மை எய்தாத தங்கை பிடித்திழுத்தது அறியாமையால் எனலாம்; பெண்மையுற்றுள்ள தமக்கையும் பிடித்திழுத்தமை வருந்தத்தக்க தெனக்கருதி "அதுதானன்றிப் பின்னையுமோர் தமக்கை பிடித்திழுக்க" என்றார். இதனால், மல்லையர்கோன் அழகும் ஆண்மையும் உணர்த்தப்பெற்றன.

—*—

## தோற்றுவாய்

இப்பாடல் கலம்பகத்துள் வரும் 'களி' என்னும் உறுப்பைச் சார்ந்தது. கட்குடியன் ஒருவன் கள்ளினைச் சிறப்பித்துச் சமத்கார மாகப் பேசுவது இதன் கருத்து இதனுள் பனைமரத்தைக் குரு வாகவும், அக்குரு எல்லாச் சாத்திரங்களையும், மந்திரங்களையும் பெற்றிருப்பதாகவும் கூறப்படுதல் காண்க.

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

9\. புலவருக்கு நிதியளிக்கும் து........ லான் மைந்தன்
புகழ்ச்சேறை வாழழகன் பொன்னி நாட்டிற்
பலர்வாழ்த்தும் பஞ்சமிநாள் பூசை பண்ணிப்
பனைகளையே குருக்களெனப் பகரு வோம்யாம்,
அலகின்மிக்க சாத்திரங்கள் நால்வே தங்கள்
ஆகமங்கள் புராணங்கள் அவைக ளெல்லாம்
இலைகளுக்குள் இருக்கவதன் இளம்பா ளைக்குள்
எழுதவொண்ணு மந்திரமொன் றிருக்கை யாலே.

புலவர்கட்கு வேண்டும் நிதியளித்து வாழும் 'தூயோன்' மைந்தன், சேற்றூரில் வாழும் புகழ்மிக்க 'அழகன்' என்னும் வள்ளலுக்குரிய பொன்னி நாட்டில், பலர் இறைவனை வாழ்த்தி வழிபடும் பஞ்சமி நாளில், நாங்கள் (கனியர்) பனைமரங்களையே குருவாகக் கொண்டு பூசைபண்ணி வழிபடுவோம். ஏனென்றால் அளவில்லாத சாத்திரங்கள், நால் வேதங்கள், ஆக மங்கள், புராணங்கள் எல்லாம் அதன் ஓலைக்குள் இருக்கின்றன. மேலும் அதன் இளம் பாளைக்குள்ளே எழுத ஒண்ணாத ஒப்பற்ற மந்திரங்கள் இருத்தலாலும் என்க.

நூல்கள் பனை ஓலைகளில் எழுதப்படுதலானும் பனங்கள்ளானது புலன்களை வெறியேறச் செய்து ஒரு முகப்படுத்தும் மயக்கத்தை (மந்திரங்கள்போல)த் தருதலானும் இவ்வாறு சமத்காரமாகக் கூறுகின்றான்.

—*—

## தோற்றுவாய்

இதுவும், கலம்பகத்தில் வரும் 'கொற்றியார்' என்னும் உறுப்பைச் சார்ந்தது. அஃதாவது வைணவக் கோலம் பூண்டு திருமண்சாத்தி மெய்ப்பாடு தோன்ற ஆடும் ஓர் ஆடுமகளைக் கண்டகாமுகன் ஒருவன், அவள்மேற் கொண்ட மையலால், குறிப்புப் பொருள்பட அவள் உறுப்பு நலன்களைப் பாடுவது. இதனுள் சீரங்கம், வைகுந்தம், திருப்பதி, திருஅனந்த(சயனம்) புரம் அத்திரகிரி என்னும் வைணவத் திருப்பதிகள் தொனியாய் வந்து சுவை பயக்கின்றன.

## (எண்சீர் ஆசிரிய விருத்தம்)

**10. சீரங்க முந்தங்கம் விழிவை குந்தம்**
**திருப்பதிநும் திருவதனம். திவ்ய தேசத்**
**தாருங்கும் பிடுமனந்த சயனம் அல்குல்**
**அத்திரகிரி சித்திரதன மாகை யாலே**
**பாரெங்கும் உமைப்பணியும் அரிவை நீரிப்**
**பதிதோறும் உழன்றதனாற் பயன் வேறுண்டோ**
**வாரங்கொள் புகழ்ச்சடையன் அடையார் சிங்கம்**
**வரந்திகழும் இருந்தைநகர் வருங்கொற் றீரே.**

பகைவராகிய களிறுகளுக்குச் சிங்கம் போன்றவனும், தன் குடிமக்களிடத்துப் பேரன்பு பூண்டவனுமாகிய புகழ்சான்ற சடையன் என்பானுடைய அருள் வளந்திகழும் இருந்தை நகரின் கண் வந்து திருமண் சாத்திக்கொண்டு ஆடும் கொற்றியீரே! உமது அழகு மிக்க மேனி தங்கமேயாம்; விழிகளோ கூரிய ஈட்டி களேயாம்; அழகிய முகமோ திருமகள் வாழுமிடமாகிய தாமரை யேயாம்; அல்குலோ திவ்யதேசத்தாரும் வந்து கும்பிடும் திருமால் பள்ளி கொள்ளுகின்ற அனந்தனாகிய நாகத்தின் படமேயாம்;

அழகிய தனங்களோ அத்திரமலையேயாம்; ஆகையால் இவ்வுலகம் எங்கும் உம்மையே பணியும் பேற்றினைப் பெற்றுள்ளீர். எனவே நீர் திருப்பதிதோறும் உழன்று திரிவதனால் வேறுபயனுண்டோ? [எம்போல்வாரை வருத்துதலே பயன்போலும் என்றான் என்க].

திருப்பதி = இலக்குமி உறையும் செந்தாமரை, அனந்தசயனம் என்பதை சயன அனந்தன் என மாற்றிப் பொருள் பொருந்தக் கொள்க.

—*—

தோற்றுவாய்

கல்லூர்ச் சிதம்பரநாதன் என்னும் வள்ளலின் கொடைச் சிறப்பைப் புகழ்ந்து பாடியது.

## (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

11. நிலத்தரசர் தமிழ்நாட்டில் மூவரசர்
ஒடுங்கியபின் நிமலர் வெள்ளிக்

குலத்தரசர் நின்னையன்றித் தமிழருமை
தனையறிந்து கொடுப்பா ருண்டோ?

வலத்தரசர் தென்னிலங்கை வடகடல்மேல்
கோதண்டம் வாங்குங் காலைச்

சலத்தரசன் வணங்குகல்லூர்ச் சிதம்பரநா
தா! அரசர் தம்பி ரானே!

வெற்றித் திருவையுடைய (அயோத்தி) அரசர், தென் இலங்கைக்கு வடக்கேயுள்ள கடல்மேல் (வெகுண்டு) தன் கோதண்டத்தை வளைத்தபோது, தன் தவறுக்கஞ்சிய வருணன் வணங்கிய பெருமையுடைய கல்லூரில் வாழும் சிதம்பரநாதா!

அரசர்களுக்கெல்லாம் தலைவனே! இந்நிலத்தரசராய தமிழ் நாட்டின் மூவரசரும் மறைந்த பின்னர், நிமலராம் வெள்ளிக் குலத்தரசனாய்த் தோன்றியுள்ள நின்னையன்றித் தமிழ்ப் (புலவோர்) அருமையறிந்து வழங்கும் வள்ளல் வேறு யாரேனும் உண்டோ? (இல்லை என்றபடி)

—*—

### தோற்றுவாய்

திருச்சேறையில் வாழ்ந்த 'சிவந்தெழுந்தான்' என்னும் வள்ளலின் பெருமையையும் ஆண்மை வண்மைகளையும், சிறப்பித்துப் பாடியது. இதனுள் சிவந்தான் என்னும் பெயர்க்குக் காரணம் கூறுவார் போல, அவன் பண்புகளை விளக்கியிருக்கும் நயம் சுவை பயக்கின்றது.

### (அறுசீர் ஆசிரிய விருத்தம்)

**12. மருவார் நிதியந் தினங்கொடுத்தும்,**
**வண்ணத் தமிழ்க்கேழ் அடிநடந்தும்,**

**அருவாம் பரனைப் பாவெடுத்தும்,**
**அடையா ருடையச் சினங்கொண்டும்,**

**தருவாம் விமலக் கரமலரும்,**
**சமவா னளந்த பதமலரும்,**

**திருவாய் மலரும், விழிமலரும்,**
**சிவந்தான் சேறைச் சிவந்தானே.**

பகைவரை வென்று திறையாகப் பெற்ற நிதிகளை எல்லாம் தன்னை நாடி வந்தோருக்குக் கொடுத்தலானும், வண்ணத் தமிழ் பரப்பும் புலவோரை மதிக்கும் பண்பு தோன்ற அவருடன் ஏழடி நடந்து சென்று வழியனுப்புதலானும் அருவாகி எங்கும்

நிறைந்துள்ள பரமனைப் போற்றிப் பாடுதலானும், பகைவர் புறங் கொடுத்தோடு மாறு வெகுண்டு நோக்குதலானும் முறையே, கற்பகத் தருவை ஒத்த குற்றமற்ற தன் கைம்மலரும், நிறைந்த வானத்தை அளந்த பாதமலரும், அழகிய வாய்மலரும், அழகிய கண்மலரும் சிவப்புற்றன. ஆதலின் சேறை நகர் வள்ளலாகிய பல்லவன் சிவந்தான் ஆயினன் (போலும்).

'திருவுடை மன்னரைக்காணின் திருமாலைக் கண்டேனே என்னும்' பெரியார் வாக்குக்கேற்ப; அரசர்களை மாயோன் என்று கொள்ளுதலால், 'சமவான் அளந்த பதமலர்' என்றார். "தரை வானளந்த" எனப் பாடங்கொண்டு உம்மைத் தொகையாக்கித் தரையையும் வானத்தையும் அளந்த பாதம் எனக்கொள்ளுதல் சிறப்புடைத்தாம்.

—*—

தோற்றுவாய்

வாழ்விப்போரைக் காணமல் அல்லலுற்ற ஒரு பாணன் கலையின் பயனாகிய இறைவனை யடைதலை விட்டுப் பொய்வாழ்வை நச்சி வீணாகியதை நினைந்து வருந்திக் கூறியது,

(எண்சீர் ஆசிரிய விருத்தம்)

13. பெருமலைக்குந் தென்மலைக்கும் நடுக், கன் றுப்பூர்ப்
பித்த, ஞெரு தமிழனெனப் பேரு பெற்றும்,

உருமலைக்கும் பழந்துகிலும், புது........... னெற்........
ஊர்தியின்றிக் கால்நடையும் உடையேம்; கச்சித்

திருமலைக்கொ ழுந்தையடைந் துய்ந்தோ மில்லைத்,
தினகரனைக் கண்டி[ன்பம் சேர்ந்] தோமில்லைக்,

**கருமலைக்கும் நடுதறியை நட்டு, மாடு**
**கட்டினோ மிலை, நல்ல கலைகற் றோமே.**

பெருமலைக்கும், தென்மலைக்கும் இடையே உள்ள கன்றுப்பூர் என்னும் ஊரில் வாழும் பித்தனாகிய யாம், 'தமிழ் நூற்றிறம் அறிந்தவன்' எனப்பேர் பெற்றிருந்தும் பயன் என்னை? உரு மலைக்கும் பழந்துகிலும், (உண்ண உணவும்) இன்றி, ஏறிச்செல்ல ஊர்தி இன்றி கால்நடையே உடையேமாக உள்ளேம்; கச்சியில் வாழும் திருமலைக்கொழுந்தை யடைந்து உய்ந்தோமில்லை; தினகரனைக் கண்டின்பம் சேர்ந்தோமில்லை. (அவை நிற்க,) இனிப் பிறவாமல் கருவை மலைக்கச் செய்யும் கந்தழியாகிய இறைவனை உள்ளத்தே நிறுத்தி, பசுவாகிய உயிரை அதனோடு கட்டினோ மில்லை, பயனில்லாக் கலைகளைக் கற்றோமே; என்னபயன்?

[இப்பாடல் இடையே சிதைந்துள்ளமையின் தெளிவாகப் பொருள் விளக்கவில்லை]. பித்தன் என்பது இப்புலவர் பெயராகலாம், திருமலைக்கொழுந்து, தினகரன் இவ்விருவரும் வள்ளல்கள் போலும்.

—*—

தோற்றுவாய்

செங்கதிர்ச் செல்வன் என்பானின் மகனாகிய ஒரு வள்ளலை, வீரபத்திரக் கடவுளோடு வைத்து, வேற்றுமையணியும், பிரிமொழிச் சிலேடையணியும் தோன்றப், பாணன் ஒருவன் புகழ்வது.

[அறுசீர் ஆசிரிய விருத்தம்]

**14. வெள்ளமுடிச் சிவனிடத்தும், செங்கதிர்ச்செல்**
**வன்னிடத்தும், வீரர் யாரும்**

தள்ளரிய வில்லேயிடங் கொண்டிருவர்
தோன்றினர், தம் தகவைப் பாரீர்!
உள்ளசினத் தொருவீரன் மகஞ்சிதைத்துப்
புலவரையும் ஒழியச் செய்தான்
வள்ளலெங்க ளொருவன்நம் மகங்களேயும்
புலவரையும் வாழ்வித் தானே.

கங்கையை முடியிலே கொண்டிலங்கும் சிவபெருமானிடத்தும், செங்கதிர்ச் செல்வனிடத்தும், வீரர் யாரும் தள்ளுதற்கரிய வில்லே இடமாகக் கொண்டு இருவர் தோன்றினர். இனி அவர் தம் தகவினைப் பாருங்கள்; சிவனிடத்தே தோன்றிய ஒருவன் (வீரபத்திரன்) தக்கன் செய்த யாகத்தைச் சிதைத்து, (அதற்குத் துணை நின்ற) தேவர்களேத் தோற்றொழியுமாறு செய்தான். இனி மற்றொருவனுகிய எங்கள் வள்ளல் நம்முடைய உள்ளத்தையும் (இல்லத்தையும்) கல்வி நலஞ்சான்ற புலவர்களேயும் வாழச் செய்தான்.

இதனுள் வரும் வள்ளல் செங்கதிர்ச் செல்வன் என்பானுடைய மகனுக இருக்கலாம் என்பது அடுத்த செய்யுளால் ஊகிக்கலாம்.

—*—

தோற்றுவாய்

வில்லேயம்பதி 'செங்கதிர்ச் செல்வன்' என்னும் வள்ளலின் செல்வம், கொடை, நீதி, ஆற்றல் இவற்றைச் சிறப்பித்து வேற்றுமையணி நயம்படப் பாடியது.

[அறுசீர் விருத்தம்]

15. தண்ணளிற்செங் குவளேபுனே யரியான், கன்
னனே, மனுவைத் தருமக் கூற்றை

எண்ணிற்செம் பொருள்ஈகை நீதிபகை
 யையடலில் வென்ரு னென்றே
மண்ணிற்செங் கதிர்ச்செல்வன் வில்லேக்கண்
 நிலேபெற்று வாழ்ந்தான் பெற்ற
விண்ணிற்செங் கதிர்ச்செல்வன் நிலேபெரு
 துழன்றுடலம் வெதும்பிஞனே.

குளிர்ச்சி பொருந்திய குவளே மலர்மாலே யணிந்திருக்கும் திருமாலேயும், கருணேயும், மனுவையும், தரும தேவஞகிய எமனேயும், முறையே செம்பொருள், கொடை, நீதி, வெற்றி இவைகளால் வென்ற சிறப்பிஞலன்ரே, வில்லேயம்பதியிலே, செங்கதிர்ச் செல்வஞகிய வள்ளல் நிலேபெற்று வாழ்கின்ருன். அவ்வாற்றலில்லாமல் விண்ணில் உள்ள செங்கதிர்ச் செல்வன் ஓரிடத்தில் நிலேபெருமல் அலேவதோடு, உடலும் வெதும்பி யுள்ளான். (கதிரவனுடைய செலவையும் வெப்பத்தையும் சமத்காரமாக இவ்வாறு கூறப்பட்ட நயம் மகிழ்தற்குரியது.)

—★—

தோற்றுவாய்

தலேவனேப் பிரிந்துள்ள தலேவி, மாலேப்போதில் எழும் திங்களேக் கண்டால் பிரிவாற்ருது வருந்துவாள் எனத் தோழி கூறும் அகத்துறைப்பாடல் — இதனுள் பாட்டுடைத் தலேவன் வள்ளன்மை சிறப்பிக்கப் பெறுகிறது.

(எழுசீர் ஆசிரிய விருத்தம்)

16. நறுநுதல் பசந்து நலனழிந் ததற்கா
 நகுதல்போல் நாகிளந் திங்கள்
இறுவரை நிலவு கான்றெழின் தமியள்
 எங்ஙனம் ஆவிபெற் றுய்வாள்?

விறலுறு களிறு விழைதரு பொதிய
வெற்பினில் பிறந்தமுத் தமிழ்க்காச்
சிறுகண்மால் யானை உதவுதிம் மப்பா
சேறையம் பதிவரோ நயனே!

வெற்றி பொருந்திய யானைகள் விரும்பி வாழும் பொதியமலை யிடத்தே பிறந்த முத்தமிழின் பொருட்டு (அதனைப் பயின்ற புலவர்கட்கு)ச் சிறிய கண்களையுடைய பெரிய யானைகளைப் பரிசாகத் தரும்; சேறையம்பதியில் வரத்தால் தோன்றி விளங்கும் திம்மப்ப வள்ளலே! இத்தலைவியின் நல்ல நெற்றியானது பசலை பூத்து, அழகழிந்துள்ள நிலைகண்டு திங்களானது எள்ளிச் சிரிப்பது போல வானிடத்தில் நிலாவொளி வீசி எழுமானால், இவள் எவ்வாறு உயிரோடு பிழைத்திருப்பாள்?



தோற்றுவாய்

விரகத்தால் வருந்தும் தலைவி, மேனிபசலைபூத்து மெலிந்து வருந்துவதனைக் கண்டு, தோழி இரங்கிக் கூறும் அகத்துறைப் பாடல். இதனுள் பொன்விளைந்த களத்தூரில் விளங்கிய அழகன் என்னும் வள்ளல் சிறப்பிக்கப் பெறுகிறான்.

## (எண்சீர் ஆசிரிய விருத்தம்)

17. மாற்றலர்க்குப் பொற்பதமும் பசும்பொன் நாடும்
மரபுடைய கொடிக்கொருபொன் மலையும் ஈந்து
ஏற்றகைக்குப் பொன்ம(கிழ்ந்து,த) னைமோ கித்த
இளமுலைக்குப் பொன்னிறமும் ஈவ தேயோ?
தேற்றுமொரு தன்னதுமார் பகல மெல்லாம்
செம்பொன்சிங் காதனத்தில் (விளங்கச்) செய்தான்
போற்றுமம ராபதிசேய் அழகன் தன்னூர்
பொன்விளைந்த களத்தையெனப் புதுக்கினனே.

அஞ்சி அடைக்கலம் புகுந்த பகைவர்க்குத் தன் திருவடிகளை யும், அஞ்சாது எதிர்த்தவருக்குத் தேவலோகத்தையும், தன்குல மரபாக விளங்கும் (புலிக்) கொடிக்கு பொன்மலையையும் (இமயம்) ஈந்து, இரந்து வரும் இரவலர்களுக்குப் பொன்னும் பொருளும் தந்து மகிழும் அவன், தன்னை விரும்பி ஏங்கும் இவ் இளைய மங்கைக்குப் பொன்னிறத்தை (மேனியில் விளங்கும் பசலை நிறம்) அளிக்கலாமோ? பரந்த தன் மார்பகலம் முழுவதையும் திருமகள் விளங்கும் சிங்காதனமாகத் திகழச் செய்தவன், தேவேந்திரனை ஒத்த அழகனுகிய வள்ளல், தன்னூரையும் பொன்விளைந்த களத்தூர் என்று கூறும்படிப் புதுமை செய்கின்றான். என்ன வியப்பு! (இங்கே ஊர் என்பது அவனை விரும்பும் பெண்டிரை)



தோற்றுவாய்

புலவோர் பசியாவண்ணம் சோறளித்துப் புரக்கும் 'வேங்கட நாதன்' என்னும் வள்ளலைச் சிறப்பித்துப் பாடியது.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

18. கொந்தளிக்கும் இராசப்பன் குலத்தினுக்கு
முதல்வ! முளைக் கொள்ளு கின்ற
வித்தளிக்கும் புகழ்படைத்த வேங்கடநா
தா! வொன்று விளம்பக் கேளாய்!
தத்தளிக்கும் புலவோரைப் பசிவருத்தா
வண்ணம்நீ தாங்கல் நன்றே;
மத்தளிக்கும் புலவருக்கும் மதுரமொழி
சோற்றிலன்றி வந்தி டாதே?

சுற்றத்தைப் பேணி வளர்க்கும் 'இராசப்பன்' குலத்திற்கு ஒப்பற்ற தலைவனே! விளைந்தோங்குகின்ற விதையைப் போலக் குலம் விளங்கப் புகழ் படைத்துள்ள வேங்கடநாத வள்ளலே!

வறுமையால் தடுமாறும் புலவர்களைப் பசிப்பிணி வருத்தாமல் நீ தாங்குதல் மிகச் சிறப்புடைய செயலாகும். மற்று நீ அளிக்கும் அப்புலவர்கட்கு, இனிய செய்யுள், உன் சோற்றுல் அல்லாமல் வாராது போலும்?



தோற்றுவாய்

இது 'கூடல் இழைத்தல்' என்னும் அகத்துறையைச் சார்ந்த பாடல்.

[கலித்துறை]

**19.** **வேற்றுக் கூடலார் திறையிட உறையிடும் வேலான்**
**ஏற்றுக் கூடலில் இராக்குதன் மார்புமென் றனமும்**
**நேற்றுக் கூடலில் நெருங்கிய கரங்களுக் கின்று**
**கீற்றுக் கூடலே கிடைப்பதிங் குரைசெயாய் கிளியே!**

கிளியே! பகைவர் பணிந்து திறையிட்ட பின்னர், தன் வாளை உறையிலிடும் வேற்படை மன்னனை ஏற்றுக் கூடல் மாநகரில் நேற்று இராக்காலத்தில், அவன் தன் மார்பும் என் தனமும் கூடுதற்காக, நெருங்கிய என் கைகளுக்கு இன்று, தரையிலே கீறும், கீற்றுக் கூடலா கிடைப்பது? சொல்வாய்.



தோற்றுவாய்

போர் மறவர் குலப்பெண்ணை மணக்க விரும்பிய ஓர் அரசன் அனுப்பிய தூதனிடத்தில் ஒரு மறவன் மறுத்துத் தன் குலச் சிறப்பை வீரம் தோன்றக் கூறியது. இது கலம்பகத்தில் வரும் 'மறம்' என்னும் துறையைச் சேர்ந்தது. இதனுள் பிறைச் சந்திரனைத் தாங்கள் விட்ட வளைதடியெனச் சமத்காரமாகக் கூறுகிறுன் இம்மறவன்.

(எண்சீர் விருத்தம்)

20. மற்றெருவர் நிகரொவ்வா சயில பூபன்
வல்லைப்பா கைப்பொருப்பின் மறவர் முன்னே
புற்றரவின் முன்னெலிப்போல் நின்ற தூதா!
புரவலன்பெண் கேட்டகதை சொல்வ தென்னே?
வெற்றிபுனை இந்திரன்நம் பெண்ணைக் கேட்க,
விண்ணதிர அவன்மேலே வெகுண்ட நாங்கள்
சுற்றிவிடும் வெள்ளிவளை தடியை யன்றோ
தொல்லுலகோர் பிறையென்று தொழுகின்றாரே.

மற்றொருவரும் ஒப்பில்லாத சயிலபூப வள்ளலின் வல்லைப் பாகை மலையில் வாழும் மறவராகிய எங்கள் முன்னே, புற்றரவின் முன் எலியைப்போல நிற்கின்ற தூதனே! உன்னுடைய அரசன், எங்கள் குலமகளை மணந்துகொள்ளக் கேட்கின்றான் என நீ கூறுங்கதை வியப்பேயாம். முன்பு ஒரு கால் தேவேந்திரன் எங்கள் பெண்ணைக் கேட்டான்; அதனால், அவன் வாழும் வானமே அதிரும்வண்ணம் வெகுண்டு, நாங்கள் சுழற்றி எறிந்த வெள்ளியாலாகிய வளைதடியைத்தான் உலகத்தார் 'பிறை' என்று கூறித் தொழுதுவருகின்றார்கள். அறிவாயாக.



தோற்றுவாய்

தலைவியைக்கூடி மகிழ்ந்த தலைவன் அந்நினைவை மறக்க இயலாதெனத் தன்னெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்த அகத் துறைப் பாடல்.

(அறுசீர் விருத்தம்)

21. படித்த கல்வியர்க் கருளிய
வேலையம் பதிவரு கச்சாலை
வடித்த செந்தமிழ்ப் பாவினோ
டேப்படி வல்லியை மறப்பேம்யாம்

பிடித்த கொங்கையும் கூடிய
 செங்கையும் பின்னிய திருத்தாளும்
கடித்த மென்சுரு ளுந்தன
 முற்றமும் கண்ணைவிட் டகலாவே!

நெஞ்சே! படித்த கல்வியாளர்க் கருளிப் போற்றும், கடல் சார்ந்த ஊராகிய கச்சாலையில் விளங்கும் வடித்த செந்தமிழ்ப் பாவினை ஒத்த கொடி போல்வாளை நாம் எப்படி மறப்போம்? பிடித்த தனங்களும், கூடியணைந்த கைகளும், பின்னிய கால்களும், கடித்த இதழும், தனமுற்றமும், கண்களைவிட்டு அகல மாட்டவே!

—o—

தோற்றுவாய்

தலைவியைப் பிரிந்து விரகத்தால் வருந்தும் தலைவன், கடற் சோலையைப் பார்த்துக் கூறுவது. இது 'காமமிக்க கழிபடர்கிளவி' என்னும் அகத்துறையைச் சார்ந்தது.

(அறுசீர் விருத்தம்)

22. மாறுபட் டுடைந்தார் போற்றும்
 மன்னர்கச் சாலை நாட்டிற்
சோறுபட் டுடையும் தாழைச்
 சூழல்காள் சொல்லக் கேண்(மின்)!
கூறுபட் டாடையல்குற்
 கொடியினைப் பிரிந்திவ் வாறு
வேறுபட் டிருப்பா யென்றே
 எழுதினர் விதியி னூரே.

பகைத்தெதிரிந்து தோற்றவர்கள் பாராட்டும் மன்னனுடைய 'கச்சாலை' என்னும் பதியில், மடல்முற்றி விரியும் தாழைக் கூட்டங்களே! கேளுங்கள். பிரமன் என்தலையில், 'அழகிய பட்டு ஆடையை உடுத்தும் கொடி போன்ற தலைவியை நீ பிரிந்து இவ்வாறு வருந்தி இருப்பாயாக' என்று எழுதிவிட்டான் போலும்?

—★—

### தோற்றுவாய்

நிலா எழும் மாலைப் போதில் பிரிவாற்றாத தலைவி கூறும் அகத்துறைப்பாடல்.

### [கலி விருத்தம்]

**23. காட்டிலே களிமது வுண்டு கைதையம்**
**தோட்டிலே பேட்டொடுந் துயிலுந் தும்பிகாள்!**
**வீட்டிலே தாயரை இருத்தி வெண்மதிக்**
**கோட்டிலே நெருப்பையும் கொளுத்தி னார்களே!**

மலர்க்கானிலே களிப்புத்தரும் தேனை உண்டு, தாழைமடல்களிலே பெட்டையொடு துயிலும் தும்பிகளே! வீட்டிலே (தீப் போலும் கடுஞ்சொல்லையுடைய) தாய்மார்களை வைத்து, வானிலே தோன்றும் வெண்பிறையின் வளைவில் நெருப்பை வைத்துக் கொளுத்தி விட்டார்களே! என்ன செய்வேன். [பிரிவால் வருந்துவோருக்குத்தாண்மதி நெருப்பாகச் சுடும் மரபு பற்றிக் கூறியது.]

—★—

### தோற்றுவாய்

தலைவனின் பிரிவால் உறக்கங்கொள்ளாத தலைவி வருந்திக் கூறியது.

### (கலி விருத்தம்)

**24. கருத்தெழுந் திரவெலாம் காமத் தீச்சுடப்**
**பொருத்தினும் இருவிழி பொருந்தக் காண்கிலேன்**
**வருத்திய தலைவரும் வன்னெஞ் சாயினர்**
**ஒருத்தரும் இல்லைஎன் உயிரும் நாணுமே.**

காமத்தீயானது வெகுண்டெழுந்து சுடுதலால், இறுகப் பொருத்தினும் என் பெரிய, இரு விழியிமைகளும் பொருந்தக் காணேம். தலைவரும் என்னை வருத்துதற் பொருட்டு, வலிய நெஞ்சையுடையவரானர். எனக்கோ வேறு துணை ஒருவரும் இல்லை. ஆதலால் என்னேடிருக்க, என் உயிரும் நாணமடைகின்றது. (உயிர்தங்காது எனக் கூறுகின்ருள்) என் செய்வேன்.

—★—

தோற்றுவாய்

'நீலப்பாடி' என்னும் ஊரைச் சிறப்பிக்கும் ஒருவன், பரதவப் பெண்ணெருத்தியின் அழகில் மயங்கிக் காமுற்றுக் கூறும், செய்தியைக் 'கைக்கிளை' என்னும் துறைநயம்படக் கூறியது.

(எண்சீர் சந்த விருத்தம்)

25. வீணைக் கைக்கிளை நாணக் செய்க்கயல்
விற்பார் இளமுலை ஒப்பா மேலது
காணத் தக்கது சூதென் றவர்வர
காலிற் கிண்கிணி ஒலிட் டெழுநகர்
மாணிக் கத்தினெ டாணிப் பொற்சுவர்
மாடக் கூடக பாடத் தாடகத்
தூணத் துத்தர் பார்ரத தோரண
சூலக் கோபுர நீலப் பாடியே.

"வீணையால் எழுப்பப்பெறும் 'கைக்கிளை' என்னும் பண்ணிசைநாணுமாறு, வயல்களிலே பிடித்த கயல் மீன்களைத் தெருவிலே விற்பவர் தம் இளைய தனங்களுக்கு ஒப்பாக ஒன்றி இருக்குமானல், அது 'வல்' என்னும் சூதாடு கருவியே ஒப்பென்று காணத்தக்கதாம்" என்று சொல்லும்படி வரும் இளமகளிர் கால்களிலே அணிந்துள்ள கிண்கிணி ஓசையானது, ஓலமிட்டு எழும் படியான நகரம் யாதெனின்; மாணிக்க மணிகளை ஆணிப்

பொன்னில் வைத்திழைத்து, பொன்னாலாகிய சுவர்களோடு எழும்பிய, மாட கூடங்கள் நிறைந்ததும், பொற் கதவுகளும் சிறந்த பொற்றூண்களும் வரிசையாகத் திகழும் தர்பார் மண்டபத்தையுடையதும் ரததோரணங்களோடு சூலம் நட்ட கோபுரத்தையுடையதுமான 'நீலப்பாடி' யேயாம்.



தோற்றுவாய்

'முனையர்கோன்' என்னும் மன்னனுக்குத் தோற்றுப் புறங் காட்டி ஓடிய ஒரு பாண்டியனை எள்ளிக் கூறியது.

(கலி விருத்தம்)

**26.** **வடித்தவேல் முனையேர்கோன் வழுதி மாணகர்**
**இடித்தபோ தெதிர்முது கிட்ட மீனவன்**
**வெடித்தவே லடவியை மிதித்த தாள், கடல்**
**குடித்ததே யாயினும் கொப்பு ளித்ததே.**

கூரிய வேற்படையை உடைய 'முனையர்கோன்' என்பான், பாண்டியனுடைய பெருநகரை முற்றுகையிட்டு இடித்தபோது, புறமுதுகிட்டு ஓடிய மீன் கொடியையுடைய பாண்டியன், வெப்பத்தால் வெடித்த வேலமுள் நிறைந்த காட்டினை மிதித்த அவன் கால்கள், முன்னொரு காலத்தில் பெருங்கடலைக் குடித்ததாயினும், இப்பொழுது கொப்புளித்துவிட்டன.

(வடிம்பலம்பநின்ற பாண்டியனையும்–உக்கிரகுமார பாண்டியன் கடல்சுவற வேலிட்டதையும் நினைந்து 'கடல் குடித்ததாயினும்' என்று கூறப்பட்டது.)



தோற்றுவாய்

ஒரு மடந்தைமேற் காமுற்ற தலைவன், தன் மையல் தோன்றக்கூறும் கைக்கிளைப்பாடல்: இதனுள் காமத்தை வெள்ள மாக உருவகம் செய்திருப்பது, நயமாக உளது.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

27. வழுத்தளவு பொன்கொடுக்கும் அரசன்மா
 ணிக்கமே! மழைக்குப் பூத்த
முழுத்தளவு போலும்நகை முத்தலைமேல்
 மங்கையே மொழியக் கேளாய்!
கழுத்தளவு வாயளவு கைகூப்பா
 மையல்வெள்ளங் கண்டு கண்டிங்
கெழுத்தளவென் றிருந்தவெனை கரைக்கிழுக்க
 நீர்க்கிழுக்கும் இதயந் தானே!

இரவலர்கள் வாழ்த்தும் அளவிற்குப் பொன்னை வாரி வழங்கும் அரசன் பெற்ற மாணிக்க மணியே! மாமழைக்காலத்தே பூத்த முழுமையான காட்டுமுல்லைமலர் போன்ற பற்களை உடையாய்! முத்துக்கள் நிறைந்த கடல் அலைமேல் விளங்கும் மங்கையாகிய திருமகளே! கேட்பாயாக. கழுத்தளவு என்றோ வாயளவு என்றோ கைகூப்பி, எழுந்த காம மயக்கமாகிய வெள்ளமென்று கண்டு கண்டு எழுத்தளவு என்றிருந்த என்னை, நான் கரைக்கு இழுக்க, இதயம் அந்த வெள்ளத்திற்கே இழுக்கின்றது. இது என்ன விந்தை?



தோற்றுவாய்

'மாயப் பரத்தையர் வலையின் விழாமல், உன் திருவடிகளைக் காட்டி என்னைத் தடுத்தாள வேண்டுமெனத் திருமாலை வேண்டியது.

{எண்சீர் விருத்தம்}

28. பாடியிடுந் தமிழ்ச்சுவையொன் றறியார் சீனப்
பன்றிகள்போல் தொந்திவிட்டுப் பரத்தைமார்க்குத்
தேடியிடும் பிள்ளைகளாய்த் திரிவார் அந்தச்
சீர்கேடர் வாசல்வழிச் செல்லா தாளீர்!
நாடியிடும் பகைத்தொலைத்தோன் முன்றோன் பின்றோன்
நகுலசகா தேவருய்ய நன்றா றுன்னம்
வாடிவிடப் பூபாரந் தீர்த்த மாலே!
வண்டுவரைப் பதிவாழும் மன்ன ரேறே!

தேடிச்சென்று இடும்பாசுரனைவென்று தொலைத்த வீமனும், அவன் முன்றோனாகிய தருமனும், பின்றோனாகிய அருச்சுனனும், நகுலசகாதேவர்களும் ஆகிய ஐவர் உய்யுமாறும், அவர்தம் பகைவர்களாகிய (கௌரவர்) துரியோதனாதிகள் வாடி ஒழியுமாறும், பூபாரந்தீர்த்தருளிய திருமாலே! வளம்பொருந்திய துவாரகைப் பதியில் வாழும் மன்னர் ஏறே! உன்னைப்பாடி மகிழும் தமிழ்ச்சுவை சிறிதும் அறியாராய்ச் சீனப்பன்றிகள் போல் தொந்தியைப் பெருக்கிப் பரத்தைமார்களுக்கே தேடியிடும் வீணர்களாய்த் திரிவார் பலர். அந்தச் சீர்கேடர் வாசல்வழிக்குச் செல்லாமல் என்னைத் தடுத்தாள்வீராக!



தோற்றுவாய்

"அறிவற்ற, அழியும் மானுடரைப் பாடி நெஞ்சு புண்ணுறாமல், கோனேரியில் எழுந்தருளியிருக்கும் மாணிக்கவல்லியம்மையைப்பாடி உய்யுங்கள்" எனப்புலவர்களை ஆற்றுப் படுத்தியது.

{எண்சீர் விருத்தம்}

29. நெற்கனியும் கருப்பலரும் போலே வீணே
நிற்கின்ற மடவோர்க்கு நெஞ்சு புண்ணாய்ச்

**சொற்கனியும் பொருட்பாலும் கலந்த செய்யுட்**
**சுவையுரைத்துத் திரிபுலவீர்! சொல்லக் கேளீர்!**
**பொற்கனியும் மணியலகும் பழுத்துப் பூத்த**
**பூங்காவைக் கோனேரிப் புகழின் வாழ்வை**
**வற்கனியும் இளமுலைப்பெண் ணமுதை எங்கள்**
**மாசனமா ணிக்கமுத்தை வாழ்த்து வீரே!**

நெற்கனியாகிய பதரைப் போலவும், கரும்பினது வெண்மையான பூவைப்போலவும், அறிவும், ஒழுக்கமும் இன்றி, பேதையராய்க் கிடக்கும் மடவோரிடத்தே சென்று, சொற்களாகிய கனியும் கருத்துக்களாகிய பாலும் கலந்த சிறந்த தமிழ்ச் செய்யுளின் சுவையை வீணே உரைத்து, (அவர் உணராமையின்) நெஞ்சு புண்ணாகித் திரியும் புலவர்களே! பொன்னாகிய கனிகளும் மணியாகிய மலர்களும், பழுத்துப்பூத்து விளங்கும் பூங்காவாகிய தெய்வத்தை, கோனேரியில் புகழோடு விளங்கும் இறைவியை, சூதாடு கருவி போலும் இளைய தனங்களையுடைய பெண்ணமுதத்தை, மாசன மாணிக்க முத்தினை வாழ்த்திப் பாடி உய்வீராக!

—o—

தோற்றுவாய்

கோனேரி மாணிக்கவல்லியம்மையின் புருவ நடுவில் விளங்கும் திலகச்சிறப்பைக் கூறுவது இப்பாட்டு.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

**30. பிறக்கின்ற செனனமெல்லாம் நான்செய்த**
**பிழையையிவன் பேதை யென்றே**
**மறக்கின்ற பெண்ணமுது மாசனமா**
**ணிக்கமுக வல்லி தன்னிற்**

**சிறக்கின்ற புருவமுமப் புருவநடு**
**விட்டிருக்குந் திலகந் தானும்**
**பறக்கின்ற சிறகுமந்தச் சிறகுடைய**
**வண்டுமெனப் பகரலாமே.**

பிறக்கின்ற சென்மங்கள்தோறும் யான் செய்யும் பாவங்களை எல்லாம், 'இவன்பேதை' எனப்பொறுத்து மறந்து எனக்கருளும் பெண்ணமுதமாகிய மாணிக்க வல்லியம்மையின் திருமுகத்தில் சிறந்து விளங்கும் புருவங்களையும், அவற்றின் நடுவே ஓங்கி விளங்கும் திலகத்தையும், முறையே பறக்கும் இரு சிறகுகளென்றும், வண்டு என்றும் கூறி மகிழலாம்.

—o—

### தோற்றுவாய்

பால்விற்றுவரும் முல்லைநிலப் பெண்ணொருத்திபால் வேட்கையுற்ற ஒரு காமுகன், கைக்கிளை வகையாற் கூறும் இது, 'இடைச்சியார்' என்னும் கலம்பக உறுப்பைச் சார்ந்தது. இதனுள் பின் இரண்டடிகளில் சிலேடை நயம் அமைந்துள்ளது.

### (எண்சீர் விருத்தம்)

**31. நாலாநாற் கலைநிபுணன் முதலி மைந்தன்**
**நற்சேறை வாழுமெங்கள் நாயன் நாட்டிற்**
**சேலாடக் குழையாட விலைப்பால் கொண்டு**
**தெருவிற்பால் கூறுஞ்சிற் றிடைச்சி யாரே!**
**பாலான விலைப்பாலை அப்பால் வில்லும்**
**பண்பாலே கலசமிரண் டென்பால் வைத்து**
**மேலாடை தனைநீக்கித் தோய வாரும்**
**வேணும்மோர் உள்ளுறையை விரும்பு வீரே!**

பதினறு (அறுபத்துநான்கு) கலைகளையும் உணர்ந்த திறமுடைய முதலிமைந்தனுகிய வள்ளல்நாயகன் வாழும் எங்கள் சேறைநாட்டில், (விழிகளாகிய) சேல்கள் ஆடக் (காதணிகளாகிய) குழைகளாட அசைந்து, தெருக்களிலே விலைக்குப் பால் கொண்டு வந்து விற்கும் இளைய இடைச்சியாரே! (சிறிய இடையை உடையவளே என்பது நயம்) பாலான விலைப்பாலை அப்புறம் விற்கலாம்; முதற்கண் நும்பால் உள்ள இரண்டுபாற்குடத்தையும் பண்போடு என்னிடம் வைத்து, (காய்ச்சிய பாலிற் படர்ந்துள்ள) மேலாடையை ஒதுக்கித்(தயிர் உண்டாகப்புரை) தோயவாரும். ஏனெனில் எனக்கு 'மோர்' வேண்டும். நீங்களோ உள்ளுறையும் தயிரை விரும்புவீர்கள் ஆதலின். (உங்கள் தனங்களையான் கொள்ளக் கொடுத்து ஆடைகளைந்து என் அகத்தில் கலந்து மகிழ வருவீர் என்பது சிலேடைப் பொருள்.)

—o—

### தோற்றுவாய்

கள்ளுண்போர், 'நாங்கள் மயங்கமாட்டோம்' எனக் கூறிக் கொண்டே மயங்கிப் பேசும் இயல்பை விளக்கும். இது 'களி' என்னும் கலம்பக உறுப்பைச் சேர்ந்தது. இத்துறையில் சொற் குறிப்பாலும் சிலேடையாலும் கருத்துக்கள் அமையப்பாடுவது மரபு. அம்மரபு நயம் மிக்க பாடல் இது.

### (எண்சீர் விருத்தம்)

**32. தேமதுரக் கவிவிரகன் தெவ்வைவரு பிரமன்**
**செல்வன்சங் கரதரனைத் தினம்வணங்கு களியேம்**
**யாமதுவுண் டாலுமதற் கடிமையிலேம் சிலர்போல்**
**எமைமயக்கு மோ? மயக்கா தினியியம்பக் கேளீர்!**
**வீமன்மகன் அகத்தியனே குபேரன் மகன் புதனே**
**வீருனை முகனெருவன் விரும்புமகன் குகனே**
**காமன்மகன் சயந்தனேயவ் வேதன்மகன் சிவனே**
**காலன்பாற் பிறந்தமகன் கடல்கடந்துளானே!**

தேன் போலும் இனிய கவிதைகளை விரும்பும் 'தெவ்வை' எனும் ஊரில் விளங்கும். 'பிரமன்' என்பானுடைய மகனாகிய சங்கரதரனை, நாள்தொறும் வணங்கி மகிழும் கட்குடியராகிய நாங்கள், மதுவை உண்டாலும் அதற்கு அடிமையாக மாட்டோம் பிற குடியரைப் போல, எம்மை அந்தக்கள் மயக்காது என்பதனை யாம் கூறும் மொழிகளால் தெரிந்துகொள்வீர்களாக! வீமனுக்கு மகன் அகத்தியன், குபேரனுக்கு மகன் புதன், வீருனை முகனுக்கு மகன் குகன், காமனுக்கு மகன் சயந்தன், வேதனுக்கு மகன் சிவன், காலனுக்குப் பிறந்த மகன் கடலைக்கடந்துள்ள அநுமன் ஆவான்.

வீமன்—வீ + மன் = தாமரை மலரில் நிலைப்பெற்றிருக்கும் பிரமன். குபேரன்—கு + பேரன் = களங்கமுள்ள உடம்பை உடையவன், சந்திரன். வீருனைமுகன் — வீறு + ஆன் + ஐம்முகன் = இடபவாகனத்தை உடைய ஐந்து முகங்களையுடைய சிவ பெருமான். காமன் — கா + மன் = கற்பகச்சோலைகளுக்கரசன் இந்திரன். வேதன் மகன் — வேய் + தன் + மகன் = மூங்கில் அடியில் பிறந்த மகன். திருநெல்வேலியில் மூங்கில் அடியில் தோன்றியவர்; 'நெல்லையப்பர்' என்னும் சிவபெருமான். காலன் (கால் = காற்று) = வாயுதேவன். இவ்வாறு சொற்பிரிப்பு முறையால் பொருள் பொருந்தி நிற்கும் நயம் மகிழ்தற்குரியது.

—o—

தோற்றுவாய்

கற்றவரைப் போல நடிக்கும் நிரம்பாத கல்வியுடையாரை எள்ளும் வகையில் அமைந்துளது இப்பாடல்.

{கலி விருத்தம்}

**33. கனம்பயி லுணர்விலார் புலமை காணுநீர்**
**மனம்பயில் புன்மையோர் மருண்டு நீங்குதல்**
**புனம்பயில் புல்லுரு வெருவிப் பூம்பொழில்**
**இனம்பயில் பறவைகள் இரிதல் போலுமே.**

பெருமைமிகப் பயின்று கற்கும் உணர்வில்லாதவரைக் காணும் நீங்கள், நீரைப்போன்ற சலன மனம் படைத்த மெலிவினோராய் மருண்டு நீங்குதல் எதனை ஒக்குமென்றால் – கொல்லையில் வைக் கோலால் செய்து வைக்கப்பெற்ற புல்லுருவைக் கண்டு அஞ்சிப் பறவையினங்கள் விரைந்தோடிச் செல்லுதலை ஒக்கும்.

—★—

தோற்றுவாய்

ஊழால் இம்மை இன்பம் அடைய இயலாத வறுமையாளன் ஒருவன், மறுமை இன்பம் பெறுதற்கும் முயலாமல் இருமையும் இழந்த நிலையை எண்ணி வருந்திக் கூறியது.

(எண்சீர் விருத்தம்)

34. பெருவகையாம் பரபோக வீட்டை எய்திப்
பரமுணர்ந்திங் கிருள்தீரப் பெற்றோ மில்லை
ஒருவகையாற் பட்டதுபட் டுலக வாழ்வில்
உண்டுடுத்துப் பூசிமுடித் துற்றார் சூழ
மருவகையார் குழல்மடவார் தம்மோ டின்ப
மலர்ப்பாயல் தனில்துயின்று மகிழ்ந்தோமில்லை
இருவகையும் இழந்துழல வானர் நம்மேல்
எழுதிவிட்ட விதிசுகத்தி லிருக்கத் தானே.

பெருமை பொருந்திய நிலையிலே பரம்பொருளை உணர்ந்து, அஞ்ஞான இருள் நீங்கி வீட்டின்பத்தினையும் யாம் அடையப் பெற்றோமில்லை. மற்று ஒரு வகையால் உலகில் தோன்றியுள்ள வாழ்விலே வயிறார உண்டு. உடலார உடுத்து, உளமகிழப் பூசுவனபூசி, மணம் பொருந்திய, மலர்சூடிய கூந்தலையுடைய மாதரோடு கூடி, இன்புமிகும் மலர்ப்படுக்கையிலே துயின்று மகிழ்வடையவும் இல்லை. எனவே, இரு வகையாலும் பெறும் இன்பங்களை இழந்து துன்புறுமாறு வானுலகத்தேவர் நம் தலைமேல் எழுதிவிட்டார் போலும். எழுதிவிட்ட பிரம்மதேவன் தானே சுகத்திலிருக்கட்டும்.

தோற்றுவாய்

திருக்கண்ணங்குடியில் எழுந்தருளியிருக்கும் திருமாலுக்குத் தம்பிச்சான் உவரிச்சான் என்னும் புலியூரிலே வாழ்ந்த பேரன்பர் நிகழ்த்திய பூசை, ஆராதனைச் சிறப்பை வியந்து பாடியது.

(எண்சீர் விருத்தம்)

**35. தடத்தலர்பூந் தேனூறும் புலியூர் வாழும்**
**தம்பிச்சா னுவரிச்சான் றனைப்போற் பூசை**
**நடத்தஅண்டம் புகுவயிறு நிரம்பும் இந்த**
**நாட்போல இவ்வனந்தம் நாளுண் டானால்**
**வடத்தரள முலைசுமந்து நாளும் நாளும்**
**வருந்துமிடை இடைச்சியர்கள் மனைக்கே வைத்த**
**குடத்தயிரும் நறும்பாலும் களவா டிப்போய்**
**குடிப்பாரோ திருக்கண்ணங் குடிநின் றாரே?**

குளங்களிலே மலரும் தாமரை மலர்கள் தேன் ஊற்றைப் பெருக்கும்படியான புலியூரிலே வாழும் 'தம்பிச்சான் உவரிச்சான்' என்னும் பெருமகனைப் போல் பூசைநடத்தினால், அண்டத்தையே விழுங்கும்படியாகப் பசித்த வயிறும் நிரம்பிவிடும். இந்தப் பூசை நாளைப்போல எல்லா நாட்களிலும் பூசை நிகழுமானால், முத்துமாலைகளை மார்பிலே சுமந்துவருந்தும், சிறிய இடையை உடைய இடைச்சியர்கள் வீட்டிலே, காத்து வைத்திருக்கும் குடத்தயிரையும், காய்ச்சிய பாலையும் திருடிச்சென்று குடிப்பாரோ திருக்கண்ணங்குடியிலே விளங்கும் திருமாலாகிய கண்ணபிரான்?

—*—

தோற்றுவாய்

சிவபெருமானின் போற்றலை வியந்து பழிப்பது போலப் புகழ்ந்து பாடியது.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

36. காலிற் பொதிந்த நகத்தாலும்
கையிற் கனங்கூர் நகத்தாலும்
சீலத் தரக்கன் உரங்கொண்டீர்!
திசைமா முகன்றன் சிரங்கொண்டீர்!
மேலைப் புரத்தை நகைத்தெரித்தீர்!
வில்வேள் புறத்தை விழித்தெரித்தீர்!
சூலப் படையேன் மழுப்படையேன்
சுமந்தீர்? அருணை யமர்ந்தீரே!

திருவருணை மலையில் விளங்கும் சிவபெருமானே! உமது காலில் இருக்கும் நகத்தாலும், கையில் விளங்கும் நகத்தாலும் முறையே இராவணனுடைய நெஞ்சுரத்தையும், நான்கு முகங்களையுடைய பிரம்மதேவனின் தலையையும் அழித்துக்கொண்டீர். மேலும் திரிபுரங்களைச் சிரிப்பாலே எரியச் செய்தீர். கரும்புவில்லை உடைய மன்மதனுடைய உடம்பை, விழியாலே எரியச் செய்தீர். இவ்வாறு பிற கருவியில்லாமலே வெற்றி புரியும் நீர், சூலப்படையினையும், மழுப்படையினையும் எதற்காகக் கையிலே ஏந்தியுள்ளீர்; விளக்கியருள்வீராக!

—*—

தோற்றுவாய்

வரைவிடைவைத்துப் பிரியும் தலைமகனைத் தோழி 'மறவேல்' என்றவழித் தலைவன் தலைவி மீது தன் காதல் தோன்றக் கூறுவது.

(அறுசீர் ஆசிரிய விருத்தம்)

37. வேணிப் பவளம் விரித்தாடும்
விமலர் புலிசைத் திருவனையீர்!
பூணிற் சிறந்த வண்முலையும்
புருவச் சிலையும் மறந்தாலும்

ஆணிக் கனகம் அழுத்தியபூ
ஆடை நெகிழ்க்கும் வேளைதனில்
நாணிக் கவிழ்ந்து நகைத்த நகை
நானோ மறக்க வல்லேனே?

பவளம்போலும் சடைமுடி விரித்தாடும் சிவபெருமான் விளங்கும் புலியூர் போலும் வளமுடையீர்! (இயற்கைப் புணர்ச்சிக் காலத்துத் தலைவி நாணிக்கண் புதைத்தபோது) என்னைக் கவர்ந்த பூணணிந்து சிறந்த தனங்களையும் சிலைபோல் வளைந்த புருவங்களையும், (மறக்க இயலுமா? மறவேன்) ஒருகால் மறப்பினும் (உடைபெயர்த்துடுத்தல் என்னும் மெய்ப்பாடு தோன்ற) பொன்னின் மீது மாணிக்கம் வைத்திழைத்து நெய்யப் பெற்ற பொலிவுடைய ஆடையை நெகிழவிடுங்கால் (வறிது நகை தோற்றலாக) நாணமுறக் கவிழ்ந்து நகைத்த புன்முறுவலின்பத்தை நான் மறக்கும் வலியுடையேனோ? இல்லை; மறவேன்.

—*—

தோற்றுவாய்

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, நிலவு வரும் மாலையம் பொழுது கண்டு விரகத்தால் நைந்து கூறியது.

(கலி விருத்தம்)

38. விரிந்தசெஞ் சடையர்நெல் வேலி நாட்டிலே
பிரிந்தவ ரெப்படிப் பிழைப்ப ரையகோ!
முரிந்ததெண் டிரையனல் முழுதும் வாரியே
சொரிந்துவெண் மதியெனத் தோற்றுங் கூற்றமே.

விரிந்த செஞ்சடையுடைய சிவபெருமான் விளங்கும் நெல்வேலி நாட்டிலே, தலைவனைப் பிரிந்து தனியேயிருக்கும் தலைவியர், எவ்வாறு உயிர்பிழைப்பார்? அந்தோ! யமனாகிய கூற்றம், வளைந்து வளைந்து வரும் தெளிந்த கடல் அலையாகிய

நெருப்பு முழுதையும் வாரி வெண்மையான 'நிலா' என்னும் பெயரோடு (வானில் எழுந்து) வெப்பமாகச் சொரிந்து தோற்று கின்றதே, என் செய்வது?

—*—

தோற்றுவாய்

வலஞ்சுழியில் இருக்கும் சிவபெருமானின் பிட்சாடன மூர்த்தியின்மேல் காதல்கொண்ட தலைவி ஒருத்தி, 'கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்' என்னும் துறையமையக் கூறுவது.

(எண்சீர் விருத்தம்)

39. கடஞ்சுழிக்கும் கரிமருப்பும் முத்தும் பொன்னும்
கார்முகிலும் சந்தனமும் கலந்து, பொன்னி
இடஞ்சுழிக்கும் வலஞ்சுழிக்குள் இருப்பீர்! ஐயம்
இடுவதுமக் கெப்படியோ? இரண்டு பாலும்
விடஞ்சுழிக்கும் அரவத்தை அணிவீர், முன்னே
விழிசுழிக்கும் பூதத்தை விடுவீர், ஆகம்
உடன்சுழிக்கும் தலையோட்டில் திரிப்பீர், மாதர்
உயிர்சுழிக்கும் படுமறுகில் உலவு வீரே.

மதநீர் பொங்கி எழும் யானைகளுடைய கொம்புகளையும், முத்துக்களையும், பொன்னையும், கரியமேகங்களையும், சந்தன மரங்களையும் கலந்து ஏந்திப் பாய்ந்துவரும் காவிரியானது, இடந்தொறும் சுழல் கொளச்சென்றுபாயும் திருவலஞ் சுழியில் வீற்றிருக்கும் சிவபெருமானே! இரந்துவருகின்ற உமக்குப் பெண்டிர் எவ்வாறு (அஞ்சாமல்) பிச்சையளிக்க இயலும். நீரோ நஞ்சினைக் கொப்புளிக்கும் நாகங்களை இருபக்கங்களிலும் அணிந்துள்ளீர். மேலும், உமக்கு முன்னே உருட்டி விழிக்கும் பூதங்களை விட்டுவருகின்றீர். இவை நிற்க, உடம்பெல்லாம் நடுங்கும்படியாக தலையோட்டில் உணவு உண்டு திரிக்கின்றீர் இவ்வாறிருக்கவும், பெண்டிர் உணர்வு முழுதும் உம்மையே வந்து சுற்றும்படித் தெருக்களில் பலி கேட்டு உலாவுகின்றீர். என் செய்வார்கள்?

தோற்றுவாய்

மதுரைச் சொக்கநாதர்மேல் மையலுற்ற தலைவியின் துயர் கண்ட தோழி இரங்கிக் கூறியது. இப்பாடலுள், சிவபெருமானைத் திருமாலோடும் - தலைவியோடும் ஒப்பிட்டுச் சிலேடை வகையால் அமைத்துள்ள நயம் சுவைத்தற்குரியது.

(பதினைன்குசீர் கழிநெடிலாசிரிய விருத்தம்)

40. அருகு நத்தமர் வைகை யாற்றிகழ்
சங்கம் வீசுகை யுடைமையால்,
ஆத ரித்திடு கூட லாலுயர்
ஆசை யம்பர மாகையால்,
இரவி னைப்பிரி யாமை யால்விடம்
அன்ன மாக இருத்தலால்,
இரதி வேள்பகை யாகை யாலுமை
இவளு மொத்தனள் அருள்செய்வீர்!
பரவை யின்கண் அடைந்து நாவலர்
பின்செ லப்புகழ் மேவியும்
பரசு பற்றியும் நாக மீதுப
யின்று மானிட மாகியும்
மருதி டைப்புக வுற்றும் அண்டர்ம
னங்க ளிக்கந டந்தும்நீள்
மாலு மாகிய சொக்க ரேதமிழ்
மதுரை மாநக ரீசரே!

(1-2:- சொக்கநாதருக்கு) கரையருகே நத்தைகள் விரும்பி உறையும்படியான வைகை நதியாலும், தமிழ்ச்சங்கம் வீசும் தமிழ் இனிமை உடைமையாலும், அடியார்க்கு அருளும் கூடல் மாநகராலும், திக்குகளை ஆடையாகக் கொண்டமையாலும், யாசித்தலை எப்பொழுதும் விலக்காமையாலும், ஆலகாலவிடமே உணவாகக் கொள்ளுகையாலும், மன்மதனைப் பகையாகக் கொண்டமையாலும், சிறந்து விளங்கும் உம்மை; (தலைவிக்குச் சிலேடைப் பொருள்)

பக்கங்களிலே சிறந்த சுற்றத்தார் பிரியாது இருத்தலாலும், உடல் மெலிவால் கைவளைகள் கழலுதலாலும், உன்னைக்கூடலாம் என்ற உயர்ந்த ஆசையானது வெறும் வெளியானதாலும், உறங்காமல் இராக்காலத்தைத் துணையாகப் பற்றியிருத்தலாலும், உணவை நஞ்சுபோல வெறுப்பதாலும், மன்மதனைத் தனக்குப் பகையாகக் கொண்டமையாலும், இவள் ஒத்திருக்கின்ருள். ஆதலின், அது கருதியாவது அருள் செய்வீராக!

(3-4:- திருமாலுக்கு) துயிலுதற்காகப் பாற்கடலையடைந்தும், நாவலராகிய திருமழிசையாழ்வார் பின் நடந்தும், 'பரசு' என்னும் ஆயுதத்தைப் பற்றி அவதரித்தும், 'காளிங்கன்' என்னும் நாகத்தின் மீது நடமாடியும், மானிடராக அவதரித்தும், மருத மரங்களிடையே புகுந்தும், தேவர்கள் மனம்மகிழ நடந்தும், சிறப்போடு விளங்கும் திருமாலே; (சிவபெருமானுக்குச் சிலேடை) பரவையாரிடத்துத் தூது சென்றும், நாவலராகிய திருநாவலூரர் பின்பற்றி வரச்சென்று புகழ் பெற்றும், அடியார் பரசும் பாசுரங் களைப் பெற்றும், நாகங்களை உடம்பில் அணிந்தும், மானை இடப் பக்கத்தே கொண்டும், 'இடைமருது' என்னும் ஊரிலே எழுந் தருளியும், தேவர் மனம்மகிழ நடமாடியும் விளங்குஞ் சிறப்பால் ஒத்திருக்கும் சொக்கநாதப் பெருமானே! தமிழ் வளரும் மதுரை மாநகர்க்கு இறைவனே! அருள் செய்வீராக!

(சிவபெருமானுக்கு:— அருகு நந்து அமர் வைகை, சங்கம் வீசுகை, பிறவெல்லாம் செம்மொழிச் சிலேடை.

தலைவிக்கு:— அருகு நம் தமர் வைகை, சங்கம் வீசு கை.,

திருமாலுக்கு:— மானிடமாகியும்

சிவனுக்கு:— மான் இடமாகியும், பிறவெல்லாம் செம்மொழிச் சிலேடை.)

—*—

தோற்றுவாய்

ஆரூர் இறைவன்பால் காதலுற்ற தலைவி பலியேற்றுவரும் அவ்-இறைவனோடு தான் நிகழ்த்திய உரையாடலைத் தோழிக்குக் கூறுவது. இதனுள் இரு பொருள்பட வரும் உரையாடல் சுவையாக உளது.

(எண்சீர் சந்த விருத்தம்)

41. அடல்கொண்டெழு சூலப்படை ஆரூர்ப்பெரு மான்சீர்
ஐயம்பகர்ந் தென்றன்மனை யகவாசலில் வந்தார்
கடுகும்படி பகரும்பலி கொண்டேயெதிர் சென்றேன்
கைவந்தன மென்றார்இரு கைவந்தனம் என்றேன்
மடவன்னமி தென்றாரவர் வல்லோதனம் என்றேன்
வல்லோதனம் என்றாரவர் கொடுவந்தன மென்றேன்
கொடுவந்தனம் என்றாரவர் கொள்ளும்என நின்றேன்
கொள்ளார்பலி சொல்லாரிவர் கோட்பாடெது தானே?

வெற்றியொடு விளங்கும் சூலப்படையை உடைய திருவாரூர் இறைவன், 'பிச்சை' எனப் பகர்ந்து என்னுடைய வீட்டகத்தே வந்தார். யானும் மிக விரைந்து அவர் கேட்கும் பலிப்பொருளை ஏந்தி எதிர்சென்றேன். அப்பொழுது, அவர் 'கைவந்தனம்' என்றார். யானும் இருகை குவித்து 'வந்தனம்' என்றேன். என் கையிலுள்ள சோற்றைக் கண்டு 'மட அன்னம் போலும்' என்றார். யான், அதனை மறுத்து 'நன்கு சமைத்த சோறு' என்றுணர்த்த 'வல்லோதனம்' என்றேன். அவரோ மீண்டும், 'வல்லோதனம்' என்றார். 'அதனையே கொண்டு வந்தேன்' என்று யான் கூற, உடனே 'கொடு வந்தனம்' என்றார். அவர் கொள்வார் என்ற கருத்திலே நான் நின்றேன். ஆனால், அவர் அதைக் கொள்ளவு மில்லை; மேலும் 'பலி கொடு' என்று சொல்லவும் இல்லை. அவர் கொண்ட கொள்கை எதுவாயிருக்கும். தோழீ! நீ சொல்வாயாக!

குறிப்புச்சொற்களின் பொருள்:— கைவந்தனம் = உன்பால் மையலுற்றுவந்தேம். மடவன்னம் இது = இளைய அன்னப் பறவையே நீயாவாய். வல்லோதனம்—வல்லோ + தனம் = உன் னிருதனங்களும் 'வல்' என்னும் சூதாடு கருவிகளோ! கொடு வந்தனம்—கொடு—உன்னைக்கொடு. வந்தனம்=பாராட்டுவேன்.



தோற்றுவாய்

ஒரு தலைவி, உமையொரு பாகத்திறைவன் திருவுருவைக் கருதி 'நீ காமனை வென்ருய் என்பது பொருந்தாது' எனச் சமத் காரமாகத் தன் மையல் தோன்றக் கூறுவது.

(பதினுன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

42. அய்ய நீர்பு ரங்கள் வென்ற தொக்கு மிக்க காலனுர்
அழிய வென்ற தொக்கு மவ்வ னைத்து
(மொக்கும் ஆமினும்
வெய்ய காம தகன ரென்ன விருது சொன்ன ஓசையால்
வெட்கி னேனு மக்கு மிந்த விருது சொல்ல ஏற்குமோ?
எய்ய வார்ச ரங்கள் பட்டு வெருவி யோடி யேனிலா(து)
ஏழை மேனி புக்கொ ளித்தும் இன்னும் மாரன் வருமெனச்
செய்ய மேனி பாதி யும்பு றப்ப டாத கமலைவாழ்
தியாக ராச ரேசி றந்த தென்றல் வாசல் அழகரே!

கமலாலயத்தில் வாழுகின்ற இறைவனே! தியாகராசரே! சிறந்த தென்றல்வீசும் வாயிலில் உள்ள அழகரே! நீர் திரிபுரங்களை வென்றது உண்மையெனல் பொருந்தும். இயமன் அஞ்சி ஓடியழிய வென்றதும் உண்மையெனல் பொருந்தும். மற்றவை யாவும் பொருந்தும். ஆனுல், 'கொடிய மன்மதனை எரித்தவர் இவர்' என்னும் விருது சொல்லி உம்மைப் புகழும் சொற்களைக் கேட்டு நான் நாணுகின்றேன். இந்த விருது உமக்குப் பொருந்துமோ? (பொருந்தாது; ஏனெனில்) அந்த மன்மதன் எய்யும்

மலரம்புகள் படுதலால் அஞ்சி, நில்லாமல் ஓடி உமாதேவியின் உடம்பிலே புகுந்து ஒளிந்துகொண்டீர். பின்னும், அந்த மாரன் வருவானோ என்று சிவந்த மேனியிற் பாதியையும் வெளியே தோற்றமாட்டாதிருக்கின்றீர்; ஆதலால்.

—O—

தோற்றுவாய்

*திருவீழிமிழலையில் விளங்கும் வீழிநாதன் மேற் காதல் கொண்ட ஒரு தலைவியின் கூற்று.*

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

**43. கன்று கொண்டு விளவெ றிந்த கண்ணர் பூசை செய்திடும்**
**கமல மாயி ரத்தி லொன்று காண வில்லு என்றுகண்**
**அன்று கொண்டு விட்ட ஆதி கடவு ளோடு பங்கு கொண்(டு)**
**அயலி ருந்து வாழ்ப வன்அ லங்கல் மாலை தருவனோ?**
**குன்று கொண்டு பந்த டித்து நீழ லைச்சு ளிந்துபோய்**
**குத்தி யம்பு ராசி யைக்கு டித்து வேழ மெட்டையும்**
**வென்று கொண்டு பிளிறு கின்ற களிறு நல்கி உலகெலாம்**
**விதர ணத்தை நிலைநி றுத்து மிழலை வீழி நாதனே!**

மலைக்குன்றுகளைத் (தன் துதிக்கையால்) எடுத்துப் பந்தாக அடித்தாடியும், தன் நிழலையே (பகை எனக்) கோபித்துச் சென்று குத்தியும், மேகக்கூட்டங்களைக் குடித்தும், எட்டுத்திசை யானைகளை வென்றி கொண்டும் பிளிறுகின்ற, உயர்ந்த யானையைக் கொடுத்து உலகமெங்கும் தன் விதரணையை நிலைநிறுத்தும் மிழலை வீழி நாதனே!

பசுவின் கன்றை எடுத்து விளாமரத்தை மோதி முரித்த கண்ணபிரான் பூசை செய்திடும்போது, ஆயிரத்துள் ஒரு தாமரை மலர் குறையக்கண்டு, அற்றை நாள், கண்ணன் தன் ஒருவிழி

மலரையே கொண்டருச்சிக்க அருள்புரிந்த சிவபெருமானேடு பங்குகொண்டு, அவர் அருகிலேயே வாழ்பவனுகிய சண்டீசக் கடவுள், இறைவனுடைய மாலையில் எனக்கும் ஒன்றைத் தருவானே? (தரமாட்டான்).

(விதரணை = விவேகம்)

—★—

தோற்றுவாய்

மதுரைச் சொக்கநாதர்மேல் மையலுற்ற ஒரு தலைவி கூற்று. இதனுள், வாடைக்காற்று, மலர்ப்பாயல், நிலா இவை பிற பெண்டிர்க்கு இன்பஞ்செய்யத் தனக்கு மட்டும் துன்பஞ்செய்தலை எண்ணித் 'தான் பெண்ணுகப் பிறந்ததனுல் உலகம் இரண்டு பட்டது போலும்' எனத் தலைவி கூறுதல் சுவையாக உளது.

(பதினுன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

44. காவி ரித்து றைப்ப டிந்து பொருநை யைக்க லக்கியே
கடைக்க ணங்கி கொண்டு கொற்கை கனல்
(கொளுத்தும் ஆனையான்
வாவு கோத்த மாவு கைத்து வஞ்சி வென்ற சுந்தரன்
மதுரை வீர கஞ்சு கன்வ ரைப்பி றந்த மாதரீர்!
பாவை யர்க்கு வாடை வேறெ னக்கு வேறு வாடையோ?
பாயல் மற்ற வர்க்கு வேறெ னக்கு வேறு பாயலோ?
யாவ ருக்கும் மதியம் வேறெ னக்கு வேறு மதியமோ?
யானொருத்தி பெண்பி றந்தி ரண்டு பட்ட துலகமே!

காவிரித்துறையிலே நீராடிப் பொருநையாற்றைக் கலக்கி, கண்கடையிலே நெருப்பைக்கொண்டு, கொற்கையிலே அனலைக் கொளுத்துகின்ற யானைப்படையை உடையான்; கலிவாளம் பூட்டப்பெற்ற பரிமாவைச் செலுத்திச்சென்று சேரர்க்குரிய வஞ்சிமா நகரத்தை வென்ற சுந்தரனுகிய 'மதுரை வீரகஞ்சுகன்' என்பவனுடைய மலையிலே பிறந்து விளங்கும் மாதர்களே!

உலகில் உள்ள பெண்டிருக்கெல்லாம் ஒருவாடை; எனக்கு மட்டும் வேறு வாடையோ? எல்லோர்க்கும் ஒரு பாயல்; எனக்கு மட்டும் வேருே? யாவருக்கும் மதி ஒன்று; எனக்கு மட்டும் வேருே? என்னவிந்தை! யான் ஒருத்தி பெண்ணுகப் பிறந்ததனுல், இவ்வுலகம் இரண்டு பட்டுவிட்டதே? [வாடை வெப்பஞ் செய்த லாலும், பாயல் உறக்கத்தைத் தாராமையாலும், மதி அனலை வீசுதலாலும், தனித்திருக்கும் தலைவி இவ்வாறு கூறுகின்ருள்].

வீரகஞ்சுகன் = வீரத்தையே மெய்ச்சட்டையாக உடையவன்



தோற்றுவாய்

பாண்டியன் பெற்ற இளங் குதலைச் சிறுவன்பால் விருப்பமுற்ற ஒரு பேதைப் பெண்ணின் தாய் கூறுவது. இது, 'பிள்ளைக் காதல்' என்னும் பாடாண் திணைவகையைச் சார்ந்தது.

(பதினன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

45. மலைந்த மன்னவர்கள் வானி லேறவடி
வாள்வி திர்த்தமுகில் சுந்தரன்
வாகை கொண்டபர ராச கேசரிதென்
மதுரை யங்குரிசில் பின்புபோய்

உலைந்து லைந்துவிளை யாடு கின்றஉனை
வந்தெ டுத்துரிய தாயர்பால்
உங்கள் அய்யரைய ழைத்து போகெனஉ
ரைத்த போதிவளொ டென்சொனய்?

அலைந்த லைந்துகவிழ் குழலு மக்குழலில்
அள்ளி யிட்டசிறு பூழியும்
அமுத மூறுகனி வாயு மந்தவமு
தருவி யாறெழுகு பண்டியும்

கலைந்த செம்பொன்வளை யும்ம சைந்திருக்கும்
கண்ணி மைப்படுபு றங்கையும்
கழன்று தொங்குமரை ஞாணு மாகவரு
காத லார்சிறிய கள்வனே!

போரிட்ட மன்னவர்கள் விண்ணுலகம் அடையும்படி கூரிய வாளைச் சுழற்றிவென்ற, மழைபோலும் கொடைத் தன்மையுடைய சுந்தரபாண்டியன், பரராச கேசரியாகிய, தென்மதுரை தலைவன் பின்னே சென்று உலைந்துலைந்து விளையாடுகின்ற உன்னை வந்து தூக்கி எடுத்து, உன் தாயாரிடத்தே 'உங்கள் செல்வக் குழந்தையை அழைத்துப்போருக' எனச் சொல்லிக் கொடுத்த போது, உன்னைத் தூக்கிய என் மகளாகிய சிறுமியிடத்து அலைந்து பரக்கின்ற சிறு கூந்தலும் அக்கூந்தல் மேல் அள்ளி இட்டு விளையாடிய சிறு புழுதியும், அமுதம் ஊறும் கொவ்வைக்கனி போன்ற வாயும், அந்த வாயமுதாகிய அருவியாறு ஒழுகும் வயிறும், கலைந்த செம்பொன்னலாகிய கைவளையும், அசைந்திருக்கும் கண்ணிமைப் படுகின்ற புறங்கையும், கழன்று தொங்குகின்ற அரைஞாணுமாக வந்து மகிழ்ச்சியைத்தரும் சிறிய கள்வனே! நீ என்ன சொன்னாய்? ஏனெனில் அவள் உன்னையே எண்ணி மயங்கி இருக்கின்றாள்.

—*—

தோற்றுவாய்

அந்திமாலைகண்டு தலைவனுடைய பிரிவாற்றாத தலைவியின் துயர்கண்டு தோழி கூறியது.

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

46. பாக சாதனகி ரீட கோடிபொடி
படவெ றிந்தகொடி மீனவன்
படவி லேறியெழு வாசி ஏறியெழு
பார்பு ரக்குமுகில் சுந்தரன்

தியாக தாருவென நாவ லர்க்குதவு
செங்கை யானரச ராகவன்
திசைதொ றும்தரள பணிகொ ழித்துவரு
திருவைகைத் துறையி லன்னமே!

மாக மேகருகு திங்களால், இளைய
தென்ற லால், முதிய அன்றிலால்,
வாடை யா, லவனி ஆடை யா லயல்சொல
வம்பி னல்மதனன் அம்பினல்

ஆக மேதுபடும் நெஞ்ச மேதுபடும்
ஆசை யேதுபடும் நிலையிலா
அமளி ஏதுபடும் நாணம் ஏதுபடும்
அந்தி மாலைபடும் நேரமே.

தேவேந்திரனுடைய கிரீடகோடி பொடியாகுமாறு வாள் வீசிய மீனக்கொடியை உடைய பாண்டியன், படகிலேறியும், ஏழு குதிரைகள் மீது ஏறியும், ஏழுலகத்தையும் காக்கும் முகில் போன்ற சோமசுந்தரக் கடவுள் தியாகதாருவென்று சொல்லும்படி நாவலர்க்கு உதவும் செங்கையான், அரசரை எல்லாம் வெல்லும் போர் வீரன் (அரசர் ராகவன் என்றும் ஆம்) ஆகிய இறைவன் விளங்கும், திசைஎங்கும் முத்தினையும், சங்கினையும் அலையால கொழித்துவரும் மேலான வையையாற்றின் துறையிலே வீற்றிருக்கின்ற அன்னப்பறவையே! திசை எல்லாம் வெம்மையால் கருகும்படி வரும் திங்களாலும், இளந்தென்றற் காற்றாலும், முதிய அன்றிற் பறவைகளாலும், வீசுகின்ற வாடைக்காற்றாலும் அவனிக்கு ஆடையாக விளங்கும் கடல் ஓசையாலும், அயலார் கூறும் அலராகிய புது மொழிகளாலும், மாரவேளுடைய மலர் அம்புகளாலும், இத்தலைவியின் உடம்பு என்னவாகுமோ? அவள் நெஞ்சம் எவ்வாருகுமோ? அவள் ஆசை என்படுமோ? உறக்கத்தைத்தாராத படுக்கை என்ன ஆகுமோ? கொண்ட நாணம் என்ன ஆகுமோ? மேலும், அந்திமாலை தோன்றும் பொழுதும் ஆயிற்று; என்செய்வேன்!

—★—

தோற்றுவாய்

மதுரை நாயகன்மீது மையலுற்ற ஒரு தலைவியின் வேட்கையைப் புலப்படுத்தித் தோழி கூறுவது. இதனுள், தலைவி விடும் கண்ணீர் முதலியவற்றை வெள்ளமாகக் கூறியிருப்பது சுவையாக உள்ளது.

{பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்}

47. சந்த னுடைவிம லைப்பி றந்ததமிழ்ச்
சங்கம் வீறிவளர் கூடலான்,
தாரு கொன்றுநிழல் சீறி நின்றுகழை
சாய்த்தெ றிந்தகளி யானையான்,
மந்த ராசலமெ டுத்து வாசுகிபி
ணித்து வாருதிக டைந்தமால்
வாகை வாகுபுனை சுந்த ரன், குவளை
மாலை வேட்டபின்ம டந்தைமீர்?
அந்தி மாலைதனில் வந்து போர்செயும
னங்க வேள்பகழி வெள்ளமோ?
ஆவி சோரமடம் நாண்வ ரம்பழிய
ஆசை கொண்டபெரு வெள்ளமோ?
இந்த வானிலவின் வெள்ள மோமகளிர்
ஏசு கின்றபெரு வெள்ளமோ?
இருகண் மாரிபொழி வெள்ள மோ?உலகில்
எந்த வெள்ளம்மிக ஆனதே?

சந்தனச் சோலை சூழ்ந்த பொதியமலையிலே பிறந்த தமிழ் விளங்கும் சங்கமானது சிறந்து வளரும் கூடல் மாநகரை யுடையான், கொடிப்படைகளைக் கொன்று (வெகுளி தீராமையால்) தன் நிழலையே சீறி நின்று கரும்புக் கூட்டத்தினை அழித்தெறிந்த, மதமிக்க யானைப்படையை உடையான், மந்தரமலையை எடுத்து வாசுகியை நாணாக்கிக் கடல்கடைந்த திருமாலை வென்று வாகு புனைந்த சோமசுந்தரக்கடவுள் ஆகிய அவ் இறைவனின், குவளை மலர் மாலையை விரும்பிய பின்னர் மடந்தையீர்! கதிரவன் மறையும் மாலைக் காலத்திலே வந்து போர் புரியும் அனங்க வேளின் அம்பு வெள்ளமோ? உயிர்சோரும்படி மடப்பமும் நாணமும் எல்லை கெட மிகுதியாக் கொண்ட ஆசை வெள்ளமோ? இந்த வானத்தின் நிலா வெள்ளமோ! அம்பல்மொழியும் பெண்டிரின் ஏச்சு மொழிகளின் வெள்ளமோ? அல்லது, உங்கள் இரு விழிகளிலும் பொழியும் கண்ணீர் வெள்ளமோ? உலகில் எந்த வெள்ளம் மிகுதியானது கூறுங்கள்!

## தோற்றுவாய்

தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவி, அவன் வரவு குறித்துக் கூடலிழைத்தும், அவன் குறித்த நாளைக் கோடிட்டு எண்ணியும் வருந்திய நிலையைக் கூறுவது. இப்பாடல் 'கூடல் இழைத்தல்' என்னும் அகத்துறையைச் சார்ந்தது.

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

48. புழைத்த கைச்சி றுத்த கட்பெ
ருத்த மத்த முகபடாம்
புகர்மு கக்க பால போக
போத கத்தின் நிரைதரும்
மழைத்த டக்கை மான மீளி
கொங்கர் பூபன் வக்கைசூழ்
மலைய வெற்ப கன்று போய்ம
றக்க வல்லர் தான்வர
விழிக்க டற்கொ ழித்த முத்தம்
வடகு வட்டின் மூழ்கவே
மெய்ப சந்து மையல் தந்து
வீதி வாய்ம ணற்சுழித்(து)
அழித்த ழித்த றச்சி வந்த
தொருகை மற்ற தொருகையும்
அகன்றநாள்தொ டங்கி யெண்ணி
அதனி னுஞ்சி வந்ததே

துளையை உடைய கையும், சிறிய கண்ணும், பெரிய மத்தகமும், முகபடாமும், புள்ளிகளையுடைய முகமும், கபாலமும், உடைய இனிய யானைகளைத் தொகுதியாக வழங்கும், மழை போலும் பெரிய கைகளையுடைய கொங்கர் தலைவனாகிய 'பூபன்' என்னும் வள்ளலின் வக்கைநாட்டைச் சூழ்ந்துள்ள மலைய வெற்பைக் கடந்து சென்று, என்னை மறக்க வல்லவராகிய தலைவர் தான் வரும் வரவை எண்ணி, விழியாகிய கடல் கொழித்த, கண்ணீர் முத்துக்கள் வடமலையின் உச்சியும்

மூழ்குமாறு பெருக, உடம்பு பசலை பூத்து, எனக்கு மயக்கத்தைத் தருதலால், தெருவின் கண்ணே மணலைப் பரப்பி, வட்டமாகச் சுழி வரைந்து, அச்சுழியின் இருமுனையும் கூடாமையால், அழித்து அழித்து மீண்டும் சுழித்தலால், ஒரு கை சிவந்துவிட்டது; மற்றொரு கையானது தலைவன் பிரிந்த நாள் தொட்டு ஒவ்வொரு நாளையும் கோடிட்டு எண்ணி எண்ணிச் சிவந்துவிட்டது; இனி என் செய்வேன்.

—O—

தோற்றுவாய்

தலைவன் 'மீண்டு வருவேன்' எனக் குறித்த காலமாகிய மழைக்காலம் தொடங்கி, மின்னி, இடித்து, மழை பொழியவும், தலைவன் வாராமையால் வருந்தும் தலைவியை நோக்கி, 'இது கார் காலம் அன்று, வாணன் என்னும் வள்ளல் இரவலர்க்கு வழங்கிய யானையின் தோற்றமும் செயலுமே இது' எனத் தோழி ஆற்றுவித்தது.

{பதினொன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்}

49. தோகை யேமழை கால மென்றுது
வண்ட ழுங்குவ தென்னை நீ?
சொன்ன மேனிலை வான மன்னவர்
சொன்ன வாய்மைம றப்பரோ?

தியாக மாமுகில் செழியன் வண்புகழ்
தேக்கி னனிருள் நீக்கினன்,
செஞ்சொல் வாணன்வி ளங்க வேயொரு
வெஞ்சொல் வேழம்வ ழங்கினன்;

மேக மேயெழல் அன்று காண்மத
யானை நின்றகி ளர்ச்சியே!
மின்வி ளங்கிய தன்று காண் அது
மிக்க கொம்பின் விளக்கமே!

மாகம் வீழ்துளி யன்று காண்அதன்
மாறி லாமத தாரையே!
வான்மு ழக்கிய தன்று காண்அது
தான்மு ழங்கும்மு ழக்கமே!

தோகை பயிலை ஒத்த தோழியே! தலைவன் சொன்ன மழைக் காலம் இது என்று நீ மயங்குவது ஏன்? பொன்னையே விரும்பித் தேடச் சென்ற தலைவர் கூறிய மொழியை மறந்துவிடுவாரோ? (மறக்கமாட்டார்.) தியாக மாமுகிலாகிய செழியனுடைய வண்மை சேர்ந்த புகழை உலகில் தேக்கி வைத்தவனும், உலக வறுமையைப் போக்கினவனும், செஞ்சொல்லை யுடையவனுமாகிய 'வாணன்' என்னும் வள்ளல் தன் கொடைப் பெருமை விளங்க, கொடிய முழக்கத்தையுடைய யானையை இரவலர்க்கு வழங்கியுள்ளான். ஆதலால், அங்கே தோன்றியிருப்பது மேகம் அன்று; அது அவ் யானை, கிளர்ச்சியோடு நிற்கின்ற தோற்றமேயாம். வீசுவது மின்னல் ஒளியன்று; அவை அவ்யானையின் கொம்புகளின் தோற்றமேயாம். விழுகின்ற துளிகள் மேகத்தினின்றும் விழும் மழை நீர் அன்று; அது அவ்யானையின் மதநீர் மழையேயாம். கேட்கின்ற முழக்கமும் இடி முழக்கமன்று; அது அவ் யானை பிளிறுகின்ற முழக்கமேயாம் என்று அறிவாயாக.

[இரண்டாம் அடி 'ய' கரம் ஆசெதுகை அது நோக்கி முத லெழுத்து, குறிலாயிற்று.]



தோற்றுவாய்

ஒரு தலைவன் தன் காதலியோடு கூடி மகிழ்ந்த இன்ப நிகழ்ச்சியை நெஞ்சொடு கூறுவதாக அமைந்த இச்செய்யுள், 'புணர்ச்சி மகிழ்தல்', 'நலம் பாராட்டல்' என்னும் துறைகளைச் சார்ந்ததாகும். இப்பாடலுள் பின்னிரண்டடிகளை, இராமாயணக் கதைக்குறிப்புத் தோன்ற, சமத்காரமாக அமைத்திருக்கும் நயம் சுவையுடையதாக இருக்கின்றது.

(பதினாறுசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

50. செய்ய குங்கும மார்பன் வண்டு
செறிந்தி லங்கிய தொங்கலான்
செழியர் பூபதி, கொடுமை மேவிய
சித்ர வேள்சத பத்ரம்வாழ்
தைய்ய லன்புத ழைத்து வாழ்வருள்
சவரி வெற்பில் மடந்தையார்
தழுவி வாழது ராக போகசு
மேள மானதி ருந்தவா,
மைய்யி லங்கிய கடல்சி வந்ததுள்
எதிர்பு குந்தன மலைகளும்
மன்னு பொன்னை........துன்னு கின்றது
வந்தெ ழுந்தத ரிக்குலம்
மெய்யி லங்கைவ ளைந்து கொண்டது
களந்து ரந்தது, தானைபோய்
மேவி ராவண நிலைகு லைந்தது
மீண்டு விட்டது மாலுமே.

சிவந்த குங்குமம் பூசிய மார்பையும், வண்டுகள் நெருங்கி ஆரவாரிக்கும் மாலையையும் உடைய செழியர் பூபதியினது, பிரிந்தாரை வருத்தும் மன்மதனுடைய அம்பாகிய நூற்றிதழ் தாமரையிலே வாழும் இலக்குமி, அன்போடு தனழைத்து நல்வாழ்வை யருளுகின்ற சவரி மலையினிடத்தே விளங்கும் இம்மடந்தையைத் தழுவி வாழும் இன்ப நுகர்ச்சியானது இருந்த வாற்றினை என்னென்பேன்! மை பூசப் பெற்ற கடல் போலும் கண் சிவந்தது. உளத்தே எதிர் புகுந்தன மலை போலும் தனங்கள். நிலைபெற்ற பொன்னையும் (மாமை நிறம்) துன்னு கின்றது. (மேனி) வந்து ஆரவாரித்தது வண்டுக்கூட்டம். உடம்பை அழகிய கை வளைத்துக் கொண்டது. மேனியை விட்டு நீங்கி, ஆடையானது மேவிராமல் நிலைகுலைந்தது. காம மயக்கம் மேலும் மீண்டுவிட்டது.

**பின்னிரண்டடிகளில் தொனிக்கும் பொருள்:—** கருமையான கடல்பொங்கியெழ, மலைகள் உள்ளே புகுந்தன. நிலைபெற்ற திருவாகிய சீதாப்பிராட்டியை (மீட்க) வானரசேனைகள் நெருங்கிச் செல்கின்றன. சென்று இலங்காபுரியை வளைத்துக்கொண்டன. பகைவர் சேனைகள் வென்று துரத்தப்பட்டன. மேலே இராவணன் நிலைகுலைந்தது. திருமாலும் வெற்றியோடு மீண்டனன்.

—*—

தோற்றுவாய்

குறிஞ்சி நிலத்தில் வாழும் வேடமறவர் தன்பெண்ணை மணப்பதற்காக ஒரு மன்னன் அனுப்பிய தூதனிடம் தம் குல மரபும் பெருமையும் வீரமும் தோன்ற மறுத்துக் கூறுவது. இது கலம்பகத்தில் வரும் 'மறம்' என்னும் துறையைச் சேர்ந்தது.

(பதினுன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

**51. விற்ற தார்கலை பாதி கொண்டுவ**
**னத்தி லேயழ விட்டதார்**
**வெஞ்சி றைப்புக நின்ற தார்உடை**
**உரிய விட்டு விழித்ததார்**

**உற்ற தாரம்வி ரும்பி யின்னமும்**
**மன்னர் பெண்கொள ஆசையோ?**
**உமிழடா, மணம் என்ற வாய்கிழி,**
**ஓலை காற்றில் ஒழுக்கடா,**

**இற்றை நாள்வரை கொற்ற வன்சிறு**
**முத்தன் வாழிடை மெச்சியூர்**
**ஏற்ற மால்வரை மறவ ரேமிறை**
**எங்கள் எச்சிக லந்தபின்**

**பெற்ற வேலவ ருக்கு யாமொரு**
**பெண்வ ளப்பி ளளித்தனம்**
**பெற்ற பெண்கள் கொடுத்த தாருரை**
**பேய்பி டித்திடு தூதனே?**

மன்னனென்ற பேயினால் பிடிக்கப்பட்ட தூதனே! அரச குலத்தாரைப் போல் எங்கள் குலத்தில் மனைவியை விற்றது யார். மனைவி உடையில் பாதியைப் பறித்துக்கொண்டு, அவளை நள்ளிரவில் வனத்திலே அழும்படி விட்டது யார்; கொடிய சிறையிலே புகவிட்டு வாளா இருந்தவர் யார்; பகைவன் தம் மனைவியின் ஆடையை உரிதல் கண்டும் (தடுக்க மாட்டாமல்) விழித்தது யார்? (இவையெல்லாம் உங்கள் மன்னர் குலத்தார்க்கே வாய்த்தன; அப்படியிருக்கவும்) இன்னும் தாரத்தை விரும்பிப் பெண் கொள்ள ஆசையா? (நாணமில்லை சீ!) உமிழடா இவனை! மணம் பேசிவந்த இவன் வாயைக்கிழி! அந்தத் தூது ஓலையைப் பிடுங்கிக் காற்றிலே விடு! இன்று வரையிலும், கொற்றவனாகிய சிறுமுத்தன் வாழும் இந்த ஊரை விரும்பி அவனுடைய மலையிலே வாழுகின்ற மறவர் நாங்கள், (இப்படியொரு செயலைச் செய்ய வில்லை) எங்களிடையே வந்து எச்சிலையும் சிறிது உண்டு கலந்து பின், நாங்கள் வளர்த்த பெண்ணை (வள்ளியை), வேலவனுக்குக் கொடுத்தோம். பெற்ற பெண்களை யார் கொடுத்தார்கள்? நீயே உரைப்பாயாக!

**குறிப்பு:** — மனைவியை விற்றவன் 'அரிச்சந்திரன்'. வனத்திலே விட்டவன் 'நளன்'. சிறை புகவிட்டவன் 'இராமன்'. உடை உரியவிட்டவர் 'பாண்டவர்', இவர் செயல்களை இழுக்குப்போல் கூறிய நயம் காண்க.

—o—

தோற்றுவாய்

சிவவேடந்தாங்கி ஆடிப்பாடி வரும் ஒருத்தியின் பால் மயங்கிய காமுகன் ஒருவன், தன் பாங்கனிடம் கூறுவதாக அமைந்த இப்பாடல், கலம்பகத்துள் வரும் 'பிச்சியார்' என்னும் உறுப்பைச் சார்ந்தது. (பேய்ச்சியார் 'பிச்சியார்' என மருவியது. பேயன்—சிவபெருமான், பேய்ச்சி—பெண்பாற் பெயர்.)

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

52. தான முந்தரும நீதி யுஞ்சகல
கலையும் வல்லசதுர் வேதியன்
தமர புண்டரிகம் மருவு சஞ்சரிக
தாம மேவுபு யாசலன்,

பானு வின்பகைஞர் தாவி ஓடஎழு
பாரில் வைத்தபுகழ் வித்தகன்,
பனசை யாளனரு ளாள நாதனிசை
பாடி யாடிவரு பிச்சியார்

கான கஞ்செறியும் ஓதி யுந்தளவ
ரும்பு கொண்டதிரு முறுவலும்
கஞ்சு கத்துள்விளை யாடி நின்றவிரு
கடின பாரமுலை யானையும்

ஆன னந்தனில்வி பூதி யுங்குமுத
அமுத மானவா சகமுமாய்
'அரக ரா'வெனந டந்த போதென்மதி
அமர பக்கமதி யானதே.

ஆருயிர் நண்பா! தானமும் தவமும் நீதியும் சகல கலைகளும் வல்ல சதுர்வேதியனும், செந்தாமரையிலே மருவும் வண்டுகள் மொய்க்கின்ற மாலை பொருந்திய புயங்களையுடையவனும், சூரிய குலத்தரசரின் (சோழர்) பகைவர்களைத் தாவி ஓடச் செய்து, ஏழுலகத்தும் புகழை நிறுவிய வித்தகனும், திருப்பனசையிலே வாழ்பவனுமாகிய அருளாளநாதனின் கீர்த்தியை ஆடிப் பாடிக் கொண்டு வரும் பிச்சியார், நறுமணம் உள்ளே செறிந்த கூந்தலையும், காட்டுமுல்லை போன்ற பற்களையும், சட்டையினுள் விளையாடி நின்ற இரு கடின தனமாகிய யானைகளையும், முகத்தில் பூசியுள்ள திருநீற்றையும், குமுதம் போன்ற வாயினின்றும் வரும் அமுதமான வாசகத்தையும், "அரகரா" எனக் கூறிக்கொண்டு நடந்துவந்த போது கண்ட என் மதியானது தேய்பிறை காலத்துச் சந்திரனைப் போலாகிவிட்டதே! என் செய்வேன்?

—★—

தோற்றுவாய்

பரத்தையரிடம் பிரிந்துவந்த தலைவன் பால் ஊடல் கொண்ட தலைவி ஒருத்தியின் கூற்று.

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

53. அடிம ணிச்சி லம்பு கொஞ்ச
நென்ன லிங்கொ ருத்திவந்(து)
அயலெ லாம்வி லக்க என்னை
அவம தித்து ரைத்து, வான்
இடியி டித்த தென்ம னைக்க
பாடம் வந்து தைத்த போதி
யானொ ருத்தி ஒல்கி இங்கு
நின்ற தென்ன சொல்லுவேன்
தொடிம ணித்த டம்பு யத்தில்
மண்ப ரித்த சேதிபர்
துளபன் நாட! அவளு னைத்து
ணிந்த கற்றும் அளவுமெங்
கடிம னைக்குள் வருவை யல்லை
வரநி னைப்பை யாகிலோ
கபாட மாறி இடுக நல்ல
கற்க பாட மாகவே.

பாதங்களில் மணிச்சிலம்பு ஆரவாரிக்க, நேற்றைப் பொழுது இங்கு ஒருத்தி வந்து, அயலார் எல்லாம் விலக்கவும் கேளாமல், என்னை அவமதித்துப் பேசி, வானத்தின் இடி போல முழக்கமிட்டு, எனது வீட்டின் கதவுகளை உதைத்தபோது, யான் ஒருத்தியாகத் தனியே இங்கு நின்ற நிலைமையை என்னென்று சொல்வேன்! தொடியணிந்த அழகியதோள்களிலே இவ்வுலகத்தைத் தாங்கியருளும் சேதிபருடைய துளப நாட்டில் வாழும் தலைவனே! அவளே உன்னைத் துணிந்து விலக்குகின்றவரை எம்முடைய வீட்டிற்குள் நீ வருவாயல்லை. ஒரு கால் நீ வர நினைத்து வந்துவிட்டால் (இந்த மரத்தால் ஆன கதவு என்படுமோ ஆதலின்) இக்கதவுகளை மாற்றி நல்ல கற்கதவுகளாக அமைத்துவிடுக!

—*—

### தோற்றுவாய்

தலைவனைப் பிரிந்துள்ள தலைவி, செக்கர் வானத்தைக் கண்டு புலம்பிக் கூறுவது. செக்கர் வானத்திற்கு, இப்புலவர் கூறும் கற்பனைக் காரணம் சுவையாக உளது.

### (பதினன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

54. மீன வன்ற னக்கு வெற்றி
முடிக வித்த செங்கையான்
வீர ராமன் வீர தீரன்
வீர ராக புங்கவன்
மான துங்கன் மண்பு ரக்கும்
வள்ளல் பள்ளி கொண்டவன்
மழவன் வெற்பில் ஏனைய கன்ற
வன்க ணூளர் போதரார்;
ஈன மின்றி உலவு தார
காக ணங்கள் கூடிவான்
எங்கும் மொய்ப்ப வந்த இந்து
ராச னுக்கி ராச்சியம்
ஆன தென்று தானி ருந்த
பாடி வீடு சுட்டனன்
ஆசை விட்ட கன்ற தொக்கும்
அரிய செக்கர் வானமே

பாண்டியனுக்கு வெற்றிமுடி கவித்த செம்மையான கைகளை யுடைய வீரராமன், வீரதீரன், வீரர்தம் உள்ளத்துறையும் தேவன், இவ்வுலகைப் பாதுகாத்தளிக்கும் வள்ளல், பாற்கடலிற் பள்ளிக்கொண்ட திருமாலாகிய "பள்ளிகொண்ட மழவன்" என்னும் அரசனுடைய மலையிலே என்னைத் (தனியிருத்திப்) பிரிந்து சென்ற, அஞ்சாத உள்ளமுடைய என் தலைவர், இன்னும் வந்தாரில்லை; தாழ்வு கருதாமல் திரியும் விண்மீன்கள் கூடி

ஆகாயமெங்கும் நெருங்கிவர, அவற்றிக்கு இடையே வந்த நிலா அரசனுக்கு இராச்சியமாகிவிட்டது எனவே, (கதிரவனாகிய மன்னன்) தான் இருந்த பாசறையைத் தீயிலிட்டுக் கொளுத்தி நிராசையோடு அகன்று சென்றான் என்று சொல்லத்தகும்; அருமையான இந்தச் செக்கர் வானம், என வருந்துகின்றாள்.

—*—

தோற்றுவாய்

வினை முடித்து மீண்டு வரும் தலைமகன், நம்மைப் பிரிந்துள்ள தலைவி. இவ்வாறெல்லாம் வருந்தி இருப்பாள். ஆதலின் விரைந்து செல்லவேண்டுமெனத் தன் நெஞ்சொடு கூறியது.

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

55. பொழித்த டக்கை மழவன் வாகை
கொண்ட பள்ளி கொண்டவன்
பொன்னின் மாட நிரைவி ளங்கும்
முன்றில் சூழ்ம ணற்றெருச்
சுழியில் வைத்த கரமும் வெய்ய
வடவை வைத்த உதரமும்
துணைவர் இன்று வருவர் என்று
சோப னஞ்சொல் தோழிமார்
மொழியில் வைத்த செவியு மாமு
கத்தில் வைத்த சோகமும்
முலைய ணைத்தும் அன்றி ஆகம்
முழுதும் வைத்த பசலையும்
வழியில் வைத்த விழியு மாயி
ருந்து நம்மை நோவரோ!
வல்லும் நாக முந்தி ருத்தி
வைத்து வந்த மாதரே!

நெஞ்சே! களவுக்காலத்தே நமைக்காண, வல்லும் நாகமும் திருத்தி வந்து மகிழ்ச்சிதந்த தலைவி; இந்நாள் மழை போலும் பொருளை வழங்கும் பெரிய கைகளையுடைய மழவனுகிய வெற்றி மிக்க பள்ளிகொண்டவனுடைய பொன்னுல் இழைக்கப் பெற்ற மாடங்கள் விளங்கும் நகரிலே, தெருவில் முற்றத்தின்கண் நிறைந்த மணலிலே சுழித்த சுழியில் வைத்த கைகளோடும் (இது கூடலிழைத்துப் பார்த்தலாகும்) கொடிய வடவைத் தீயை அடக்கி வைத்துள்ள வயிற்ருேடும், "துணைவர் இன்று வருவார், இன்று வருவார்" என்று மங்கலம் கூறும் தோழிமார் சொற்களிலே வைத்த செவிகளோடும், முகத்திலே நிரம்பிய வருத்தத்தோடும், மார்பகமேயன்றி மேனிமுழுவதும் பூத்த பசலேயோடும், நாம் வரும் வழியை நோக்கிப் பார்த்துக்கொண்டே இருக்கும் விழிகளோடும், கூடியிருந்து (நாம் குறித்த பொழுது செல்லாமையால்) நம்மை நொந்துகொள்வாள் அல்லவோ? (வல்லும், நாகமும்—முறையே முலேயையும், அல்குலேயும் உவமையால் உணர்த்தி நின்றன. திருத்துதல் = ஆடை அணிகளால் அழகு செய்தல்.)



தோற்றுவாய்

மழவர்கோன் மலேயில் வாழும் மங்கையர் அழகை வருணிக் கப்புக்க ஒருவன், தன் வேட்கை தோன்ற அவர்தம் தனத்தைச் சிறப்பித்தது. இஃது பயோதர வருணனையின்பாற்படும்.

(பதினுன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

56. "மாம லர்த்திரு மயில்வி ரும்பிய
பள்ளி கொண்டருள் மழவர்கோன்
வரையின் மாதர்ம ருங்குல் நூல்வடி
வாய சைந்துள தாயினும்,
பூம லர்க்குழல் வண்டு கொண்டுக
ழுத்த சைந்துள போதெலாம்
புளக சீதள கொங்கை யானேபு
றத்த சைந்ததே" னென்றிரோ?

"நாமி ருக்கையி லேயு மிப்படி
ஞான மென்பதும் நிற்குமோ?
நானி லத்தையு ழிக்க விங்கொரு
நமனும் வேறுள னவனோ?
காமன் உத்தம நூலொ ழிந்தறு
சமய நூலும்வ ழங்குமோ?
கண்டு கொள்ளுவ மாகும்" என்றெதிர்
கறுவு கின்றது காணுமே.

விருப்பமுடையீர்! "திருமகள் விரும்பி உறையும் மழவர் சோனின் மலையிடத்தே விளங்கும் பெண்டிரின் இடை, நூல் வடிவாக அசைந்துகொண்டிருக்கிறது. எனினும், பொலிவுடைய மலர் சேர்ந்த கூந்தலில் வண்டு மொய்க்கும் போதெல்லாம், மணங்கமழும் சந்தனம் பூசிய கொங்கைகளாகிய யானை, புறத் தசைக்கின்றதே என்ன காரணம்" என்று கேட்பீராயின் கூறுவேன்; அவ்யானை "நாம் இங்கே இருக்கும்போது இவ்வுலகில் 'ஞானம்' என்பது நிலைபெறுமோ? உலகத்தை அழிப்பதற்கு இங்கே வேறு ஒரு யமனும் இருப்பானோ? காமனுடைய சிறந்த போக நூலைவிட்டு ஆறு சமய நூல்கள் இங்கே வழங்கப்பெறுமோ? பார்ப்போம்" என்று எதிர்ந்து சினங்கொண்டு நிற்கும்; காண்பீராக!

—*—

தோற்றுவாய்

தலைவி கருவுயிர்த்தாளெனக் கேட்டு, மகிழ்ந்து மனைபுகுந்த தலைவன், அவள் தன் மகவொடு துயிலும் காட்சி கண்டு மகிழ்ந்து கூறியது.

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

57. திருகு கோபமத வார ணங்களிடை
சென்னி யிற்றூம் பூத்தியே

சிந்தை யம்புசர மஞ்ஞை மல்லரிவை
திரிவ தென்னவரு துரகமால்
அருகில் வந்தவரை யாளும் ஐந்துநரு
வாங்க யன்பெரிய காங்கயன்,
அருள்பெ றுங்குரிசில் கணப திக்கிளைய
அழகன் நல்லைநகர் தன்னுளே
பருகு கின்றமுலை யுஞ்சு ரந்தொழுகு
பாலும் நெய்யுமிள கிளகெனும்
பச்சு டம்புமிகு பசுந ரம்பொடுமெய்
பூத்த மஞ்சளின்ம லர்ச்சியும்
பெருகு மன்பினொடு கைய ணைத்தசிறு
பிள்ளை யுந்துயில்க டுக்கியே
பின்னி நீட்டுமிரு தாளும் இன்றெனது
பேறு பெற்றவிழி காணுமே!

கிளர்ந்தெழும் கோபத்தோடு கூடிய மதயானைகளிடையே, நாற்படைகளோடும் வரும் துரகமால் (இம்முதலடியின் பொருள் விளங்கிக்கொள்ளுமாறில்லை) தன்னருகே வந்த இரவலரைப் பேணிக் காக்கும் பஞ்ச தருக்களை ஒத்தவன், (இங்கும் பாடம் பிறழ்ந்துள்ளது) பெரியோனாகிய சிவபெருமானின் அருளைப் பெறும் கணபதிக் கிளையோனான முருகக்கடவுள் விளங்கும் 'நல்லை' என்னும் ஊரின்கண் (என்மனையிடத்தே) மகவு சுவைத்துண்ணும் மார்பும், அதன் கண் சுரந்தொழுகும் பாலும், மேனியிற் பூசப் பெற்ற நெய்யும், 'இளகு இளகு' என்பது போல விளங்கும் ஈன்றணித்தாகிய பச்சுடம்பும், புறத்தே காணும் பசு நரம்போடு கூடி, மெய்யிடத்திலே பூசப்பெற்ற மஞ்சளின் விளக்கத்தோடு, பெருகுகின்ற பாசத்தினால் அவள் கையை அணைத்துள்ள சிறு பிள்ளையும், துயில் மிகுந்து பின்னி நீட்டியிருக்கும் கால்களும் ஆய இக்காட்சியைப் பெரும் பாக்கியத்தைச் செய்த என் விழிகள் இன்று காணுகின்றன.

—*—

### தோற்றுவாய்

மங்கை ஒருத்தியின்மேல் காமுற்ற ஒருவன், அவள் செயலும் மொழியும், தன் விருப்பத்திற்கு வாய்ப்பாக நிகழுவதாக எண்ணிக் கைக்கிளை வகையாற் றன் வேட்கை தோன்றக் கூறியது.

### (எண்சீர் சந்த விருத்தம்)

58. ஏமாசல வெற்பிற்புகழ் புனைபாரியி ராசன்
எண்ணங்களி கூரும்புயல்,
இல்லாமைவெ யிற்கே
தேமாநிழல் எனவந்துயர் திருவேங்கட நாதன்
செய்யாற்றலை கிழியத்திரி
சேல்போல்ஒளிர் விழியீர்!
பூமாலைகி ழிக்கின்றதெ னக்கென்றுமி ழற்றும்
பூவைக்கெதிர் புகல்கின்றதெ
னக்கென்றுமி ருந்தேன்
காமாதுரர் பிறர்காரியம் அவர்காரிய மெனவே
கருமம்பலி யாமுன்கருத்
துடனேகொளு வாரே!

பனிமலையளவும் புகழ்விரித்த, பாரியன்ன நம் அரசன், "நினைவாருடைய உள்ளத்தே களிப்பை வளர்க்கும் மழையை ஒப்பான், இல்லாமையாகிய வெயிலைப் போக்கும் தேமாநிழலை ஒப்பான்" என உயர்ந்து விளங்கும் திருவேங்கடநாதன் நாட்டின்கண் ஓடும் செய்யாற்று நீர் அலைகளைக் கிழித்து நீந்தித் திரியும் கயல்போலும் கண்களையுடையீர்! நாரைக் கிழித்துப் பூமாலை தொடுப்பதும் எனக்காகவே என்றும், நாகணவாய்ப் பறவையிடம் எதிர்பேசி மகிழ்வதும் எனக்காகவே என்றும் கருதியிருந்தேன். ஏனெனின், வேட்கை மிக்கவர்கள் ஒரு செயல் முடிவதற்குமுன் நிகழும் நிகழ்ச்சிகளெல்லாம் தமக்கே சார்பாக எண்ணி ஒரு முடிவுக்கு வந்துவிடுவார்களாதலால்.

—★—

தோற்றுவாய்

'களந்தை' என்னும் ஊரில் வாழ்ந்த 'அழகப் பெருமாள்'' என்னும் வள்ளல் மீது மையலுற்ற மங்கை ஒருத்தியின் கூற்று.

## (எண்சீர் சந்த விருத்தம்)

59. கணையெத்தனை உண்டாக்கினும், உயிர்கொல்லவிடுக்கும
கணையாவதுன் மலர்மாலிகை காமன்பொரு சிலையுள்;
பணையிற்புரி வேளாண்மையி லுண்டாகிய வேழம்
படுபெண்பழி யிற்பாவமெ மக்கென்பது பாராய்
பிணையொத்தன மடமைக்கடை விழியிற்கடை சியர்தம்
பிள்ளைப்பணி லத்தால்எழில் வெள்ளக்கயல் வெடிபோய்
அணைதத்திவ ரம்பேறுக ளந்தைத்தமிழ் தரையா!
அமராபதி குமராபுகழ் அழகப்பெரு மாளே!

பெண்மானை யொத்த மடப்பம் பொருந்திய விழிகளையுடைய மருதநிலப் பெண்கள் (கையில் அணிந்துள்ள) சிறிய சங்கு (வளையல்களின்) ஒலியால், அழகிய வயல் நீரிலே திரியும் கயல் மீன்கள், வெருண்டு துள்ளிப்பாய்ந்து சேற்று அணையிலே தத்தி, வரப்புக்களிலே ஏறும்படியான வளஞ்சான்ற 'களந்தை' என்னும் தமிழ் நிலத்திற்குரியோய்! தேவலோகத்தில் விளங்கும் முருகனை ஒத்த புகழ் மேவிய அழகப்பெருமாளே! பெண்டிரை வருத்தும் மன்மதனுடைய கரும்புவில்லின் கண் எத்தனை அம்புகளை அவன் தொடுத்தாலும், என்னுடைய உயிரைக் கொல்லக்கருதி எய்யும் அம்பு யாதெனின் நீ யணிந்துள்ள உன் மலர்மாலையேயாம். ஆதலின் ''வயல்களில் வேளாண்மை செய்து விளைவு செய்த கரும்பைப்போல துயர்படும் இந்தப் பெண்பழியால் பாவம் நமக்கே'' என்பதைக் கருதுவாயாக!

—*—

தோற்றுவாய்

'செல்லப்பெருமாள்' என்னும் வள்ளல்மீது காதலுற்று மெலிந்த தலைவியின் நிலையைத் தோழி கூறுவது.

[எண்சீர் சந்த விருத்தம்]

**60. கையாரவுன் மார்பைப்பெறு திருமேனிவளைத்தாள்**
**கண்ணென்பதுன் அழகைத்தரு கண்ணிற்கிடமானாள்?**

**மெய்யாமிரு வகைநண்பையும் எண்ணாதுகை வளையும்**
**விழிமையுமொ ழித்தாளது மென்மைக்கியல் பாமோ**

**செய்யா........மெ றிக்குந்திரு நென்மைப்பதி தனிலே**
**தென்னூலுணர் வாரும், வட திசைநூலுணர் வாரும்**

**துய்யாருமி வன்கல்வியில் மலையத்தவன் எனவே**
**சொல்லப்பெரு மாள்நல்கிய செல்லப்பெருமாளே!**

'திருநென்மைப்பதி' யென்னும் ஊரின்கண், தமிழ் நூலுணர்ந்தாரும், ஆரிய நூல் உணர்ந்தாருமாகிய அறிஞர்களேயன்றிப் பகைவரும், 'இவன் கல்வியில் மலையமுனியாகிய அகத்தியனை ஒப்பான்' என்று கூறும்படி விளங்கிய பெருமாள் அருளிய "செல்லப் பெருமாள்" என்னும் வள்ளலே! உன் மார்பைப் பெறுந் திருமேனியைக் கையார வளைத்தாள். உன் அழகைத்தரும் கண்களுக்குத் தன் கண்களை இடமாக்கினாள். ஆகவே அணைக்க, காண, கைகளாலும், கண்களாலும் பயன்பெற்ற இவள், அவ் இரு வகை நட்பையும் கருதாமல் கை வளையல்களையும் கண் மையையும் அழித்துவிட்டாள் இச்செயல் பெண்டிரின் மென்மைக்குப் பொருந்துமோ? அறிக. (தலைவன் பிரிவால் மெலிந்த மேனியையும், ஒழுகுங் கண்ணீரையும் இவ்வாறு சமத்காரமாகக் கூறினாள் தோழி.)

—★—

தோற்றுவாய்

திருப்புகலூரிலே வாழ்ந்த 'பெரியநாயகன்' என்னும் வள்ளல் மீது மையலுற்ற தலைவி, 'அவன் அருளாமையின் ஆவி பிரிவாள்' எனக்கூறி, அவள் மையல் நோய் மிகுதியைத் தோழி புலப் படுத்தியது.

[பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்]

61. ''ஆடை சுற்றிடின் அரவு சுற்றென
அஞ்சு வாரையும் அறிகுவோம்
அன்னம் உண்டிடின் நஞ்சம் உண்டென
அஞ்சு வாரையும் அறிகுவோம்
வாடை சுற்றிடின் வன்னி சுற்றென
மருளு வாரையும் அறிகுவோம்
மையல் என்றொரு பாவி யாவிவ
ருத்தல் கண்டிரால்'' என்னவும்
ஓடை சுற்றிய மதிலும் அப்பர்உ
ழைப்பி ரும்பிடு கோயிலும்
உலகெ லாம்நிழல் இட்ட புன்னையும்
உடைய வண்புக லூரிலே
பேடை சுற்றிடு மஞ்ஞை யீர்!தொடை
பெரிய நாயகன் அருள்கிலான்
பீதி யற்றது வீதி புக்கபி
ணங்கு றித்தது காணுமே.

பெண் மயில்கள் சுழலும்படியான சாயலை உடையீர்! (விரக தாபம் காரணமாக) "உடையைச் சுற்றினால் பாம்பென அஞ்சு வாரையும், உணவை உண்ணின் நஞ்சென வெறுப்பாரையும், குளிர்ந்த வாடை வீசினால் கொடிய நெருப்பென மருள்வாரையும், கண்டிருக்கின்றோம். இவ்வாறு மையலென்னும் பாவி உயிரைப் பிரிக்கின்ற நிலையை (யாம் முன்பு கண்டிலேம்) காண்பீராக'' என்று கெஞ்சிக் கூறவும், அகழி சூழ்ந்த மதிலையும், திருநாவுக்கரசு

சுவாமிகள் உழவாரப்படையால் திருப்பணி புரிந்த கோயிலையும், உலகம் முழுதிற்கும் அருள் நிழல்தந்த புன்னை மரத்தையும் உடைய வளம் பொருந்திய திருப்புகலூரிலே விளங்கும் பெரிய நாயகன் சிறிதும் அருள் செய்கிலன். ஆதலின் இனி அச்சம் நீங்கிய இத்தெரு பிணம் செல்லுதலைக் கருதிற்றுப் போலும், அதனைக் காணுவீராக! (தலைவி மடிவாள் என்பதைக் குறிப்பால் உணர்த்தினள்!)

—o—

### தோற்றுவாய்

ஒரு தலைவன், தன் வேட்கையால் தலைவியிடத்து இரந்து நின்றும், அவள் இரங்கா நிலைமையைத் தோழியிடம் கூறி நின்றது. இது பெருந்திணையின் பாற்படும்.

### (பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

62. தெரிய முப்புரம் எரிய வென்றதி
யாகர் தென்கம லைக்குள்வாழ்
தெரிவை யர்க்கொரு திலக மேயிழை
தென்றல் தந்தருள் மன்றலே!

அரிய சித்திர மேயெ னச்சொலி
வாய்பு தைத்துவ ணங்கியே
ஆசை பேசிய பாவி யைச்சிறு
தாளு கைக்கநி னைப்பரோ?

பரிய வெற்பைவ ளைத்து சாணைப
டக்க டைந்துதி ரட்டியே
பளப ளப்பொடு குழைதல் கொல்லுதல்
பசைதல் விம்முதல் பண்ணியே

கரிய ரெத்தின மணிக ளைக்கொடு
கண்க ளாகவ குத்த, கொங்
கச்சி யார் நகைச் சிகர..............
கலைச்சி........த .. ஞ்சி கலைச்சியே.

"தனது பேராற்றல் தோன்ற, முப்புரங்களும் தீப்படுமாறு வென்ற தியாகேசப்பெருமான் விளங்கும் "தென்கமலை' என்னும் திருவாரூரிலே வாழும் தெரிவையர்களுக்கெல்லாம் ஒரு திலகம் போல்வாய்! இழைந்து வீசும் தென்றல் தருகின்ற இனிய நறுமணம் போல்வாய்! அரிதாக (வரையப்பெற்ற உயிர்ச்) சித்திரம்போல் வாய்!" எனக் காதலால் பல பல சொல்லி (அவள் அன்பைப் பெறும் பொருட்டு) வாய் புதைத்து வணங்கி, என் ஆசை புலப்படுமாறு பேசி நின்ற பாவியாகிய என்னை (ப் பொருட்படுத்தாமல்) தம் சீறடியால் சுற்றித் தள்ள நினைப்பாரோ? (நினைதல் தகாது) பெரியதொரு மலையை வளைத்துக் கடைந்து சாணை பிடித்துத் திரட்டிப் பளபளப்போடு குழைதலும், கொல்லுதலும், பசத்தலும், விம்முதலும், பொருந்தச் செய்து அவற்றின் முகத்தில் கரிய இரத்தின மணிகளைக் கண்களாகக் கொண்டு வகுக்கப்பெற்ற தனங்களை உடையராகிய, விரகம் தோன்ற முறுவலிக்கும் உயர்ந்த கலைவன்மை வாய்ந்த கலைச்சியார்.



தோற்றுவாய்

இப்பாடல் நாகப்பட்டினத்தின் கடல்வாணிக வளத்தையும், மக்கள் செழிப்பையும், இயற்கைச் சிறப்பையும், தன்மையும், உயர்வு நவிற்சியும் தோன்ற விளக்குகின்றது.

(பதினான்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

63. குடக்கி னிற்று ரங்க மும்வ
டக்கி னிற்க லிங்கமும்
குணக்கி னிற்ப சும்பொ னுங்கு
ளித்த தெற்கி லாரமும்

அடிப்ப ரப்பு டைக்க லத்த
னேக வண்ண மாகவந்

தஞ்சு வண்ண முந்த மைத்த
றத்தின் வண்ண மானவூர்;
கடற்க ரைக்கு வித்த சந்த
னத்தை யிந்து டன்படக்
கலந்தி றைக்கு மந்தி யைக்க
னன்று முக்கு வக்குலம்
புடைப்ப தற்கெ ழுந்து கைம்மு
றுக்க லும்மு றுக்கிவாய்
புக்க முத்தை விட்டெ றிந்து
பூக மேறும் நாகையே.

மேற்குத் திக்கிலிருந்து குதிரைகளையும், வடதிசையிலிருந்து ஆடைகளையும், கிழக்குத் திக்கிலிருந்து பசுமை மிக்க பொன்னையும், தென் திசையிலிருந்து கடலில் மூழ்கி எடுத்த முத்துக்களையும், சுமந்து கொண்டு அடிப்பரப்புடைய அழகிய பலப்பல மரக்கலங்கள் வந்து நிறைதலால், ஐந்து வருணத்து மக்களும் செழிப்புற்று, அறத்தின் வண்ணமாகவே திகழும் ஊர்; (யாதெனின்) கடற்கரையிலே மரக்கலங்கள் கொண்டுவந்து குவித்த சந்தனத்தைக் கற்பூரங்களோடு சேர்த்து இறைக்கும் மந்திகளைப் பார்த்து, பரதவர்கள் சினத்தோடு கைகளை முறுக்கிக்கொண்டு புடைப்பதற்காக எழுந்து வருதலைக்காணும் அம்மந்திகள், கடல் அலையிலே விளையாடுங்கால் வாயில் நீரொடு புகுந்த முத்துக்களை அவர்கள் மீது வீசி எறிந்துகொண்டே பாக்குமரங்களில் தாவி ஏறி ஓடும்படியான, வளமிக்க நாகையம்பதியேயாம்.

[முக்குவக்குலம் = கடற்பரப்பிற் சென்று மீன் பிடித்தலேயன்றி மூழ்கி முத்து முதலியன எடுத்தலின் பரதவர் குலத்துக்கு இது பெயராயிற்று. முக்குதல் = நீருள் அமிழ்ந்து மூழ்குதல்].

—*—

தோற்றுவாய்

தம் அரசனோடு போரிட்டுத் தோற்றோடிய மறவர்கள், நீராடாமல், உடல் நலனிழந்து, புலால் நாற்றம் வீசக் கானகத்

துறைவது கண்டு, வென்ற வீரர்கள் எள்ளும் வகையாற்பாடியது. இதனுல் அவ் அரசனின் போர்த்திறம் விளக்கப்படுகிறது.

(பதினுன்குசீர் ஆசிரியச் சந்த விருத்தம்)

64. புலம்பெ யர்ந்து டம்பு லர்ந்தி
ருந்த தென்கொல் சாதகம்
புயலி னீர லாம லுங்கள்
பொய்கை நீர்வ ழக்கமோ?
நலங்கு லைந்த தந்த நீரி
தென்பு குந்த வாறுதான்?
நாக ராசன் முடியின் மேல்ந
லந்தி கழ்ந்தி ருந்ததோர்
தலங்கு லுங்க வந்த வேடர்
தறுக ணுளர் மறவரைச்
சமர்பு ரிந்த மன்ன வன்ற
னைத்த டுக்கு மக்களத்(து)
அலம்பு வந்த செம்பு லால்மு
கந்தெ ழுந்த தொக்குமே
அன்று தொட்ட வெட்டு நாறு
மாகி லொக்கும் ஒக்குமே.

எம் அரசனேடு மாறுபட்டதனுல் ஊரைவிட்டு நீங்கி வாழும் நீங்கள், உடம்புவாடி (முடைநாற்றம்வீச) இருப்பது என்ன சாதனையோ? மழைபெய்த நீர் இல்லாமல், வேறு நீரால் நிரம்பியி ருத்தல், உங்கள் குளங்களின் வழக்கமோ? எவ்வாறு நீங்கள் நீராடும் குளத்து நீர் தூயதன்மை குறைந்து விட்டது? அதற்குக் காரணம் யாதாயிருக்கும்? ஒருகால், ஆதிசேடனின் தலையிலே விளங்கும் சிறந்த இந்தப் புவியானது அதிரும் வண்ணம், போரிடவந்த அஞ்சாத வேடர்களாகிய மறவரை வெல்ல, அவரோடு போர்புரிந்த, எங்கள் மன்னவனை நீங்கள் எதிர்த்துப் போரிட்ட அந்தப் போர்க்களத்தை அலம்பிக்கொண்டு பாய்ந்த புலாலோடு கூடிய செங்குருதி வெள்ளத்தால் நிறைந்த பொய்கை

யெனின் ஒக்கும். அவ்வாறன்றி நீங்கள் போர்புரிந்த அந்நாள் முதல், இன்றுவரை உங்கள் மேனியில்பட்ட வெட்டுப் புண்கள் ஆருமல் நாறுமானுல் அது மிகவும் ஒக்கும்.

—*—

### தோற்றுவாய்

தலைவி 'அறிவு நிரம்பப் பெருதவள்' எனக் கூறித் தலைவன் வேண்டுகோளை மறுத்த தோழியிடத்தில், தலைவன் முன்பு நிகழ்ந்த ஒரு நிகழ்ச்சியைச்சுட்டித் தலைவி 'காதற்செவ்வி அறிந்தவள்' எனக் கூறும் அகத்துறையைச் சார்ந்த பாடல். தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறியதுமாம்.

**(பதினுன்குசீர் ஆசிரியச் விருத்தம்)**

**65.** **மழைப டிந்தமது ராபு ரேசர்தமிழ்**
**மலைய மால்வரைம டந்தையார்**
**மதன கீதவகை கொஞ்சு நர்க்கவரின்**
**மழலை வாய்மைதடு மாறிநீள்**

**குழைப டிந்தசுற வாட முத்தினிரை**
**குமிழ்நி ரம்பிவியர் ஒழுகவே**
**குலையு, மின்பவகை நினைவ றிந்துறவு**
**கூடி நீங்குமல ரணையின்மேல்**

**இழைப டிந்தகலை உதறி யோர்தலையெ**
**டுத்து டுத்தவள் சொரிந்தகா(சு)**
**இடைவி டச்செருகும் முருகு தோய்களபம்**
**இளமு லைத்திமிரி னொழுகநேர்**

**கழைப டிந்தநக ரேகை கண்டுதமர்**
**காண லஞ்சிமெய்ந டுங்கியே,**
**கடைசி வந்தெனைமு னிந்த பார்வையொரு**
**கால்ம றப்பதிலை காணுமே!**

தோழி! மழை மேகங்கள் படிந்து வளம்பெருக்கும், மதுரை மாநகர் இறைவற்குரிய தமிழ் மலையாகிய பொதியமால் வரையில் திகழும் வரையர மகளிர், மதன வேள் அருளும் கீதவகைகளைப் பாடித் தம்மைக் கொஞ்சி மகிழ்விக்கும் நாயகர்க்கு, அவர் தம் மழலைபோலும் இனியமொழி தடுமாறி, நீண்ட குழை (காதணி) யாகப் படிந்து விளங்கும் சுருவானது ஆடி அசைய, முத்துக் களின் நிரைபோலக் குமிழ்விட்டு நிரம்பும் வியர்வை ஒழுக, ஆடையணிகள் குலையும்; அத்தகைய இன்பவகைகளை எண்ணி, உறவுபூண்டு கூடிமகிழ்ந்து, பின்நீங்கும் மலரணையின்மேல் (கூடிப்பிரிந்தவளாய தலைவி) நூலாலாகிய ஆடையை உதறி, ஓர் தலைப்பை எடுத்து உடுத்தவள், அவ்வாடையில் இணைந்தி ருந்த முத்துக்காசுகள் அற்று வீழ்ந்திருக்கும் நிலையைப் பார்த்து, அவற்றை எடுத்து இடையிடையே செருகிக் கோப்பவள், தன் அழகு மிக்க மார்பகத்தே பூசிய சந்தனம் ஒழுகுதலைக் காண்பவள், அவ்வழியே, தன்னுடைய மூங்கில்போலும் தோள்களிலும் (தனங்களிலும் தலைவனுடைய கைகளின்) நகரேகைகள் படிந் திருப்பதைக் கண்டாள்; கண்டு அவற்றைத் தம் தோழியரும் சுற்றமும்காணின் என்னுவது என்று அச்சமுற்று, மேனி நடுங்கிக் கொண்டே, விழிக்கடை சிவப்புற என்னை வெகுண்டு பார்த்த அந்தப் பார்வையை, யான் ஒரு காலத்திலும் மறப்பதற்கில்லை. இதனை அறிவாயாக!

[நெஞ்சொடு கூறுவதாயின் நெஞ்சை முன்னிலைப்படுத்திக் கொள்ளலாம். கழை = தோள்களை உருவகத்தால் சுட்டி நின்றது. காசு = மேகலையில் வைதத்துக் கோத்த காசுகள்.]

—o—

தோற்றுவாய்

'உலகியல்பாகிய சில உண்மைகள் என்றும் மாறுபடா' என்பதைச் சில எடுத்துக்காட்டுகளால் வலியுறுத்துகின்றது இப் பாட்டு.

(கலி விருத்தம்)

66. குரைகடல் வறுமையும், குறத்தி உண்மையும்,
நரைகெட மருந்துதின் றிளைஞ ராவதும்,
விரைசெறி குழலினள் வேசி ஆசையும்
அரைசனோ டுறவுமிவ் வைந்தும் இல்லையே.

அலை எழுந்து முழங்கும் கடல், நீரின்றி வற்றி விடுவதும், குறப்பெண் உண்மை பேசுவதும், நரைமயிர் கருமை எய்த, காயகல்ப முதலிய மருந்துகளை உண்டு, கிழத்தன்மை மாறி இளைஞராவதும், நறுமணம் பூசிய கூந்தலையுடையாளாகிய வேசி, ஒருவன்மீது கொண்டிருப்பதாகக் கூறும் ஆசையும், நாடாளும் அரசனோடு ஒருவர் கொண்டிருப்பதாகக் கருதும் நட்புறவும் ஆகிய இவ்வைந்தும் எக்காலத்தும் எவ்விடத்தும் இல்லையாம்.

[இவை என்றும் நிகழா என்ற உண்மையை அனுபவத்தால் உணர்ந்து கூறியது.]

—o—

தோற்றுவாய்

'தினைப்புனத்தில் காவல் செய்துவரும் தலைவியைக் காணலாம்' என்று வந்த தலைமகன், அவள் காவல் நீங்கி மனைக்குச் சென்று விட்டதை எண்ணி வருந்துபவன், தன் நெஞ்சு, தலைவியை நாடிச் சென்றுவிட்டதாக வியந்து கூறும் கூற்று: இஃது 'வறுங்களம் நாடி மறுகல்' என்னும் அகத்துறையைச் சார்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

67. புனம்போன தில்லை மயில்போன
தில்லைப் புதியகிள்ளை
இனம்போன தில்லை இதண்போன
தில்லை இருதனத்தால்

**அனம்போன நுண்ணிடைக் கன்னிபங்**
**காளர்தென் கச்சியிலென்**
**மனம்போன தெப்படிப் பூமாது**
**போன வழியறிந்தே?**

பருத்த தனங்கள் காரணமாகப் பெருமைகுன்றிச் சிறுத்த நுண்ணிய இடையை உடைய உமாதேவியைத் தன்னுடம்பில் ஒரு பங்காகக்கொண்ட சிவபெருமான் எழுந்தருளும் கச்சியம் பதியில் விளங்கும் தலைவி (தினைப் புனங் காவல் நீங்கிச்) சென்றதை யறிந்தும், இத்தினைப் புனம், அவளைத் தேடிச் செல்லவில்லை; (அவளைப் போன்ற சாயலைப்பெற்றுள்ள) இம்மயிலும் அவள்பின் போகவில்லை. (அவளைப்போல இன்மொழி பேசிப் பழகும்) புதிய கிள்ளையினங்களும் அவள் சென்றவழியை நாடிச் செல்லவில்லை. அவள் தங்கியிருந்த இப்பரணும் அவள்பின்னே செல்லவில்லை. (இவையாவும் ஈண்டிருக்க) எப்பொழுதும் என்னோடு இருந்த என் மனமானது, திருமகள் போலும் அத்தலைவி சென்ற வழியை அறிந்து எவ்வாறு போயிற்று? இது மிக வியப்பாகும்!

[இப்பாடலுள் தலைவன் தன் ஆழ்ந்த காதலைப் புலப்படுத்தும் நயம் சுவையாக உளது].

—★—

தோற்றுவாய்

தலைவன் தன் காதல் வேட்கையைப் புலப்படுத்தத் தோழி வாயிலாகக் கொடுத்தனுப்பிய நறுந்தழையை, அவள் பெற்றுக் கொண்டபின் எய்திய நிலையையும், செய்த செயலையும் தோழி தலைவனிடம் கூறித் தலைவியின் ஆரா அன்பினைத் தெரிவித்தது. இப்பாடல் "இறைவி கையுறை ஏற்றமை பாங்கி இறைவற்குக் கூறல்" என்னும் அகத்துறையைச் சேர்ந்தது.

## (கட்டளைக் கலித்துறை)

68. குறித்தாள் குறித்தொன்றைக் கூறப்பெ
ருள்நின்றன் கொய்தழையைப்
பறித்தாள் பறித்துப் பவளச்செவ்
வாய்வைத்துப் பையப்பையக்
கறித்தாள் கறித்தபின், கண்டன்
புகார்வஞ்சி காந்தளங்கை
மறித்தாள் மறித்தள வேகண்கள்
நீர்வந்து மல்கினவே

ஐயனே! நீ தந்த தழையை யான் கொண்டு சென்று கொடுத்தபோது, சோழற்குரிய புகார் நகரில் வாழும், வஞ்சிக் கொடி, போல்பவளாகிய தலைவி, அத்தழையையே குறித்து நோக்கினள்; நோக்கியவள் அதுபற்றி யாதொன்றையும் குறித்துப் பேசாதவளாய், அரிதாக நீ கொய்து தந்த அத்தழையை என் கையினின்றும் பறித்து வாங்கினள்; வாங்கியபின் அவா மேலீட்டால் தன் பவளம்போலும் வாயினிடத்தே வைத்துக் கறித்துச் சுவைத்தாள்; கறித்த பின்னர் (அத்தழையை மார்போடு வைத்து அணைப்பதற்காகக்) காந்தள் மலர் போலும் தன் கைகளைக் கவைபோலும் பின்னினள்; பின்னிய (அணைத்த) அவ்வளவிலே கண்களில் மகிழ்ச்சிப் பெருக்கால் நீர் வந்து நிறைந்தது. என்னே அவள் தன் காதல் இருந்தவாறு!

—★—

தோற்றுவாய்

இடபவாகனத்தின் மீது இறைவன் உலாவந்த காட்சியைக் கண்டு வேட்கையுற்ற ஒருத்தி, தன் நிறையாகிய பெண்மை அழியாது உய்ய, மீண்டும் அக்காட்சியை வேண்டி வருந்துவது.

{கட்டளைக் கலித்துறை}

69. பெற்றத்தி லேவரு கோலமுந்
தானுமென் பெணமைஉய்ய
முற்றத்தி லேவந்து முன்னிற்கு
மோ? முது வானவர்தம
சுற்றத்தி லே, கதிர் தோற்றத்தி
லே, தொல்லை நான்மறைநூல்
அற்றத்தி லே, கழுக் குன்றத்தி
லே, நிற்கும் அற்புதனே.

தலையாய தேவர் தம் குழுவிலும், கதிரவனுடைய ஒளியிலும், பழமையான நால்வேதங்களின் முடிவிலும், திருக்கழுக்குன்றத்திலும் விளங்கிநிற்கும், ஆதியும் அந்தமுமில்லா அற்புதனாகிய சிவபெருமான், என் பெண்மைக்குரிய நிறையழியாமல் யான் உய்யுமாறு காளையின்மீது அமர்ந்துவரும் திருஉலாக் கோலத்தோடு என்னுடைய மனை முற்றத்திலே மீண்டும் வந்து தோன்றி எனக்கு முன்நின்று காட்சி தந்தருள்வானோ? தராவிடின் உய்யேன்.

—*—

தோற்றுவாய்

பரம்பொருளின் அர்த்தநாரீச்சுவர மூர்த்தத்தை வியந்து பாராட்டும் இச்செய்யுள், சிவன், சத்தியாய இருவர் தம் கலப்பைக் காதல் மிகுதியால், உடல் உருகிக் கலந்தனவாகக் கூறும் கற்பனை நயம் எண்ணி மகிழ்தற்குரியது.

{கட்டளைக் கலித்துறை}

70, அருவிக் கிரிமகள் தன்னிடம்
நின்வலம் கண்டதல்லால்

இருவர்க்கும் ஓரிரு பாகமும்
  கண்டிலம் இன்கனிவாய்
பருகிக் குமுதந் தமுதூற
  லுண்ட பசும்பதத்தே
உருகிக் கலந்தன வோஇரு
  பாகமும் உங்களுக்கே?

சிவபெருமானே! உன் திருமேனியின் வலப்பாகத்தை, அருவி பாயும் மலைமகளிடத்தே கண்டோம். (அவ்வாறே கிரிமகளுடைய மேனியின் இடப்பாகத்தை உன் திருமேனியின் இடப்பக்கத்தே கண்டோம்) அல்லாமல் உங்கள் இருவருடைய மற்றுமோர் பாகமாகிய இடப்பாகம் வலப்பாகமாகிய இரண்டினையும் காணப் பெற்றிலோம். எனவே, நீ அம் மலைமகளின் இனியகனி போலும் இதழையுடைய குமுதவாயின் அமுதூறலைப் பருகி இருவரும் கலந்துண்டகாதற் செவ்வியின்போது, நும்முடைய திருமேனியின் அவ் இரண்டு பாகங்களும் அன்பால் உருகி ஒன்றாகக் கலந்து விட்டன போலும்? (வேறு யாதும் காரணம் இல்லையே).



தோற்றுவாய்

வரம்பில்லாத ஆற்றலுடைய முற்றறிவினையுடைய இறைவனைக் "குழகன்" எனக்கூறல் பொருந்தாது, எனக்கூறுவார் போன்று இறைவன் தன் மூவா இல் நலத்தை வியந்தது.

{கட்டளைக் கலித்துறை}

71. நீடும் பிரமனை மாலைப்பெற்
  றானே, நிறைந்தமறைக்
காடும்,என் நெஞ்சும் விடாப்பழை
  யோனைக், கணிப்பவர்க்கு

**நாடும் படியில் பலவண்ட**
**மீன்ற நலக்கிழத்தி**
**கூடும் கிழவனை என்னே**
**உரைப்பர் குழகனென்றே!**

உயர்ந்த தேவர்களாகிய பிரமனையும், திருமாலையும் (முறையே படைக்கவும் காக்கவும்) தோற்றுவித்தவனை, அருளால் நிறைந்த திருமறைக்காட்டையும் (இருளால் நிறைந்த) என் நெஞ்சத்தையும் விடாமல் உறைகின்ற பழையோனை, கணக்கிட்டுப் பார்க்க ஆராய்வார்க்கு, ஆராய இயலாத எண்ணற்ற பல உலகங்களைப் பெற்றளித்த, உமாதேவியைக் கூடிமகிழும் உரிமையுடைய பரம்பொருளாகிய இறைவனை (அறியார்) 'குழகன்' என்று உரைப்பார்; அவர் அறிவிருந்தவாறு என்னே!

[குழகன் = (சுந்தரன்) அழகன்—எனவே இளையன் என்றபடி—இதனுள் "கிழவனைக் குழகன் என்பார்" என அமைத்துள்ள சொல்நயம் சுவைத்தற்குரியது].

—o—

தோற்றுவாய்

தலைவியை முதன்முதல் கண்டு, கந்தருவமணத்தால் கூடி மகிழ்ந்ததைப் பின்பு ஒருகால், தலைமகன் அவள் ஊடலைத் தவிர்ப்பதற்காகக் கூறியது.

{கட்டளைக் கலித்துறை}

**72. கண்ணார் மணியிற் கரந்துவைத்**
**தேன்; கச்சிக் கன்னியுன்னை**
**விண்ணு யகர்மணம் செய்துகைப்**
**பற்றிய வேளையிலே**

தண்ணுர் மதிமுகம் வேர்ப்ப,மென்
முரல் த்தும்ப, சஞ்நே
உண்ணுண மும்நிறை யுந்,திரு
வாய்ந்த ஒடுக்கமுமே.

கச்சியம்பதிபோலும் கன்னியே! உன்னைக் கந்தருவமாகிய களவு மணஞ்செய்து கைப்பற்றி(க்கூடி)ய அவ்வேளையில், குளிர்ச்சி பொருந்திய முழுமதிபோலும் நின்முகம் வியர்வை அரும்ப, மெல்லிய புன்முறுவல் பூப்பச் சிறிதே உள்நிறைந்த நாணமும், நிறையும் விளங்க அழகொழுக நின்ற நின் அடக்கத்தை, என் கண்ணில் ஒளிரும் பாவையுள் மறைத்து வைத்திருந்தேன், அன்றே!

['அந்நினைவு இப்பொழுதும் உளது; எப்பொழுதும் இருக்கும்' எனத் தன் ஆழ்ந்த காதலைப் புலப்படுத்துகிறன்].

—*—

தோற்றுவாய்

தலைவியை எய்தவிடாமல் இடைநிற்கும் (வரைதல் வேட்கையால்) தோழியிடத்தே, மடலேறியாவது தலைவியைப் பெற விழையும் தன் குறிக்கோளைத் தலைவன் கூறுவது. இது 'மடற்கூற்று' என்னும் அகத்துறையைச் சார்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

73. விரைவார் குழலணங் கேவாணர்
கோன்வியன் ஆறை,சுற்றும்
திரைபாய் மரக்கலம் போலநின்
றேன் கிழி தீட்டவென்றல்

**உரைவாய் பிழைவரு மென்றஞ்சி**
**னேனுமை யுள்ளங்கொண்டு**
**வரைபாய வும்மஞ்சி னேன்றிரு**
**மேனி வருந்துமென்றே.**

மணம் பொருந்திய நீண்ட கூந்தலையுடைய அணங்கே! வாணர்களின் அரசனுடைய `ஊராகிய பெரிய ஆற்றாரிலே, சுற்றிலும் அலை வீச நடுவே கிடந்து அலைப் புண்ணும் மரக்கலத்தைப் போல (உள்ளம் அலைப் புண்டு) நிற்கின்றேன். இனி மடலேறுவதற்காகத் தலைவியின் உருவத்தைக் கிழியில் தீட்ட எண்ணினால், 'அவள் வாயால் மொழியும் இன்னுரைகளைத் தீட்ட இயலாத குற்றம் என்பால்வரும்' என்று அஞ்சினேன். மலையிலிருந்து கீழே வீழ்ந்து (வரைபாய்ந்து) மடிய எண்ணினால் 'நீங்கள் என் உள்ளத்திலே விளங்குவதால், நும் திருமேனி வருந்தும்' என அதற்கும் அஞ்சினேன். இனி (நீ அருள்வதன்றி)ச் செய்வது யாதுளது?

[காம அலைகளால் வருந்திச் சுழலும் தலைவனுக்கு, நீரலைகளால் அலைப்புறும் மரக்கலத்தை உவமையாகச் சொல்லியது சிறப்பாக உளது. "உரைவாய் பிழைவரும்" என்னும் தொடர் 'சொன்னலே தீங்குவரும்' எனக் குறிப்பாகப் பொருள் தருவது நயமாக உளது].

—☆—

தோற்றுவாய்

பாண்டியன்மீது காதலுற்ற ஒரு தலைவி, காமானலத்தால் வெதும்பித் "தான் துயிலும் பாயலைப் பல்லாற்றுனும் குளிரச் செய்தே படுப்பேன்" எனக் கூறுகிறுள்.

### (கட்டளைக் கலித்துறை)

74. **மனுநீதி கண்ட வளவர் குசேலனும் மாலைநல்கான்**
**இனிநீ ரொருவர் விலக்கில் லேனிணை யாரமுத்தின்**
**தனிநீர் வடமிட்டுச் சந்தனம் பூசித், தனித்தொருகை**
**பனிநீரை யூறவிட் டேபடுப் பேன்மலர்ப் பாயலிலே.**

மனுநீதியைத் தன் செங்கோலால் பரப்பியாளும் பாண்டியர் குலத்தலைவனும், தன் வேப்பமாலையை எனக்கு நல்கானாயினான். (நீங்களும் பெற்றுத்தரவில்லை.) எனவே, இனி நீங்கள் ஒன்றுகூடி விலக்கினாலும், ஈண்டு நில்லேன். ஒப்பற்ற குளிர்ச்சிபொருந்திய இரட்டை முத்துவடங்களை அணிந்துகொண்டு, சந்தனத்தை (உடல் முழுதும்) பூசிக்கொண்டு, ஒருகை தனிப்பனிநீரை உடம்பிலே ஊறவிட்டுப்பின், மலர்களால் நிறைந்த பாயலியே படுப்பேன்; (அவ்வளவிலே சிறிது என் உடல் வெப்பம் தணியும்) என்றாள்.

—*—

தோற்றுவாய்

'செண்பகமாறன்மீது கொண்ட காமானலத்தால் உடல் வெந்தாள்' என வாழைக்குருத்திலே கிடத்தும் தோழியரிடத்தில் தலைவி கூறுவது.

**(கட்டளைக் கலித்துறை)**

**75. மல்லற் புயத்துப் பொருகாளை**
**செண்பக மாறன்பொற்றோள்**
**புல்லக் கிடப்பதென் றோ,மட**
**வீர்! முற்றம் பூட்டியெனைக்**
**கொல்லக் கிடத்தும் இளந்தளிர்**
**வாழைக் குருத்தைவிட்டு**
**மெல்லக் கிடத்திவைப் பீர்கொண்டு**
**போயந்த வேம்படிக்கே!**

வளம் பொருந்திய திண்ணிய தோள்களையுடைய, போர்வல்ல காளைபோல்வான், செண்பகமாறனுடைய பொலிவமைந்த தோள்களை, யான்அணைத்துக்கொண்டு கிடப்பது எந்தநாளோ? (அதனைச் செய்யமாட்டாத) மடவீர்காள்! முற்றத்தைப் பூட்டிவைத்துப்பின் ,

என் உடல் வெப்பத்தைக் குறைப்பதாக எண்ணிக்கொண்டு, என்னைக்கொல்லும் தன்மைவாய்ந்த இளந்தளிரையுடைய வாழைக் குருத்திலே கிடந்துகின்றீர்; (உண்மையில் யான் பிழைக்க வேண்டுமானுல் முற்றத்திற்கு வெளியே தழைத்துப் பூத்து நிற்கும்) அந்த வேப்ப மரத்தடியில் கொண்டுபோய்க் கிடத்தி வைப்பீராக.

[வேம்பு பாண்டியனுக்குரியதாகலின் இவ்வாறு கூறினுள்].

—*—

தோற்றுவாய்

ஊடிக் கதவடைத்திருக்கும் சோழமாதேவியிடம் 'சோழன் வந்து இரந்து வேண்டினுன்; உடனே திறப்பாயாக' எனத் தோழி (புலவருமாம்) வேண்டியது. இதனுள் சோழன் வென்ற நாடுகளைக் குறிப்பாகப் புலப்படுத்திய திறம் காணத்தக்கது.

**(கட்டளைக் கலித்துறை)**

**76. கரத்துஞ் சிரத்துங் களிக்கும்**
**களித்தொடைக் கண்டன்வந்தான்**
**இரத்துங், கபாட மினித்திறப்**
**பாய், பண் டிவனணங்கே**
**உரத்துஞ் சினந்துங் கபாடம்**
**திறந்திட்ட துண்டிலங்கா**
**புரத்தும் விலாட புரத்துங்கல்**
**யாண புரத்தினுமே.**

மன்னவன் காதலுக்குரிய அணங்கே! கரங்களிலும் சிரத்திலும் முறையே பாத்தொடையும் பூத்தொடையும் களிக்கும் சோழ மன்னன், உன் அருளுக்கு இரந்து வந்துள்ளான்; இனி உடனே கதவைத் திறப்பாயாக! ஏனெனில், பண்டு இவனுடைய வலிமை

யாலும், வெகுளியாலும், இலங்காபுரி மதிற் கதவும், விலாடபுரத்துக் கதவும், கலியாணபுரத்துக் கதவும், தாமே திறந்ததுண்டு; ஆதலான்.

['களி'த்தொடை = பாவுக்காயின் இன்பம், பூவுக்காயின் தேன். அரசனைத் திருமாலாகக் கூறும் மரபு பற்றி இலங்காபுரிக் கபாடம் திறந்தான் என்றார்.]

—0—

தோற்றுவாய்

சிவந்தெழுந்த மழவராயன், போர்கருதிப் படையெடுத்துச் சென்ற ஊரில் வாழும் ஒரு தலைவி, அவனைக் கண்டு காமுற்று, அதனால் உடல் மெலிந்ததனை அறியாது, பலவாறு பரிகாரம் செய்யும் செவிலியரிடத்து அவள் கூறியது.

{கட்டளைக் கலித்துறை}

77. தண்டுவந் தானென்றன் மேற்பொரா
 வே, பெற்ற தாயரது
 கண்டுவந் தேது பரிகாரஞ்
 செய்தனர் கற்பகக்காக்
 கொண்டுவந் தான், சிவந் தான்மழ
 வேசன்றென் கோடையிற்போம்
 வண்டுவந் தாலெதிரி யும்முயிர்
 போவதும் வாழ்வதுமே.

கற்பகச்சோலையை இவ்வுலகிற்குக் கொண்டுவந்து, யாவர்க்கும் அளிக்கும் மழவர்குல இறைவனாகிய சிவந்தான், இந்நாள் படையொடு வந்தான். (இவ்வூரை வெல்ல என்று கருதியிருந்தார்கள்; அது தவறு.) என் மேல் போரிடுவதற்காகவே வந்தான். அதனைக்கண்டும், என்னைப்பெற்ற தாயார் யான்

வாடாமலிருக்க என்ன பரிகாரஞ் செய்தனர்? ஒன்றுமில்லை: இனி, யான் (தூதாக அம்மன்னன் வாழும்) தென் கோடைநகருக்குப் புகவிட்ட வண்டானது, திரும்பி வந்தபின்புதான் தெரியும், என் உயிர் போவதும், போகாமல் என் உடம்பிலிருந்து வாழ்வதும்; இதனை அறிவீராக!

— * —

*தோற்றுவாய்*

*வரகைப்பதி பள்ளிகொண்ட மழவன்மேல் மையலுற்ற ஒரு தலைவியின் வருத்தத்தைச் செவிலி கூறி, அவனருள் வேண்ட, அவன் அருளுவதாகக் கொண்டு கூறியது.*

**(கட்டளைக் கலித்துறை)**

**78. பாலினு மின்சொற் குயிலினு**
**மென்மொழிப் பாவைகொங்கை**
**மேலினுங் காம சரந்தைக்கு**
**மோ? வட வேங்கடம்விட்**
**டாலினும் வேலை நடுவினும்**
**பாம்பினு மாத்துரத்துங்**
**கோலினுங் கண்துயில் வாய்மழ**
**வாபள்ளி கொண்டவனே.**

வடவேங்கடத்திற்கொண்ட, நின்றதிருக்கோலம் நீங்கி ஆலிலையின்மேலும், திருப்பாற்கடல் நடுவில், ஆதிசேடனாகிய பாம்பின்மேலும், ஆத்துரத்துங் கோலினும் — (இதற்குச் சரியான பொருள் புலப்படவில்லை: பசுக்கூட்டங்களைக் காத்தோம்பும் ஆயர் தம் கோலின் கண்ணும்) அறிதுயில்கொள்ளும் பள்ளிகொண்ட மழவா! பால்போலும் இனிய சொற்களையும், குயில்போலும்

மெல்லிய மொழிகளையும் பேசும் பாவைபோல்வாளாகிய என் மகளின் மார்பகத்தே, இன்னும் காமவேளின் மலரம்புகள் வந்து தைக்குமோ? நீ அருள்வாயர்கலின் இனித்தைக்காது.

—*—

தோற்றுவாய்

சண்பகமாறன்மீது காதல்கொண்டு விரகத்தால் வருந்தும் ஒரு தலைவி கூற்று.

## (கட்டளைக் கலித்துறை)

79. முடியாது வாழஎன் ஞலன்று
நீதந்த மோகமன்றிப்
பிடியா தொருசற்றுங் கண்துயி
லாது, பெருகுங்கங்குல்
விடியாது. முன்றில் அகலா
நிலாவெனும் வெள்ளஞ்சற்றும்
வடியாது செண்பக மாரு
மதுரை வரோதயனே!

மதுரையம்பதியில் வரத்தால் தோன்றியுள்ள செண்பகமாற பாண்டியனே! நீ எனக்கு அன்று அளித்த காதல் மோகமன்றி வேறொன்றும் எனக்குப் பிடிக்கவில்லை; மேலும், என் கண்கள் சிறிதும் துயில் கொள்ளா; மென்மேலும் பெருகிவரும் இருளோ விடியாது. எங்கள் முற்றத்தைவிட்டு அகலாத, நிலாவென்னும் கொடிய அனல்வெள்ளம் சிறிதும் வடியாது. எனவே (நீ அருள் செய்தாலன்றி) இனி என்னுல் வாழவே முடியாது, காண்பாயாக!

[பிடியாது என்பதற்கு, நீ யளித்த மோகமன்றி எனக்கு வேறு பற்றுக்கோடில்லை எனவும் பொருள் காணலாம்.]

—*—

தோற்றுவாய்

'ஏகாம்பரச்சம்பன்' என்னும் மன்னன்மீது காதலுற்ற, ஒரு தலைவியின் பிரிவுத்துயரைத் தோழி கூறியது.

(கட்டளைக் கலித்துறை)

**80. எறிக்கும் புகழ்க்கச்சி ஏகாம்**
**பரச்சம்பன் எண்டிசைக்கும்**
**பொறிக்கும் புலிக்கொடி யான்புயம்**
**வேட்டமின் பூங்களப**
**வெறிக்குங் குமக்கொங்கை மீதே**
**விழிசொரி வெள்ளந்துள்ளித்**
**தெறிக்குந் திவலை யழிக்குஞ்சிந்**
**தூரத் திலகத்தையே.**

ஒளி வீசும் புகழ்மிக்க காஞ்சியில் விளங்குபவனாய், எட்டுத் திசையிலும் வெற்றியோடு, தன் புலிக்கொடியைப் பொறிக்கும் ஏகாம்பரச்சம்பனுடைய தோள்களின் மீது வேட்கைகொண்ட, இத்தலைவியின் பொலிவோடு பூசிய சந்தனம் நாறும் குங்குமக் கொங்கைகளின்மீது, அவள் விழிகள் சொரியும் கண்ணீர்வெள்ளம் துள்ளித் தெறிக்கும் திவலையானது, அவள் நெற்றித் திலகத்தையே கரைத்து அழிக்கும் நிலையைக் காண்பீராக.

[திவலை = நீர்த்துளி. எறி — எதுகை நோக்கி 'எறி' என நின்றது.]

—o—

தோற்றுவாய்

தேற்றமுடியாத அளவிற்குத் தன் மகள் கொண்ட துயரத்திற்குக் காரணம் கூறுவாள் போலத் தலைவியின் விரகதாபத்தைச் செவிலி புலப்படுத்தியது.

(கட்டளைக் கலித்துறை)

81. கிழக்கோதம் தெற்கி லிளந்தென்றல்
மேற்கினிற் கீற்றுப்பிறை
அழற்கோலும் உத்தரத் திக்கினில்
வாடை அவையுமன்றிக்
குழற்கோ கிலமென் குலக்கோ
கிலத்தைக் கொடுமைசொல்ல
வழக்கோசொல் செண்பக மாறு
மதுரை வரோதயனே!

மதுரையம்பதியில், வரத்தால் உதித்துவிளங்கும் செண்பக மாற பாண்டியனே! கிழக்கே நோக்கினால் அலைவீசும் கடல்; தெற்கே இளந்தென்றல்; மேற்கே என்றால் நிலாவினது பிறைக் கீற்று; வடதிசையோ எனின் அனல் தாவும் வாடைக்காற்று. அவையல்லாமல் ஆயர் ஊதும் குழலோசை; குயில் கூவும் ஓசை. (இவையும் முழங்கும் இந்நிலையில் வருந்தநதே என்று) என் குலமகளாகிய கோகிலத்தை கொடுமொழிசொல்லி அடக்குவதற்கு நீதியுண்டோ! கூறுவாயாக!

[பிரிந்தார்க்குக் காதல் வேட்கையை மிகுவிக்கும் பொருளாக நான்கு திசைக்கும் நான்கு பொருள்களை அமைத்துக்காட்டிய சிறப்பு உணர்ந்து மகிழத்தக்கது. கீற்றுப்பிறை = உடம்பைக் கூறுபடுத்தும் பிறை என ஒரு பொருள் தோன்றிற்று. குழற் கோகிலம் என்பது உம்மைத்தொகை. வழக்கு = குறிப்பால் நீதியை உணர்த்திற்று.]



தோற்றுவாய்

திருவரங்கநாதன்மேற் காதல்கொண்ட தலைவியின் துயரத்தை எண்ணிச் செவிலி கூறியது.

### (கட்டளைக் கலித்துறை)

82. விடியாக் கருங்கங்கு லுந்தனிப்
பாயலும் வெண்டரளப்
பொடியாக்கும் மேனியும் போகா
வுயிரும் பொறிவண்டுசூழ்
கடியாக்குந் தண்ணந் துழாய்மாலை
கேட்ட கதையுமெங்கள்
அடியார்க் கெளிய பெருமா
ளரங்கர் அறிந்திலரே?

அடியார்க்கு எளியராய் அருள்புரியும் எங்கள் திருவரங்கப் பெருமாள் (என் மகளை வருத்தும்) விடியாத நெடிய இருளையும், அவள் உறங்காமையால் தனித்தே கிடக்கும் பாயலையும் அன்றிப், புள்ளிகள் நிறைந்த வண்டுகள் சூழ்ந்து ஆரவாரிக்கும் மணம் கமழும் தண்ணிய துழாய் மாலையை, அவள் விரும்பிக்கேட்ட கதையையும் அறிந்திலரோ? என்னே எம்பெருமான் அருள்?



#### தோற்றுவாய்

பள்ளிகொண்ட மழவராயனுடைய ஆற்றலையும், அருளையும் பாராட்டும் வகையில், அவன் பெயர்க் காரணத்தை விளக்குவார் போல, அவனைத் திருமாலாக ஒரு புலவர் கூறுவது. இது பாடாண் டிணையுள் பூவை நிலையைச் சார்ந்தது.

### (கட்டளைக் கலித்துறை)

83. புள்ளிகொண் டேயொரு மான்வந்து
போதவப் போதரக்கன்
துள்ளியங் கேவிழ வாளிதொட்
டாய்தொண்டை நாடுடையாய்!

அள்ளியங் கேவெண்ணெய் எல்லாம்
அருந்தி யரவணைமேற்
பள்ளிகொண் டாய்மழ வாபர
ராச பயங்கரனே!

வேறுபட்ட அரசர்கள் எல்லோரும் அஞ்சும்படியான ஆற்ற லுடைய மழவராயனே! தொண்டை நாடுடைய கோவே! அந் நாள் புள்ளிகளையுடையதொரு அழகிய மான் வந்து (சீதாப் பிராட்டியை மயக்கிச்) செல்லுதலைக்கண்டு, அப்போதே (அதனுள் ஒளிந்திருந்த மாரீசனாகிய) அரக்கன் அங்கே துள்ளிவிழுமாறு அம்பினை எய்தாய். (அத்தகைய நீ ஆயர்பாடியிலே ஆய்ச்சியர் பேணிவைத்த) வெண்ணெய் எல்லாவற்றையும் அள்ளி அள்ளி அருந்தி, (அக்களைப்புத்தீர) ஆதி சேடனாகிய அரவணையின்மேல் பள்ளி கொண்டாய். (அதனால் நீ பள்ளிகொண்ட மழவனானாய் போலும்).

"புள்ளிகொண்டே ஒருமான்" என்பது புள்ளிமான் என்ற பொருளைத் தருவதோடு, "ஒரு குறிக்கோளை கருதி வந்த மான்" என்ற குறிப்பையும் தருதல் காணலாம்.

—★—

தோற்றுவாய்

மதுரை, சோமசுந்தரக் கடவுள் மீது காதல் கொண்ட தலைவி. "அவர் புகழை நீ பேசுமட்டும் உயிரோடிருப்பேன்; நீ பறந்து சென்றால் யானும் இறப்பேன்" எனச் சிறு நாரைப் பறவையிடம் கூறுவதாக அமைந்துளது இப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

84. *மன்னும் புகழ்ச்சுந் தரன்மது*
*ரேசன் வளமையின்னும்*
பன்னுந் தொறுமுண்டு; பைங்குரு
கீர்! பனி வாடைகுன்ற

தின்னும் படியும் பொறுத்தேகு
முங்கள் சிறகடிக்கென்
றுன்னும் பொழுது பறக்குமென்
ஞவி யுமக்குமுன்னே.

இளநலம் வாய்ந்த குருகுகளே! நிலைபேறுடைய புகழை யுடைய, மதுரை நாயகனுன சுந்தரேசனின் இனிய பெருமைகளை யெல்லாம் நீர் சொல்லும்வரை (என் உயிர்) உண்டு; பனி நிறைந்த வாடைக் காற்றுலது, என் உணர்வைச் சிறிது சிறிதாக உண்ணுகின்ற நிலையைக் கண்டு, உங்கள் உள்ளத்தே இரக்கத்தைச் சுமந்துகொண்டு, நீங்கள் என்னைவிட்டுப் பறந்து செல்ல எண்ணி, உங்கள் சிறகுகளை அசைக்க நினைக்கும் பொழுது, என் உயிர் உங்களுக்குமுன் பறந்துவிடும் என்பதை அறிவீராக.

—o—

தோற்றுவாய்

'தலைவியை விட்டுப் பிரிந்தான்' எனத் தோழி, தலைவனைக் கொடுமைகூறக் கேட்ட தலைவி, அது பொருளாய்த் தன் கற்பு மேம்பாடு தோன்றக் காதலின் நிலையைக் கூறுவது. இஃது "தோழிஇயற்பழிக்க, தலைவி இயற்படமொழிதல்" என்னும் அகத் துறையைச் சார்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

85. பெருக்கெடுக் கும்புனல் வைகையின்
மன்னரைப் பின்தொடர்ந்து
திருக்கடைக் கண்சிவந் தான்சிவந்
தான்றன் கரியனனீர்
முருக்கிதழ்ச் செங்கனி வாயணங்
கேமுனி யேல்முனியேல்
மரக்கலக் காகமன் றேருதமி
யேனும் மகிழ்நருமே.

"நீர்வெள்ளம் பெருக்கெடுத்துப் பாயும் வையையாறு சூழும் மதுரை மன்னர்களை வென்றழிப்பதற்காகப் பின்பற்றிச்சென்று' அழகிய தன் கடைக்கண்கள் வெகுளியாற் சிவந்தாகிய 'சிவந்தான மழவராய'னுடைய — கரியனனீர் — முருக்கிதழையும், கொவ்வைக் கனியையும், போன்ற வாயையுடைய அணங்கே! வெறுப்பால் முனியாதே; ஏனெனில், தமியேனாகியயானும், எனை மணந்த தலைவரும், முறையே அலைகடல் நடுவே நிற்கும் மரக் கலத்தையும், அதன்மேல் உறையும் காக்கையையும் போல்வேம்" என அறிவாயாக.

[இச்செய்யுளின் இரண்டாமடி இறுதிச்சீர் செம்மையாக இல்லை. கரி அன்னநீர்.........முனியேல் எனக்கொண்டு, 'மழவ ராயனின் சினங்கொண்ட யானையைப்போல.......நீர்முனியேல்' என்று உரை காணலாம். பொருந்துமேற்கொள்க. எவ்வாற்றானும் 'தலைவன், தன்னைவிட்டு நீங்கமாட்டான்' என்பதை 'மரக்கலக் காக்கை' என்னும் உவமையால் விளக்கிய சிறப்பு, எண்ணி மகிழ்தற்குரியது. 'கடைக்கண் சிவந்தான்; அதனாற் 'சிவந்தான்' எனப்பெயர் பெற்றான்' என்று தோன்றுமாறு சமத்காரமாய்ப் பாடிய திறம் போற்றத்தக்கது].

—*—

தோற்றுவாய்

கார்காலத்தில் வருவேனெனப் பிரிந்த தலைவன் மீண்டு வருங்கால், தேர்ப்பாகனிடம் 'நமக்கு முன்னே கார்முகில், தலைவி இருக்குமிடத்திற்கு முந்துவதால், அவள் நிலைமை என்னவாகுமோ' என்று தன்விரைவு தோன்றக் கூறியது. இஃது "வினைமுற்றினான் மீண்டு வருங்கால் பாகனொடு சொல்லல்" என்னும் அகத் துறையைச் சேர்ந்தது.

**(கட்டளைக் கலித்துறை)**

**86. புல்லிவிட் டுப்பிரி கின்றவன்**
**றேபுயல் முந்துமெனச்**

சொல்லிவிட் டுப்பிரி யப்பெற்றி
 லேம்தொண்டை நாடுகொளக்
கொல்லிவிட் டுச்சிறப் பார்திறம்
 மாறன் குளிர்கொண்டலே
வல்லிவிட் டுக்கெடுத் தாலென்செல்
 யாதந்த வல்லியையே?

தலைவியை அணைத்து இன்மொழிபேசித் தொண்டை நாட்டை வெல்லப்பிரிந்த அப்பொழுதே, ஒருகால் எனக்கு முந்திக் கார் முகில் வரினும் வரும் (அதுகண்டு கலங்காதே யான் விரைந்து வருவேன்) எனச் சொல்லி விட்டுப் பிரிந்து வந்தோமில்லை. கொல்லிமலையைவிட்டு வந்து சிறப்பாகத் திகழும் தலைவியின் தனிமைகண்டு, மாறவேள் குளிர்ந்த கொண்டலாகிய யானையின் கால் தலையை வெட்டிவிட்டுச் செலுத்தினுயின், அக்கார் முகில் யானை அந்தக் கொடிபோல்வாளாகிய தலைவியை என்ன (துன்பங்களைச்) செய்யாது? எல்லாம் செய்யுமன்றோ!

[புயல் = கார்முகில், கொல்லிமலையில் இருக்கும் பாவையே இத்தலைவி என்பான் 'கொல்லிவிட்டுச் சிறப்பார்' என்ருன். வல்லி = யானையின் கால்களைப் பிணிக்கும் சங்கிலி. வல்லி = கொடி. இருளே மன்மதனுக்கு யானையாகலின், அதனை ஒத்த கார்முகிலை யும், யானையாக வைத்துக் கூறப்பட்டது.]

—★—

தோற்றுவாய்

தலைவன் பரிசாக அளித்த முத்தாரத்தைத் தலைவி பெற்று மகிழ்ந்தாளெனத் தோழி தலைவனிடம் கூறுவது. இஃது "கையுறை ஏற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல்" என்னும் அகத்துறையைச் சேர்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

87. கொத்தார் தொடைப்பள்ளி கொண்டான்
மழவன்றென் கோடையன்னூர்
கைத்தா மரைபட மாணிக்க
மானது, கண்குறுக
வித்தார நீல மணியா
னது, வெண் முறுவல்செய்ய
அத்தா! பழையநல் முத்தாச்சு
நீதந்த ஆரமின்றே!

தலைவனே! பூங்கொத்துக்கள் நிறைந்த தோள்மாலையை அணிந்து விளங்கும், பள்ளி கொண்ட மழவராயனுடைய தென்கோடைப்பதியை ஒத்த வளமுடைய தலைவியின் பொருட்டு நீ தந்த முத்து (மாலையானது) அவள் தன் தாமரைக்கையிடத்தே இருந்தபோது செம்மை நிறைந்த மாணிக்கமணி போல விளங்கிற்று. (அதனை ஒற்றிக்கொள்ளக்) கண்களிடத்தே கொண்டு சென்றபோது நீலமணிபோல விளங்கிற்று (முத்திதருவதற்காக) வாயிடத்துக்கொண்டு சென்றபோது அவள் புன்முறுவல் பட்டதனால் பழைய முத்தாக விளங்கிற்று காண்!

—*—

தோற்றுவாய்

வினைமுற்றி மீண்டுவரும் தலைவன் பரிமாவை விரைந்து செலுத்தும்படிப் பாகனிடத்துக் கூறுவான், தலைவியின் நிலையை எண்ணிக் கலங்கியது.

(கட்டளைக் கலித்துறை)

88. காகோ தரத்திற் றுயில்வோ
னழகன் கானநன்னாட்(டு)
ஓகோ பரியின் நடையிது
வோ? குவ டேன்றிப்பெய்யும்

**மேகோ தகமும் நயனோ**
**தகமும் விரவிவழி**
**ஏகோதகம் பொழிந் தால்வல**
**வாஇதற் கென்செய்துமே?**

தேர்வலவனே! ஆதிசேடன்மேல் அரிதுயில் கொள்வோனாகிய அழகனுடையகான (முல்லை நிலத்தை) நாட்டைக்கடந்து செல்லும் அரசக்குதிரையின் விரைந்த நடை இவ்வளவுதானா? ஓ! (வியப்பு) மலைச் சிகரங்களிலே ஊன்றிப்படிந்து பெய்யும் மழைநீரும் (தலைவி யின்) விழிபொழியும் நீரும் கலந்து, நாம் செல்லும் வழியில் ஒரே மழையாகப் பெய்யுமானால் இதற்கு நாம் என் செய்வோம்?

['ஓகோ' என்பதை வியப்பிடைச் சொல்லாகவும், 'அழகன்' ஒரு வள்ளலாகவும் 'கானநாடு' அவனுடையதாகவும், கொள்ள லாம். உதகம் = நீர்.]

—*—

தோற்றுவாய்

அறிவு கலைஞானங்களைவிட ஆடையணி செல்வத்திற்கே இவ்வுலகம் மதிப்பளிப்பதனைக் குறிப்பாக எள்ளிப்பாடியது.

**(கட்டளைக் கலித்துறை)**

**89. வாதாம் பலகலை கற்றுவந்**
**தாலுமிவ் வையந்தனில்**
**ஏதாம் புனைநலம் இல்லான்**
**எழில்? நல் விடமுந்தந்து**
**பீதாம் பரற்கொரு பெண்தந்த**
**பாற்கடல் பின்புவந்த**
**வேதாந்த வித்தெனும் வானும்**
**பரற்கு விடந்தந்ததே!**

ஒன்ருென்று மாறும்படியான பல கலைகளையும் கற்று வந்தாலும் (கற்று உவந்தாலும்) இவ்வுலகத்தில் ஆடையணிகளால் நிறைந்து விளக்கும் தோற்ற மில்லாதவற்கு அமைந்த அழகால் என்ன பயனும்? பீதாம்பரத்தைத் தரித்துவந்த திருமாலுக்கு, பாயல் கொள்ள நல்லதோர் இடத்தோடு திருமகளையும் தந்த பாற்கடலானது, பின்பு (பாம்பணிந்து, புலியதளாடை தரித்து வந்த) வேதாந்தத்திற்கு முதல்வன் என்னும், (திசைகளையே) வானத்தை யாடையாகத் தரித்த சிவ பெருமானுக்கு விடத்தை யல்லவோ தந்தது!

[பீதாம்பரம் = பொற்பட்டுடை, வானும்பரம் = வானமாகிய ஆடை. கலைவல்லான் என்பதைச்சுட்ட "வேதாந்தவித்து" எனப் பட்டது].



தோற்றுவாய்

வீதி உலாவந்த கருணகரத் தொண்டைமான்மேல் மையலுற்ற கன்னியர்தம் நிலைகண்ட செவிலியர் கூற்று.

### (கட்டளைக் கலித்துறை)

90. **சரநிரைத் தாலன்ன கண்பனி**
**தூங்கத் தலைமிசைச்செங்**
**கரநிரைத் தாரையும் காண்பன்கொ**
**லோகலிங் கத்துவெம்போர்**
**பொரநிரைத் தார்தந்த மால்யானை**
**கள்பொன்னி நாடளவும்**
**வரநிரைத் தான்தொண்டை மான்வண்டை**
**மான்காதல் மன்னவனே.**

கலிங்கத்து நிகழ்ந்த கொடிய போர்க்களத்தில் தன்னேடு பொரவந்து தோற்றவர் செலுத்திவந்து நிரம்பச்செய்த மத யானைகளை எல்லாம் காவிரிபாயும் சோழ நாடளவும் வர நிரப்பிய

'தொண்டைமான்' என்னும் வண்டையம்பதியை உடைய காதல் மன்னவன், அம்புகளை நிரப்பினால் ஒப்பக் கண்ணீர்வடிய பரவசத் தால் கரங்களைத் தலைமிசைக் கூப்பித்தொழும் இக்கன்னியர் யாரை யேனும் காண்பானோ? காணமாட்டான்.

[கலிங்கப்போரில் பகைவர்தம் பெண்டிர் தலைமிசை கரஞ் சேர்த்துக் கண்ணீர்பெருக அரற்றிக்குலையும் வண்ணம் போர் செய்த கருணாகரனின் தறுகண்மையைக் குறிப்பாற் புலப்படுத்தும் இப்பாடலின் திறம் எண்ணி மகிழத்தக்கது.]

—()—

தோற்றுவாய்

திருப்பனந்தாள் அருளாளபட்டன்மீது மையல் கொண்ட தலைவி ஒருத்தி "அம்மகதேவரை நோவதால் காரியமில்லை; தன் மேனி வெப்பந்தீரச் சந்தனக் காடுகளில் கலந்துவரும் தென்றல் வீசும் தெற்குச் சாளரத்தைத் திறந்து, அவ்வழிவரும் காற்றால் ஆறியிருப்பேன்" என்கிறாள்.

(கட்டளைக் கலித்துறை)

**91. அனைக்காம தேனுவன் னான்பனந்**
**தாள்அரு ளாளபட்டன்**
**மனக்காதல் தீர மருவல்செய்**
**யான்மக தேவரைநொந்**
**தெனக்கா ரியம்வேறு யானுஞ்செய்**
**வேனது வேதெனிற்சந்**
**தனக்காவில் கால்வர வேதிறப்**
**பேன்தெற்குச் சாரளமே.**

விரும்பியவர்க்கு விரும்பியதை அளிக்கும் அன்னைக் காமதேனுவை ஒப்பவனாகிய திருப்பனந்தாள் அருளாளபட்டன் நம் மன வேட்கை தீர நம்மை அணைந்து இன்புறுத்தலைச்

செய்யான்; இனி மகாதேவனிடத்து முறையிட்டு நோவதனுல் யாது காரியம்? ஒன்றும் இல்லை; எனவே யானும் அதற்கு மாற்று ஒன்று செய்யக் கருதி யுள்ளேன். அக்காரியம் யாதெனக் கேட்பீராயின் சொல்வேன்; சந்தனச் சோலையிலே படிந்துவரும் தென்றற் காற்றுவீசும் தென்புறச் சாரளங்களைத் திறந்துவைத்து அவ்வழிவரும் அத்தமிழ்க்காற்றை நுகர்வேன்.

—★—

தோற்றுவாய்

விக்கிரம சோழன்மீது காதலுற்ற தலைவியின் துயர்கண்ட (தோழி) செவிலி கூற்று.

(கட்டளைக் கலித்துறை)

92. அரியெச்சில் போல அரவெச்சி
லும்மஞ் சரியெச்சிலும்
எரியெச்சி லும்மேழ் முனியெச்சி
லும்பொர ஏந்திழையாள்
கரியெச்சில் போன்றனள் விக்ரம
சோழ! கனைத்தகன்று
புரியெச்சில் உண்ட புயல்வண்ணன்
எச்சில் புரந்தவயன!

கனைத்த கன்றுனது வாய்வைத்து உண்ணச் சுரந்தமையால் எச்சிலான ஆவின்பாலை (ஆயர்பாடியில்) உண்ட கண்ணனுகிய புயல்வண்ணன் உண்ண எச்சிலாகிய இப்பூவுலகத்தைச் செங் கோலாற் புரந்தவனுகிய விக்கிரமசோழனே! நெருப்பின் எச்சி லாகிய கனல் போல, அராவுண்டு எச்சிலாகிய இந்நிலாவும் அஞ்சத் தக்க காற்றின் எச்சிலாகிய தென்றலும் கதிரவனின் எச்சிலாகிய அந்திமாலையும் அகத்திய முனிவன் உண்டுமிழ்ந்ததனுல் எச்சி லாகிய ஏழ்கடலலைகளும் இவள் உயிர்போகுமாறு போரிடுதலாலே இவ் ஏந்திழையாள் கரியின் எச்சிலாகிய சாம்பல் போல உடல் வெளுத்து நைந்தாள் என்செய்வேன்?

[அரிஎச்சில்: அரி=நெருப்பு. அரவுஎச்சில்: அரவு=இராகு கேதுக்களாகிய பாம்புகள். அஞ்சு அரி எச்சில்: அரி—காற்று அதன் எச்சில் தென்றல். இனி மஞ்சரி எச்சில் எனக்கொண்டு மேகத்தினின்றும் அரித்தொழுகும் பனிவாடை என்றும் கொள்ள லாம். எரிஎச்சில்: எரி=சூரியன்: அதன் எச்சில் செவ் வானமாகிய அந்திமாலை. முனிஎச்சில்: முனி=அகத்தியன்: அவன் உண்டு மிழ்ந்ததனால் கடல் முனியெச்சில் எனப்பட்டது. 'கரிஎச்சில்' என்பதற்கு யானை உண்ட எச்சமாகிய விளங்கனி என்றுகொண்டு உள்ளீடில்லாத விளங்கனிபோல ஆயினள் இவ்வேந்திழையாள் என்றும் பொருள்கொள்ளலாம். ஆவின்பாலைக் கன்றுபுரிஎச்சில் என்றார் இப்பாடலுள் எச்சில் என்னும் ஒருசொல்லை இவ்வாறு வைத்துப் பாடிய நயம் சுவைத்தற்குரியது].

—*—

தோற்றுவாய்

தலைவியறியாமல் தலைவனைத்தேடி மாலைக்காலத்தில் தலைவியின் மனையிடத்துவந்த பாணனைக்கண்டு (எள்ளற்குறிப் போடு) 'கதிரவன் போலும் நம் தலைவன் மாலையில்; தோன்றுவ தில்லை; காலையில் தோன்றுவான்' எனத் தலைவி கூறியது.

(கட்டளைக் கலித்துறை)

**93.** **மாலையி லேவரு மோ? பாண!**
**நீ மட வார்கலவி**
**வேலையி லேசென்று வீழ்ந்துவிட்**
**டான், எழு மேகமலர்ச்**
**சோலையி லேவளர் சேறையிற்**
**சூரியன் சுற்றிமெள்ளக்**
**காலையி லேவரு வான்காண**
**லாம்நம் கடைத்தலைக்கே.**

மேகங்கள் ஏழும் வந்து நிறைந்து அலருகின்ற மலர்ச்சோலைகள் நிறைந்தோங்கும் சேறையம்பதியில் விளங்கும் சூரியன் (கதிரவன் போன்ற நம் தலைவன்) மடவார்கலவியாகிய (இன்பக்) கடலிலே மூழ்கிவிட்டான். ஆதலால் பாணனே! மாலைக்காலத்தில் வருவானோ? இனி மெள்ள மெள்ளச்சுற்றிக் காலையிலே தோன்றுவான். அப்பொழுது, இம்மாளிகை முற்றத்திலே நீ காணலாம். இப்பொழுது சென்றுவருவாயாக.

கதிரவன் மாலையில் மேற்கடலில் மூழ்கிப்பின் காலையில் கீழ்க்கடலிலே தோன்றி எழுவான் என்னும் இலக்கிய வழக்கு நோக்கித் தலைவனாகிய சூரியன் "மடவார் கலவியாகிய வேலையிலே வீழ்ந்துவிட்டான்; இனிக் காலையில் வருவான்" என்று தலைவி கூறியது சிறப்பாக உள்ளது.

—o—

## தோற்றுவாய்

களவுக்காலத்து ஒருவழித்தணந்துசென்ற தலைவன் பின்வந்து கூடி மகிழ்வித்த செய்தியைத் தலைவி தோழியிடம் குறிப்பாகக் கூறியது. இதனுள் தலைவனைத் திருமாலவதாரமாகிய கண்ண பிரானாகவே கூறியுள்ள சிறப்பு அறியத்தக்கது.

## (கட்டளைக் கலித்துறை)

94. ஆயுந் துயின்று நிலவுங்
குளிர்ந்தழ லாயவிசை
வேயுந் தணைன்று விடியவைத்
தோன்கஞ்சன் விட்டநெட்டைப்
பேயுஞ் சகடும் பிணம்படக்
கொன்றுபோய்ப் புள்ளினது
வாயுங் கிழித்து மருதாடு
சென்ற மனுதுங்கனே.

தோழீ! உறங்காமல் நம்மைக் காத்திருக்கும் தாயும் துயில, தணல்வீசும் நிலாவும் குளிர, தீக்கொழுந்து போல வருத்தும் புல்லாங்குழலும் இனிதாய்த் தண்ணென்று ஒலிக்க விடியாத இருளை விடியவைத்தோன்; அவன் யாரெனின், கம்சன் ஏவிய நெடிய பேயாகிய பூதகியையும் சகடாசூரனையும் கொன்று பிணமாக்கிப் பின்பு நாரைவடிவாகவந்த சூரனின் வாயையும் கிழித்து இரட்டை மருதமரங்களிடையே தவழ்ந்து சென்றவனுகிய மனுதுங்கனுவான்.

[துயின்று முதலாகிய செய்தெனெச்சங்கள் செயவெனச்சமாகத் திரிக்கப்பட்டன. தாயும் என்ற உம்மை, நாயும் காவலரும் ஊரும் என்னும் பொருள் தந்து எச்சமாக நின்றது; நிலவும் வேயும் என்ற உம்மைகளும் முறையே சந்தனமும்–ஆவின் மணியோசையும் என்பவற்றை உணர்த்தி நின்றன. பேயும் முதலான உம்மைகள் எண்ணும்மை].

—o—

தோற்றுவாய்

விரகத்தால் வருந்தும் தலைவியின் நிலையைச் செவிலி கூறியது.

(கட்டளைக் கலித்துறை)

95. நிகளங் களைச்சுளிக் குங்களி
யானை நிருபதுங்கன்
அகளங்க னம்பொன் மயிலையன்
னீரம்பொன் ஆலயத்துத்
துகளங்க மூழ்கித் தமியேன்
வருந்திச் சுமந்துபெற்ற
மகளங்க மத்தனை யும்பஞ்ச
பாணம் வருத்தியதே.

கட்டுத் தறியிற் பிணித்திருக்கும் காற் சங்கிலிகளை (அறுப்பதற்காக) வெகுளும் மதயானைகளையுடைய அரசரிற் சிறந்த அகளங்கனின் மயிலையம்பதிபோன்ற வளமுடையீர்! இலக்குமி வாழும் நம் பெரிய மனையிடத்தே, மண்தரையில் உள்ள துகளிலே மூழ்கி யான் வருந்திச் சுமந்து பெற்ற என் அருமை மகளின் அழகிய உடம்பு முழுதும் மாரவேளின் மலர் அம்புகள் பாய்ந்து வருத்தத்தைச் செய்தன. என் செய்வேன்.

[அகளங்கன் = குற்றமில்லாதவன்—சோழ மன்னன். கருவுயிர்க்குங்கால் தரைமீது கிடத்தல் மரபு].

—*—

தோற்றுவாய்

இரவுக் குறியிடத்துத் தலைவனை எதிர்பார்த்து அவன் வாராமையால் நொந்த தலைவி தோழியிடம் கூறியது.

## (கட்டளைக் கலித்துறை)

**96. அயிலோ டரிக்கண்ணில் அஞ்சன**
**நீரேன் றருவினையேன்**
**துயிலோ இறைவர் துடைத்தது? எல்லாம்**
**தொல்லை ஞாலமுய்ய**
**வெயிலோ னெனவந்த விக்ரம**
**சோழன் வியன்சிலம்பில்**
**மயிலோ எனுமிய லாய்கன**
**வாயினும் வாய்க்குமன்றே?**

தொன்மையான இவ்வுலகம் துயரமாகிய இருள் நீங்கி உய்யுமாறு இன்ப ஒளி வீசும் கதிரவன் போலத் தோன்றி ஆளும் விக்கிரம சோழனுடைய அகன்ற மலையிடத்தே விளங்கும் மயிலோ என்று வியக்கும் வண்ணந்திகழும் சாயலை உடைய தோழியே!

நேற்றிரவு யான் துயின்றிருந்தால் (தலைவனுடன் உறைவதாகிய) கனவாயினும் வாய்த்திருக்கும் அல்லவா? (அதனால்) வேல்போலும், செவ்வரிபரந்த கண்களில் மைகரந்த கண்ணீரை ஏற்றுத் துயருற்ற தீவினையேனாகிய எனது உறக்கத்தை மட்டுமா தலைவர் துடைத்தார். இல்லை.

[உறங்கினால் கனவிலே அவரோடு கூடிமகிழும் இன்பத்தையும் அல்லவா துடைத்துவிட்டார். என்னே எனது தீவினை இருந்தவாறு?]

—*—

தோற்றுவாய்

"தலைவன் பரத்தைமைபூண்டு ஒழுகுகின்றான்" எனக் கருதும் தலைவி ஊடலாற் கூறியது.

## [கட்டளைக் கலித்துறை]

**97.** **கரும்புண்ட வாயும் கசப்புண்ணு**
**மோ, மற்ற கன்னியர்தாம்**
**விரும்புண்ட பாயல் என் மேற்படு**
**மோ, வெகுண் டாரையெல்லாம்**
**பொரும்புண்ட ரீகம் அனையான்**
**சயிலப்பன் பூதைவெற்பில்**
**இரும்புண்ட நீரல்ல வோவும்மை**
**நேசித்த என்னெஞ்சமே.**

வெகுண்டு போர்க்கெழுந்த பகைவரை எல்லாம் போரிட்டு வெல்லும் வேங்கைப்புலி போல்வானாகிய சயிலப்பனுடைய பூதை வெற்பின் தலைவனே! கரும்பினை உண்டு சுவைகண்ட வாய் கசப்பினை (உடைய வேம்பை) உண்ணுமோ? பிற கன்னியர் விரும்பி அணைத்துத் துயின்ற (உன் மார்பாகிய) பாயல் என்மேற் படுமோ (படாது ஆதலின்)? உம்மை நேசித்த என் ஆசை யாவும் (உலையில் பழுத்த) இரும்பு உண்ட நீர் (வற்றியமை) போல ஆயிற்றல்லவா? (ஆதலான் இனி என்னால் உமக்கு யாதும் பயனில்லை என்று ஊடினாள்.)

—o—

### தோற்றுவாய்

பரிசளித்துக் காப்போரைப் பெருத புலவர் ஒருவர், முருகன் அருள்வேண்டிப் பாடியது. இதனல் "கலை நலம்தேரு வீணரைப் பாடிப் பதங்குலையாமல் கடவுளின் பதம்பாடி நற்பதம் அடையுமின்" எனப் பாவலர்க்குக் குறிப்பால் அறிவுறுத்தப் படுகின்றது.

## (கட்டளைக் கலித்துறை)

98. காவே, சிந் தாமணி யே, என்று
வீணர் கடைத்தலைபோய்ப்
பாவே யுரைத்தும் பரிசளி
யார், நின் பதமுதவாய்!
தேவே யசுரர் கிளையொடு
மாளச் செகுத்தவைவேற்
கோவே கதிரைப் பதிவாழ்
குமர குருபரனே!

கலைஞானமும், புலவர் சிறப்பும் அறியாத வீணர்தம் கடைவாயிலிற்போய், "கற்பகச் சோலையே! சிந்தாமணியே"! என்று இனிய பாக்களைப் பாடியுரைத்தாலும் சிறிதும் பரிசளித்து மகிழார்; (என்பதை உணர்ந்தேனதலின்) தேவே! அசுரர்கள் சுற்றத்தோடு மாளக் கொன்ற கூரிய வேலாயுதத்தை உடைய, கதிர்காமத்தில் வாழும் குமர குருபரனே! நின்பாதத்தில் வாழும் இன்பமாகிய பதத்தை எனக்கு அருள்வாயாக!

—★—

### தோற்றுவாய்

வினவிய பாங்கனுக்குத் தலைவியின் எழில் நலத்தைத் தலைவன் சிறப்பித்துக் கூறியது இப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

99. நாக்குக் கமிழ்தும், செவிக்கின்ப
யாழ், மெய்க்கு நல்லதென்றல்
மூக்குக்கு வாசனை நோக்குக்கு
நாடகம் முத்தமிழ்நூல்
வாக்குக் கிசைந்தபி ரான்கூத்த
ஞூரப்பன் மால்வரைமேல்
ஈர்க்குக் கிடங்கிடை யாமுலை
யார்தம் எழில்நலமே!

நண்பா! முத்தமிழ் நூல் புகழும் வாசகத்திற்கெல்லாம் பொருந்தும் புகழையுடைய பெருமகனாகிய கூத்தனூரப்பன் பெரிய மலையிடத்து வாழும், ஈர்க்குச்சியும் ஊடே நுழைய இட மின்றிப் பணைத்த தனங்களையுடைய அந்நங்கையினிடத்தே விளங்கும் அழகு நாவிற்குச் சுவைக்கும் அமிழ்தமாம். செவிக்கு இனிய பண்ணொலிக்கும் யாழாம். மெய்யினுக்கு இதம்தரும் தென்றலாம். மூக்கிற்கு நறுமணமாம். நோக்கிற்கு இலங்கும் நாடகமாம்; என்று அறிக.

[இப்பாடல் "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணேயுள" என்னும் திருக்குறளை ஒரு முகத்தான் விளக்கும் வகையில் அமைந்துளது.]

—★—

தோற்றுவாய்

தலைவனோடு உடன் போக்குச்சென்று மீண்ட தலைவி தன் மென்மைக்கு இடையூறு நேராவண்ணம் வந்த நிலையை எண்ணி உள்ளத்தே மகிழும் செவிலி, பாலைக் கருப்பொருளாகிய புருவிடம் கூறுவதாக அமைந்ததிப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

100. காண்டா வனஞ்செறி பாலைத்
தடத்தொரு காளைபின்போய்
மீண்டாள்! அணங்கின் அடிச்செல்லு
மோ,நம் விதிவசமோ
தூண்டா எழுங்கதி ரோன்முன்பு
போனவன் சூழ்ச்சியதோ
ஆண்டான் களந்தைப் புருவே!ஈ
தென்ன அதிசயமே?

'ஆண்டான்' என்னும் வள்ளலுடைய களந்தையம்பதியிலே வாழும் புருவே! தெய்வம் போன்ற என் மகள், (பார்த்தனுடை அம்பால் பற்றி எரிந்த) காண்டாவனம் பல சேர்ந்தாலொத்த வெம்மையை உடைய பாலைநிலத்தை (அவள் காதலனாகிய) ஒரு காளை போன்ற தலைவனுடன் கடந்துபோய் (சிறிதும் துயர் இல்லாமல்) மீண்டு வந்துவிட்டாள்! அப்பாலை நிலத்தில் செல்லுந் தரத்ததோ அவள் மெல்லடி? இன்றேல் (அவள் பாதங்கள் ஊறு படாமைக்குக் காரணம்) நம்முடைய நல்வினைப்பயனோ? வெங் கதிர்களால் தூண்டப் பட்டு எழுந்து கனல்வீசும் கதிரவன் முன்பு அழைத்துச் சென்ற (தலை)வன் செய்ததொரு மாயச் சூழ்ச்சியோ? இவ்வாறு நிகழ்ந்தது என்ன அதிசயம்! எனச் செவிலி வியந்தாள்.

—*—

தோற்றுவாய்

தலைவியின் பிரிவால் வருந்தும் தலைவனை இடித்துரைத்த பாங்கனிடம் தலைவன் கூறியது.

(கட்டளைக் கலித்துறை)

101. கையாழி ஏந்திய மால்பத்த
ராவிக் கனகிரிமேல்
மையாருங் கண்ணிநற் கொங்கையி
லொற்றி வண்ணக்கையால்

மெய்யாரக் கட்டி இதழூட்
டியவின்பம் விட்டிருந்தால்
ஐயா யிரங்கற்ப காலமொப்
பாமிர வானதுவே!

நண்பா! தனது கையிலே சக்கரத்தை ஏந்தி விளங்கும் திருமாலாகிய 'பத்தராவி' என்னும் வள்ளலுடைய பெருமை பொருந்திய மலையிடத்தே வாழும், மையினுற் சிறந்த கண்களை யுடையாள் தன் அழகிய தனங்களால் என் மார்பை ஒற்றியும், எழில்மிகுந்த கைகளால் என்மேனி களிப்புற அணைத்தும், வாயிதழால் அமிழ்தமூட்டியும், அவள் தந்த இன்பநுகர்ச்சியைக் கைவிட்டுத் தனியே இருந்தால், இவ் ஒரு இரவானது ஐயாயிரம் கற்ப காலத்தை ஒத்திருக்கும், எனக்கு.

['பத்தராவி' ஒரு வள்ளல் என்பது, அடுத்த பாடலாலும் புலனாகின்றன].



தோற்றுவாய்

இதுவும் முற்பாடலைப் போல இடித்துரைத்த பாங்கனிடம் தான் தலைவியோடிருந்து பெற்ற இன்பத்தைக் கூறி, பிரிவுக்குத் தலைவன் வருந்தியது.

(கட்டளைக் கலித்துறை)

102. பொன்னைப் புயத்தணைத் தோன்பத்த
ராவிப் பொருப்பில்வளர்
கன்னிக் கயல்விழி யார்தந்த
மோகத்தின் காமக்கலை
உன்னித் தொழுதேன் மடவனென்
றுலும் உறவணைத்த
மின்னைப் பிரிந்தவற் கன்றோ
தெரியும் விதனங்களே.

நண்பா! பொன்மகளைத் தன் தோள்களால் அணைத்துள்ள வணகிய 'பத்தராவி' என்னும் வள்ளலுடைய பெருமலையில் விளங்கும் கன்னியாகிய கயல் விழியார், தந்த பெருவேட்கையால், அவனொடு பயிலும் காமக்கலையை உன்னுற்பெற எண்ணி, உன்னைத் தொழுதேன். (உன் கருத்துப்படி யான்) 'மடவோன்' எனினும் (என் ஊனும் உயிரும் இன்பம்பெற) அணைத்து மகிழ்ந்த மின்னற்கொடி போல்வாளைப் பிரிந்தவற்கல்லவோ தெரியும் அத் துன்பங்கள்.



தோற்றுவாய்

ஒரு பக்தன் "மனோவாக்குக் காயங்களால் இறைவனையும், உன்னையும், வழிபட்டுய்ய வரம் அருள்வாய்" எனப் பராசக்தியை வேண்டியது.

## (கட்டளைக் கலித்துறை)

**103.** **கரமஞ் சலிபண்ணக், கால்கள்நின்**
**கோயில் கருதிநிதம்**
**வர,மந் திரஞ்சொல்லி வாயுனை**
**வாழ்த்த வணக்கஞ்செயச்**
**சிரம்,அஞ் செவிகள் சிவத்தொனி**
**கேட்கத் திருவருள்செய்**
**பரமன் தவப்பய னே! விந்து**
**நாத பராசத்தியே!**

இறைவனாகிய பரமசிவன் செய்த தவப்பயனாக விளங்கும் விந்துநாத பராசக்தியே! என் கைகள் தலைமிசைக்கூம்பி வணங்கவும், கால்கள் நின் திருக்கோயிலைக் கருதிவந்து சுற்றவும், வாய் நின்புகழாகிய மந்திரங்களைச் சொல்லி வாழ்த்தவும், தலை (நின் தாள்களைத்) தாழ்ந்து வணங்கவும், அழகிய செவிகள் 'சிவசிவ' என்னும் ஒலியை எப்பொழுதும் கேட்கவும் அருள் செய்வாக!

—0—

தோற்றுவாய்

நாணத்தால் கண்களைப் பொத்திக்கொண்டு எதிர் நிற்கும் தலைவியிடம், தன் காதல் தோன்றத் தலைவன் கூறுவது. இஃது "இடையூறு கிளத்தல்" என்னும் அகத்துறையைச் சேர்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

104. வரகைப் பதிபள்ளி கொண்டான்
மழவன் மணிவரைமேல்
திருகிச் செருகுங் குழன்மட
வீர்பொற் சிகரகிரி
பொருவுற்ற கொங்கை புதையாமல்
வேற்கண் புதைத்ததெலாம்
அரவைத் தலைவிட் டடிவால்
பிடித்த தனையொக்குமே.

வரகைப்பதி (வரகூர்)யில் திகழும் 'பள்ளி கொண்டான் மழவன்' தன் அழகிய மலையிடத்திலே, மலரோடு (ம், என் உயிரும், சேர்த்துத்) திருகிச்செருகிக்கொள்ளும் கூந்தலையுடைய மடவீர்! பொன்மயமான உச்சியை உடைய (மேரு) மலையை ஒக்கும் தனங்களைப் புதையாமல், வேல்போலும் கண்களைப் புதைத்துக் கொண்டீர். இச்செயலானது, நல்லபாம்பினை (ப்பிடிப்பவர்) அதன் தலையை விட்டுவிட்டு வாலைப் பிடித்தமையை ஒக்கும். (எனவே "அக்கொங்கைகள் கண்ணினும் மேலாகத் தன்னை வருத்து கின்றன" எனக் குறிப்பாலுரைத்தான்).

—o—

தோற்றுவாய்

தலைவியைப் பிரிந்துள்ள தலைவன், தன் விரகந்தோன்ற வண்டினைப் பார்த்துக் கூறுகிறான். இஃது "வண்டு விடுதூது" என்னும் பகுதியைச் சார்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

105. காணும் வண்டினங் காள்! மேலைப்
பாக்கத்துக் காவுக்குநீர்
போனல்நம் பள்ளி யறையாளைக்
கண்டு புலவர்மயல்
ஆனார் மதனன் வளைந்துகொண்
டான்சண்டை ஆகுதென்று
மானரை வேண்டிக்கொண் டென்னுணை
ஓடி வரச்சொல்லுமே!

இச் சோலையின்கண் நிறைந்து தேனுண்ணும் வண்டுக் கூட்டங்களே! நீங்கள் இச் சோலையைக் கடந்து மேலைப்பாக்கத்தில் உள்ள சோலைக்குச் செல்வீராயின்; ஆண்டு எனைப்பிரிந்திருக்கும் பள்ளியறைக்குரியவளாகிய காதலியைக்கண்டு, உன் காதலராகிய புலவர் உன்னைபபிரிந்து வருந்தும் காமானலத்தால் மயக்கமுடைய வரானார். அவர் சோர்வறிந்து அவரை வருத்துவதற்காகக் காமவேள், அவரை வளைத்துக் கொண்டான். இருவருக்கும் பெரும் போர் நிகழுகின்றது என்று கூறி மிகவும் வேண்டிக் கொண்டு, உடனே இங்கு ஓடிவரச் சொல்லுங்கள்! இஃது என் ஆணையாகும் உங்களுக்கு.

[இப்பாடல் முதிரா ஒருவர் எழுதியதுபோலும் — மரபு பிறழ்ந்துளது].



'குடவாயில்' என்னும் ஊரில் வாழ்ந்த 'கண்ணன்' என்னும் வண்ணானின் தொழிற் சிறப்பைப் பாராட்ட எழுந்த இப்பாடலில், அவ்வண்ணானைக் 'கண்ணன்' என்ற பெயரொற்றுமையால் திருமாலாகக் குறிப்பால் பாடியது.

(கட்டளைக் கலித்துறை)

106. மாட நெடுங்குட வாசல்வண்
ணன்கண்ணன் வண்புகழான்
ஆடுக ருங்கடல் வெண்கட
லாக்கினன் ஆண்மையன்றோ

**சூடக முன்கைநல் லாய்! இந்த**
**மாநிலத் தோகையுடை**
**ஆடையு மேதுவ ராய்க்கிடந்**
**தாற்பின்னை யார்பரமே?**

சூடகமென்னும் வளையல்களை யணிந்துள்ள முன் கைகளை யுடைய நல்லாய்! நெடிய மாடங்கள் நிறைந்த குடவாயிலில் வாழும் வளம்சான்ற புகழையுடைய கண்ணனென்னும் வண்ணான், அலை ஆடும் கருங்கடலை வெண்கடலாக ஆக்கினான். இஃது, அவனுடைய ஆண்மையன்றோ எனின் (இல்லை, அவன் கடமையாம் என்பேன்; காரணம்) இந்த நில உலகமாகிய பெண் மயிலாள் தான் உடுத்தியிருக்கும் ஆடை (கடல்)யே துவரா (அழுக்கு—உப்பு)கக் கிடந்தால் அதனைப்போக்கித் தூய்மை செய்வது பின்னர் யார் பொறுப்பு? அவனுடையதன்றோ? எனவே வெண்மை செய்தான்!

[கடல் நிலமகளின் ஆடையாகக் கூறப்படுவதாலும், நிலமகள் கண்ணனின் (திருமாலின்) மனைவியாதலும், துவராடையை வெள் ளாடையாக்குதல் அவன் பொறுப்பெனக் குறித்த கற்பனையும்; துவராகிய உப்பினை அழுக்கென்னும் பொருள்பட அமைத்து, கண்ணன் பள்ளிகொள்ளும் பாற்கடலை 'வெள்ளாடை' எனக் குறித்துத் தான் பள்ளிகொள்ளும் ஆடையைத் துவர் நீக்கி வெண்மை செய்துகொண்டமை, அவன் கடமையே எனச் சமத் காரமாகப் பாடியுள்ள நயம் சுவையாக உளது.]

—★—

தோற்றுவாய்

'காளி நம்பி' என்னும் வள்ளலின் கல்விச் சிறப்பும், ஆட்சி சிறப்பும் பற்றிக் குறிப்பாகப் பாராட்டப் பெற்றதிப் பாடல்.

## [கட்டளைக் கலித்துறை]

**107. கற்குந் தமிழறி வாகரர்**
**கோன்நம்பி காளிக்குநாம்**

விற்கும் பரிகல மாகிவிட்
  டோம்வட வேங்கடமும்
பொற்குன் றமுமுயர் கங்கா
  நதியும் பொதியமும்போல்
நெற்குன் றமும்நம் மரபும்எப்
  போது நிலைநிற்கவே.

உலகம் உவந்துகற்கும் தமிழறியும் பண்டிதர்கள் (போற்றும்) நல்லவனாகிய 'நம்பி காளி' என்னும் பெருமகனுக்கு நாம் விற்கவும், வாங்கவும் உரிய உடைமைப் பொருளாகி விட்டோம். ஏன் எனின்? நாம் வாழும் இவ்வூரான நெற்குன்றமும், நாம் பிறந்த குலமரபும்; வடவேங்கட மலையையும், இமயமலையையும், என்றும் வற்றாத உயர்ந்த கங்கா நதியையும், தமிழ் பிறந்த பொதிய மலையையும்போல் எக்காலத்தும் நிலைபெற்று நிற்பதற் காகவேயாம்.

[இதனுள், 'வடவேங்கடம் முதலியவை எக்காலத்தும் நிலை நிற்பவை' எனக் கூறியது, பொருளுரையாய் நலம் பயக்கின்றது. பொற்குன்றம்' மேருமலையுமாம். வாகரர் — பண்டிதர் — கல்வி மான்கள். காளி = ஒரு குறுநிலமன்னெனத் தெரிகின்றது. இப் பாடல் 'பெண்பாற்கூற்று' எனக் கருத வேண்டியுளது.]

— * —

தோற்றுவாய்

குறுநில மன்னன் ஒருவனை இராமபிரானாக ஒப்பித்துக் கூறும் இப்பாடலில், அவன்றன் யானையின் சிறப்பும் விளக்கப்பட்டுள்ளது. 'இஃது யானை மறம்' என்பதனைச் சார்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

108. வடநெடுங் கற்சிக ரத்துவல்
  லாற்கு வழிவிட்டதென்

கடல்நடுங் கச்சிலை கால்வளைத்
  தாய்கரும் பாம்பெனச்செஞ்
சுடர்நடுங் கக்கை நிமிர்த்துல
  கேழும் சுமந்ததுத்திப்
படம்நடுங் கப்பதம் பேர்த்தகொல்
  யானைப் பரகண்டனே!

'இராகு கேதுக்களாகிய பாம்பு' என்று கருதி; சூரியனும் நடுங்கும்படியாகத் தன் துதிக்கையை நிமிர்த்து, ஏழுலகத்தையும் தன் ஆயிரந்தலைகளால் தாங்கும் ஆதிசேடனுடைய புள்ளிகள் நிறைந்த படம் நடுங்குமாறு தன் கால்களைப் பெயர்த்துவைக்கும் கொல்லுந் தன்மைவாய்ந்த மதயானைகளையுடைய பரகண்டனே! நீ இமயத்தில் வீற்றிருக்கும் வல்லமையுடைய (உருத்திரன்) வன் தாவிச்செல்ல வழிவிட்ட தென்கடலானது அஞ்சி நடுக்கங் கொள்ள, கோதண்டத்தைக் கால்களில்வைத்து வளைத்த பெருமை யுடையவனன்றோ!

('பிராட்டியைத் தேடும்பொருட்டுத் தென்கடலைத் தாவிச் சென்ற அனுமன் உருத்திரனின் அம்சம்' என இதிகாசங் கூறுதலின் 'வடநெடுங்கற் சிகரத்து வல்லான்' எனக் கூறப்பட்டது போலும்.)

—*—

தோற்றுவாய்

இலையூர் 'கந்தப்பன்' என்னும் குறுநில மன்னன் பால் மையல்கொண்ட ஒரு தலைவியின் நிலையைத் தோழி கூறுவதாக அமைந்துள்ள இப்பாடலும் 'யானைமற'த்தைச் சார்ந்ததே.

(கட்டளைக் கலித்துறை)

109. அடக்குஞ் சினங்கொண்டு சாளர
  வாச லடைப்பொதுங்கிக்
கிடக்கும் புலிக்கிந்த மானொன்செய்
  வான்தெவ்வர் கீர்த்திசினம்

படக்கும்பி டார்படச் சாடிப்பன்
ஞகப் படம்நடுங்கக்
கடக்குங் கடாக்களிற் ருயிலை
யூர்வந்த கந்தப்பனே!

தன்னை வணங்கிப் பணியாத பகைவர்தம் பெருமையும், சினமும் அழிந்து, அவரும் அழியுமாறு கொன்று, உலகத்தைத் தாங்கும் ஆதிசேடனாகிய பாம்பின் பல படங்களும் நடுங்குமாறு, போர்களத்தை வெற்றியோடு கடக்கும் மதயானைகளையுடைய இலையூரில் விளங்கும் கந்தப்பனே! சினம் தோன்றாமல் அடக்கிக் கொண்டு சாளரவாயில் அடைத்திருப்பதனால் ஒதுங்கிக் கிடக்கும் அம்புலியிடமிருந்து தப்புவதற்கு, இந்தமானள் என்செய்வாள். நீ உதவினாலன்றி அவள் உயிர் பிழைக்கமாட்டாள், அறிக.

['அம்புலி' என்பது குறைந்து நின்றது. 'அடைப்ப ஒதுங்கி' என்பது விகாரப்பட்டது ]



தோற்றுவாய்

இதுவும், அவ்வள்ளல்பால் காதல்கொண்ட ஒரு தலைவியின் நிலையை விளக்குவதேயாம். இப்பாடலின் மூன்ருவது அடி சிதைந்துளது.

**(கட்டளைக் கலித்துறை)**

110. பிறையடிக் கொண்டது கண்டுதிண்
டாடிப்பெண் பேதைநெஞ்சம்
பறையடிக் கின்றதும் பார்த்திலை
யோபரம் பீடத்துச்சி
உறையடிக் குஞ்செக் தளிர் ......ச்
சுந்தரி ஒடைநெற்றிக்
கறையடிக் குஞ்சரத் தாயிலை
யூர்வந்த கந்தப்பனே!

முகபடாமாகிய 'ஓடை'யென்னும் அணியணிந்த நெற்றியையும், பரந்த அடிகளையுமுடைய யானையை உடைய, இலஞ்சியின்கண் விளங்கும் கந்தப்பனே! இப்பேதைப் பெண்ணானவள் விண்ணிடத்தே பிறைநிலா கால்கோள் கொண்டதைக்கண்டு தன் மனந் தடுமாற நெஞ்சம் பறைபோல் அடித்துக்கொள்ளும் நிலையை நீ பார்க்கவில்லையோ.

[கண்டபின்னும் இரங்காதிருத்தல் தகாது; எனவே அருள் வாயாக என்றாள்.]

—*—

தோற்றுவாய்

'காதலியைக் கூடியிருக்கும் இராப்பொழுதும், பிரிந்திருக்கும் இராப்பொழுதும், தனக்கு இவ்வாறமைந்தன' என ஒரு தலைவன் கூறுவது.

**(கட்டளைக் கலித்துறை)**

**111. கருகும் இராக்கருங் கூந்தலை**
**மோந்து கனியதரம்**
**பருகும் இராவரை நாழிகை**
**யாம்; பரு காதெனுளம்**
**உருகும் இராவரை நாழிகை**
**ஆயிரம் ஊழியதாய்ப்**
**பெருகும், இராவொன்றி லேகற்ப**
**காலம் பிறந்திடுமே.**

தலைவியின், நள்ளிருள் போன்ற கரிய கூந்தலை மோந்து கொவ்வைக் கனிபோலும் இதழமிழ்துண்ணும் இராப்பொழுது முழுதும், அரை நாழிகைப் பொழுதாகச் சுருங்கித் தோன்றும். அங்ஙனம் மோந்தும், பருகியும் நுகராதே, என் உள்ளம் உருகக் கழியும் இராப்பொழுதின் அரை நாழிகை, ஓராயிரம் ஊழியதாய்ப் பெருகித் தோன்றும். அவ் இரவு முழுதிலுமோ எனின்; பல கற்ப காலம் அதனுள் பிறந்திடும்.

['கருகுமிராக் கருங்கூந்தல்' என்பதற்கு 'இவள் கூந்தலின் கருமைகண்டு இரவு தான் பொருமையால் உளம் கருகும்' என்றும் பொரு ் கொள்ளலாம்.]

—o—

### தோற்றுவாய்

'இந்தளூரர்' என்னும் பெருமான்மேல் காமுற்று வருந்தும் ஒரு தலைவியின் நிலையைத் தோழி கூறுவது.

### (கட்டளைக் கலித்துறை)

**112. ஈரம் புகுந்த கலையாருந்**
**திங்களை ஏசியசங்**
**காரம் புகுந்த வயலிந்த**
**ளூரருக் காருரைப்பார்**
**பாரம் புகுந்த பயோதரம்**
**ஆடகம் பாய, அந்த**
**காரம் புகுந்த கருங்குழ**
**லாள்கொண்ட காதலையே.**

குளிர்ச்சி நிறைந்த கலை பதினாறும் நிறைந்தொளிரும் திங்களைத் தன் வெண்மையாலும், ஒளியாலும் எள்ளி விளங்கும் சங்கினது முத்துக்கள் நிறைந்த வயல்களையுடைய இந்தளூரர்க்கு, பேரிருள் வந்து குடிபுகுந் தாலொப்பத் திகழும் கரிய கூந்தலை யுடைய இவள், தன் பருமைபொருந்திய தனங்களிலே பொன் போலும் பசலை பாயும் வண்ணம் கொண்டிருக்கும் காதலை யெல்லா யார் சென்று உரைப்பார்?

[சங்கு + ஆரம் = சங்கீன்ற முத்துக்கள். சங்காரம் என ஒரு பொருள் தோன்றுதல் நயம். பாரம் = மெல்லிடைக்குப் பாரமாம். ஆடகம் = பொன்; ஈண்டுப்பசலையை உணர்த்திற்று. பாய = பரவ.]

தோற்றுவாய்

இச்செய்யுள், மன்மதனின் மலர் அம்புகள் ஐந்தும் இவை யெனக் கூறி, அவை தைக்கும் அவயவங்களையும், விளைக்கும் உணர்ச்சிகளையும் நிரல் நிறையாக விளக்குகின்றது.

(கட்டளைக் கலித்துறை)

113. **கஞ்சமென் சூதமஅ சோகந்**
**தளவுடன் செங்கழுநீர்**
**அஞ்சம்ப தாகும் இவைதாம்**
**துளைக்கும் அவயவங்கள்**
**நெஞ்சம் முலைநெற்றி நீள்சிரம்**
**குய்யம், நினைவிரங்கல்**
**வஞ்ச வுயிர்ப்புணர் விம்மல்**
**மயக்கமும் மாய்தலுமே.**

தாமரை, மா, அசோகு, முல்லை, செங்கழுநீர் இவ்வைந்து மலர்களும் மன்மதனின் பஞ்சபாணங்களாகும்; இவை துளைக்கும் அவயவங்கள் முறையே நெஞ்சு, முலை, நெற்றி, தலை, குய்யம் என்னும் இவ்வைந்தாம்; இவற்றால் எய்தும் நிலைமை முறையே நினைந்திரங்கல், பெருமூச்செறிதல், விம்மல், மயங்கல், மாய்தல் ஆகிய ஐந்தாம்.

[பிறரறியாது விடும் நெட்டுயிர்ப்பாதலின் 'வஞ்சஉயிர்ப்பு' எனப்பட்டது. 'உணர்வுவிம்மல்' என்பது குறைந்து நின்றது. 'மாய்தல்' என்பது தன் வயமிழத்தல்.]

—o—

தோற்றுவாய்

அகனைந்திணைக்குரிய முதற்பொருளுள் ஒன்றாகிய ஐந்திலமும், கருப்பொருள் பதினான்கனுள் தெய்வமும் மக்களும் பற்றி விளக்குகின்றது, இச்செய்யுள்.

(கட்டளைக் கலித்துறை)

114. காடாகும் முல்லைக் கழியாகும்
நெய்தல்கல் லாங்குறிஞ்சி
நாடாம் மருதம் நரலைவெம்
பாலை, நயந்ததெய்வம்
கோடா கரன்வரு ணன்குகன்
இந்திரன் கூறுதுர்க்கை
மாடாயர் மீனவர் வேடுவர்
நாடர் மறவருமே.

காடும் காடுசார்ந்த நிலமும் முல்லையாம். கடற்கழியும் அதன் சார்பும் நெய்தலாம். மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியாம். (வயல்சூழ்ந்த) நாடும் அதன் சார்பும் மருதமாம். மணல் வெளியும் அதன் பகுதிகளும் பாலையாம். இந்நிலங்களுக்குரிய தெய்வங்கள் முறையே சங்கேந்திய திருமால், வருணன், முருகன், இந்திரன், துர்க்கை ஆகிய இவர்களாம். நிலமக்கள் முறையே மாடுகளையுடைய ஆயர், மீனவர், வேட்டுவர், நாடர் (அல்லது ஊரர்), மறவர் ஆகிய இவர்களாம்.

—*—

தோற்றுவாய்

இப்பாடல், 'முத்துப்பிறக்கும் இடங்கள் இருபது' என்றும், அவை 'இவை' என்றும் விளம்புகின்றது.

(கட்டளைக் கலித்துறை)

115. தந்தி, வராக மருப்பிப்பி,
பூகம், சனிதிருத்தோள்,
நந்து, சலஞ்சலம், மீன்றலை,
கொக்கு, நளினம், மின்னார்

கந்தரம், ஆவி, கழை, கன்னல்
ஆவின்பல், கட்செவி, கார்,
இந்து, வுடும்பு, முதலைமுத்
தீனும் இருபதுமே.

களியற்றியானை, கானப்பன்றி இவற்றின் கொம்புகள், கிளிஞ்சில் (முத்துச் சிப்பி), பாக்கு மரம், சனியின் தோள், நத்தை, சலஞ்சலம் (சங்கு), மீனினது தலை, கொக்கு, தாமரை, பெண்டிரின் கழுத்து, பெருமழைத்துளி, மூங்கில், கரும்பு, பசுவின் பல், நாகப்பாம்பு, கார்மேகம், திங்கள், உடும்பு, முதலை, ஆகிய இருபதும் முத்துக்களைச் சூல் தாங்கிப் பிறப்பிக்கும்.



தோற்றுவாய்

'தென்விடைக்கழி' என்னும் திருப்பதியில் விளங்கும் முருகப் பிரான்மீது மால்கொண்ட ஒரு தலைவியின் விரகத்தைச் செவிலி புலப்படுத்தியது.

(கட்டளைக் கலித்துறை)

116. அருங்கும ராவென் மடந்தைவிற்
காமன்கை யம்பதனால்,
நெருங்கும ராவென்ற வெண்மதி
யால்நொந்து நெஞ்சமிகச்
சுருங்கும ராமரம் எய்தவன்
பேர்சொலித் தோகையுன்பால்
வருங்கும ராதென் விடைக்கழி
மேவும் மயூரத்தனே!

தென்விடைக்கழியாகிய திருப்பதியில் விரும்பி எழுந்தருளி யிருக்கும் மயூரத்தனே! குமரா! உமாபதியின் அருமை மகனே! யான்பெற்ற மடந்தையானவள், கரும்பு வில்லையுடைய மாரவேள்

எய்யும் மலரம்புகளாலும், மேலும் மேலும் நெருங்கிவரும் அரவைப் போன்ற வெண்ணிலவாலும், உளம்நொந்து சிந்தை கருங்குவாள். இந்நிலையில் மராமரம் ஏழினையும் ஓரம்பால் எய்தவனாகிய பெருமானுடைய பேரைச்சொல்லிக் கொண்டு உன்பால் வருகின்றாள். அவளுக்கு அருள் செய்வாயாக.

['அரா' என்று சொல்லும்படியான மதி. அராவைவென்ற மதி என்றும் சொல்லலாம். மராமரம் எய்தவன் இராமன், அவன் திருமால். திருமாலை, அடையின்றி 'மால்' என்றும் கூறுவர். மால் = (காம) மயக்கம். எனவே 'மையலோடுவருவாள்' என்றாள் செவிலி. இதனுள் 'குமரன் மீது காதல் கொண்டவள் திருமாலின் பேரைச்சொல்லி வருவாள்' என ஒரு பொருள் தோன்றுவது நயம். மயூரத்தன் = மயில்வாகனன்.]

—★—

தோற்றுவாய்

'குவளை' என்னும் பதியில் விளங்கும் முருகனிடம் தன்பிறவி நோய்தீர ஓர் அடியார் வேண்டிக்கொள்வது.

(கட்டளைக் கலித்துறை)

117. மதிக்குங் கதிதரும் நின்மலர்த்
தாளை வணங்கியென்றன்
உதிக்கும் பிறவி தவிர்ப்பதெந்
நாள்ஒழி யாசுரர்
கதிக்குங் கிளையுட னேயடி
மாளக் கனல்மருவிக்
கொதிக்குஞ் சுடரயில் வேலா
குவளைக் குருபரனே!

ஆணவமும் முதலிய பொல்லாங்குகள் ஒன்றும் ஒழியாத அசுரர்களை, மேலும் மேலும் பெருகும் அவர் தம் சுற்றத்தோடு மூலமெல்லாம் அழிந்தொழிய, நெருப்பெழக்கொதித்து ஒளிவீசும்

கூர்மையான வேலாயுதத்தையுடையாய்! திருக்குவளைத்தலத்தில் விளங்கும் குருபரனே! நிறைந்த ஞானிகள் பொருளாக மதிக்கும் மோட்ச விட்டினை அருளும் உன் மலர்போன்ற பாதங்களை நினைந்து நாளும் வணங்கினேன், தொடர்ந்து வரும் என்னுடைய பிறவி நோயைத் தவிர்ப்பது எப்பொழுது? இப்பொழுதே அதனை அருள வேண்டும்.

[ஞானவேலாதலின் 'அசுரர் அழியத் தானே கொதிக்கும்' என்றார். இறைவனுக்கு உபதேசம் செய்தமை தோன்றக் 'குருபரன்' என்றார்.]

—o—

தோற்றுவாய்

இறைவன்மீது மையலுற்ற தலைவி ஒருத்தி, அவர் தம் கொன்றைமாலையை விரும்பித் தோழியிடம் கூறுவது. இதனுள், 'இறைவனுடைய மாலைகளைச் சண்டேசுவரரே பெறுவதற்குக் காரணம், அவர் தன் தந்தையைக் கொன்றார். ஆதலின் நாமும் பெறவேண்டுமானால் நம் தாயைக் கொன்றால்தான் முடியும் போலும்' எனத் தலைவி கூறுவது மிக்க நகைச் சுவையுடையது. இதனால் சண்டேசுவரர் சிறப்பை இலேசினால் பெறவைத்து, செவிலியும் தாயும் தன்னை இற்செறித்துக் கொடுமொழி பேசுவதையும் குறிப்பால் புலப்படுத்தினாள். அவர் ஆண் மகன் ஆதலின் தந்தையைக் கொன்றார்; நாம் தாயைக் கொல்வோம் என்றாற் போல அமைந்த நயம் சுவைத்தற்குரியது.

{கட்டளைக் கலித்துறை}

118. பூதலம் போற்றுதென் வாய்மூர்ப்
பரமர் புனையுங்கொன்றை
காதலுற் றார்கட்கெல் லாங்கிடை
யாது கனங்குழலீர்!
தாதையைக் கொன்றவர் பெற்றாரி
யாமுமித் தாயெனும்புன்
பேதையைக் கொல்லின் பெறலாம்;
அன்றிப் பெறலரிதே!

கருமுகில் போலும் கூந்தலையுடையீர்! உலகெலாம் போற்றி வணங்கும் தென்வாய்மூர்ப் பரமர் அணியும் கொன்றை மலர் மாலை, விரும்பியவர்களுக் கெல்லாம் (கிடைக்குமோ?) கிடைக்காது. இந்நாள் வரையும் தன் தந்தையைக் கொன்றவர் (சண்டேசுவரர்) தான் பெற்றுள்ளார்; எனவே, நாமும் நமக்குத் தாயென்று இருக்கும் இப்புல்லறிவுடையாளைக் கொன்றால் பெறலாம். அவ்வாறன்றிப் பிறவழியால் பெறுதற்கரிதேயாம்.

["பெண் கொலைபுரிந்த நன்னன்போல வரையா நிரயத்துச் சேலீ இயரோ அன்னை" எனச் சங்க இலக்கியத்தில் காணும் மன உணர்ச்சிப்பாடலை நினைவூட்டுகின்றது. இப்பாடல்]

—*—

தோற்றுவாய்

திருக்கழுக்குன்றத்தின் மலை வளத்தைச் சிறப்பிக்கும் இப் பாடலுள், "நரியைப் பரியாக்கி வந்த இறைவன் சோனகர் வடிவத்தில் வந்தான்" எனக் குறிக்கப்படுகிறது.

## (கட்டளைக் கலித்துறை)

**119. மீனவ னுற்கன்று சம்புக்**
**குலங்களை வீதியுள்ளே**
**சோனக னய்த்தூரத் தும்பர**
**மற்கிடம் சூன்முதிர்ந்தே**
**ஈனவல் நாகம் இறையுண்**
**டுமிந்த இனமணியைக்**
**கானக மாதர் கனலென**
**முட்டுங் கழுக்குன்றமே.**

வாதவூரர் பொருட்டுப் பாண்டியனுக்காக, அந்நாள் நரிக் கூட்டங்களை (ப்பரிகளாக்கி மதுரை மாநகர) வீதியுள்ளே, அரபு நாட்டு வணிகன் வடிவாய்த் துரத்தி வந்த பரமன் வீற்றிருக்கும்

இடம் யாதெனின்; சூல் முற்றிய வலிய நாகங்கள் கருவுயிர்க்கு முன் இரையுண்டு பின் உமிழ்ந்த மாணிக்க மணிகளை, மலைச் சாரலில் வாழும் கானவர் சிறுமியர், சிறுசோருக்கி விளையாடும் விளையாட்டு அடுப்பிற்குக் கனலென வைத்து மூட்டும் வளமுடைய திருக்கழுக்குன்றமேயாம்.

—*—

தோற்றுவாய்

தில்லைக் கோவிந்தராசப் பெருமாள் மீது காதலுற்ற பேதைப் பருவத்தாளொருத்தி, விரகத்தால் துயருறும் நிலை கண்ட தோழியின் கூற்று.

**(கட்டளைக் கலித்துறை)**

**120. முழந்தைக்கும் வேலெனும் தாயுரை**
**தன்னை, முதிர்நெருஞ்சிப்**
**பழந்தைக்கும் என்னும் மலரணை**
**யைச், செங்கைப் பைங்குருகும்**
**இழந்தைங் குரல்நெரி யச்சோந்**
**தழும், முலை இன்னும்வராக்**
**குழந்தைக்கு மாரன் சரந்தைக்கு**
**மோ, தில்லைக் கோவிந்தனே?**

தில்லையுள் விளங்கும் கோவிந்தராசப் பெருமானே! மார்பகத்தே இன்னும் தனங்கள் தோன்றாத குழந்தைப் பருவத்தாளாகிய இவள், தன் தாய் கூறும் உரைகளை நெஞ்சில் முழமளவு பாயும் வேலெனக்கூறி நையும். மலரணையை நெருஞ்சிப்பழம் (முள்) தைக்கின்றதெனச்சொல்லி வெறுக்கும். தன்மேனி அழகோடு; கைவளையல்களையும் இழந்து, கூந்தல் அவிழச் சோர்ந்தழும். இவ்வாருக இப்பேதைப் பருவத்தாளையும் மன்மதனுடைய அம்புகள் துளைக்குமோ? ஈதொரு வியப்பேயாம்.

[குருகு—கைவளையல், ஐங்குரல்—கூந்தல். முலை இன்னும் வாரக்குழந்தை என்றது, பேதைப் பருவத்தைக் கருதி]

—o—

### தோற்றுவாய்

சோழ வேந்தனை பராக்கிரமபாகு ஆளுகின்ற ஆறை (ஆற்றூர்போலும்) என்னும் ஊரின் செல்வச் செழிப்பை விளக்குகின்றது, இப்பாட்டு.

### (கட்டளைக் கலித்துறை)

**121. பூழியர் சோரப் பொறுப்பினுள்**
**வானவன் போய்மறைய**
**ஆழி எறிந்த பராக்ரம**
**பாகுவின் ஆறையிலே**
**மேழிகொள் மள்ளர் மடைதோ**
**றடைப்பதும் வெண்டரளம்,**
**கோழிகள் சீய்க்கும் தெருத்தொறும்**
**மாணிக்கக் குப்பைகளே.**

போரிட்ட பாண்டியர் சோர்ந்து ஒழியவும், சேரர்கள் மலைகளிலே சென்று மறையவும், தன் சக்கரப் படையை எறிந்து வெற்றி கொண்ட 'பராக்கிரமபாகு' வேந்தன் செங்கோல் புரியும் 'ஆறை' யென்னும் பெரும்பதியுள் வாழும், கலப்பையைக் கொண்டு உழுதொழில் புரியும் மள்ளர்கள், வயல் மடைகள் தோறும் (சேற்றுடன் சேர்த்து) அடைப்பது முத்துக்களேயாம். அவ்வூர்த்தெருக்களில் கோழிகள் தம் கால்களால் சீய்ப்பது மாணிக்கக் குப்பைகளேயாம் (இதனால் நீர்வளமும், மக்கள் செல்வ வளமும் உணர்த்தப்பட்டன.]

—★—

தோற்றுவாய்

திருமால் கோயில் கொண்டருளும் புங்கனூரில் வாழும் பெருநிலக்கிழார் ஒருவரின் செல்வச் சிறப்பையும், விருந்தோம் பலையும்பற்றி விளக்குவது இச்செய்யுள்.

(கட்டளைக் கலித்துறை)

**122. வெண்ணெயும் பார்த்தன்னை கண்ணையும்**
**பார்த்துத்தம் மெய்யிற்பட்ட**
**புண்ணையும் பார்த்துத் திரிநெடு**
**மால்புங்க னூர்க்கிழவன்**
**பண்ணையும் சேலுக ளுந்தட**
**நீள்வயல் பாயுமவன்**
**திண்ணையும் கெண்டை பிறழுங்கல்**
**யாணத்திற் சென்றவர்க்கே.**

உரியிலிருக்கும் வெண்ணெயை (உண்ணும் அவாவினால்) பார்த்து, (அதனைக் காவல் செய்யும் தன்) அன்னையின் கண்களை யும் பார்த்து, (அவளறியாமல் திருடி உண்டதனால் அவள் மொத்திய, தன்) மேனியில் பட்ட புண்ணையும் பார்த்துத் திரியும் கண்ணபிரானாகிய நெடுமால் எழுந்தருளும் புங்கனூரில் வாழும் பெருநிலக் கிழவனின் பண்ணைதோறும் சேல்மீன்கள் துள்ளித் திரியும். அவ்வூர்த்தடங்களிலும், பெரிய வயல்களிலும் மீன்கள் பாய்ந்து விளையாடும். இவையேயன்றி, அவன் திண்ணையிலும் கெண்டை மீன் பிறழும், அவன் கலியாணத்திற்சென்றவர்களுக்கு.

[பண்ணை = பண்பட்ட வயல்கள். தடம் = குளம். 'திண்ணையும் கெண்டை பிறழும்' என்றது, கல்யாண விருந்தில் விருந்தினர் உண்ணும் வட்டில்தோறும் மீன் நிறைந்த உணவளிப்பான் என்பதைக் கருதிப்போலும்.]

—*—

### தோற்றுவாய்

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, விரகத்தை மிகுவிக்கும் நிலவு தோன்றக்கண்டு, முருகன் ஏறும் மயிலிடம், 'உன் பாம்பினை ஏவி, அதனைக் கொல்வாயாக' என முறையிட்டது.

### (நேரிசை வெண்பா)

**123. தாயரவு மூள வருத்துஞ்சந்த் ரோதயத்துன்**
**வாயரவை விட்டுவிட மாட்டாயோ?-தீயர்படச்**
**சீறு மயிற்பெருமாள் தென்கதிர்கா மப்பெருமாள்**
**ஏறு மயிற்பெருமா ளே!**

தீங்குபுரிந்த அவுணர்கள் யாவரும் ஒழியச் சீறிப் பாய்ந்து கொல்லும் வேலாயுதத்தை உடைய பெருமானாகிய கதிர்காமப் பெருமாள் ஏறிச் செலுத்தும் மயில் வாகனமாகிய பெருமாளே! தாவிவந்து விடநாகத்தைப் போல வருத்தத்தைச் செய்யும் இந்த உதய சந்திரனை விழுங்குமாறு, நீ, வாயிலே கௌவிக் கொண் டிருக்கும் பாம்பினை ஏவி விடமாட்டாயா? (நீ ஏவினால் யான் உயிர் வாழ்வேன்.)

[சீறும் அயில் பெருமாள், ஏறும் மயில் பெருமாள், எனப் பின் இரண்டடிகள் திரிபென்னும் சொல்லணி நயம்பட அமைந் துள்ளன. அயில்—வேல்]

—★—

### தோற்றுவாய்

சோழன் கிள்ளியின் வெற்றிஉலாவைக் கண்ட தன் மகள், அவன் மேற் கொண்ட மையலால் வருந்துவதைச் செவிலி குறிப்பாகப் புலப்படுத்தியது.

### (நேரிசை வெண்பா)

**124. இலங்கிலைவேற் கிள்ளி எதிர்மலைந்த அந்நாள்**
**பொலன்கலையும் பொன்முடியுஞ் சிந்தி நிலங்குலுங்க**
**ஓடினார் மேலோ உயர்தாம வெண்குடையைப்**
**பாடினார் மேலோ பழி?**

வென்று விளங்கும் வேற்படையை உடைய கிள்ளியானவன், பகைத்த மன்னர்களோடு எதிர் ஏற்றுப் போர் புரிந்த அந்த நாளில், அப்பகை மன்னவர்கள் தத்தம் பொன்னுலாகிய ஆடை யணிகளும், முடிகளும் சிதறி நிலத்திலே விழுமாறு சிந்திப் பூமி யதிரும்படியாகப் புறமுதுகிட்டு ஓடினார்கள். அப்படி ஓடியவர்கள் பக்கம் துன்பம் நிகழ்வதா? அல்லது, அவ்வேந்தனின் கொற்றக் குடையைப் புகழ்ந்து பாடினார்களே (என் மகள் முதலான பேதைப் பெண்டிர்கள்) அவர்கள் பக்கம் துன்பம் நிகழ்வதா? (ஓடியவர் பக்கமின்றிப் பாடியவர் பக்கமன்றோ இப்பழி வந்து சேர்ந்துளது' எனச் செவிலி கூறினாள்.)

[பழி = ஈண்டு மோகத்தால் வந்த மெலிவைக் குறித்தது.]

—o—

தோற்றுவாய்

ஆயர்பாடியிலே கண்ணன் நிகழ்த்திய திருவிளையாடல்களை எண்ணி, ஒரு புலவன் கூறியது. இப்பாட்டின் பின் இரண்டடிகளும் திரிபென்னும் சொல்லணியால் அமைந்துள்ளமையே இதன் சிறப்பாகும்.

## (நேரிசை வெண்பா)

**125.** **வையம் வளர வளருந் திருவுந்திச்**
**செய்ய பவளவாய்ச் சித்தாயர் — ஐயன்**
**குடிப்பதுந்தாம் பாலே குடித்தானென் றாய்ச்சி**
**அடிப்பதுந்தாம் பாலே யழ.**

உலகமெல்லாம் இருந்து செழிக்கத்தக்க அளவிலே வளரும் பெருமை பொருந்திய வயிற்றினையும், சிவந்த வாயினையும் உடைய, ஆயச்சிறுவர் சிறுமியர் தலைவனாகிய கண்ணன், தாம் (திருடிக்) குடிப்பதும் ஆய்ச்சியர் உரியிலே வைத்திருக்கும் பாலமுதை, அது கண்டு சினந்த ஆய்ச்சியர் 'தாம் பாலைக்குடித்தான் இவனே' என்று அவன் அழுமாறு அடிப்பதும் தாம்பினாலேயாம்.

[''தாம்'' இரண்டும் அசைகள், தாம்பு = கயிறு, உந்தியும் வாயும் உடைய ஐயன் என்று கூட்டுக.]

—o—

தோற்றுவாய்

தான் விரும்பும் ஒரு நங்கையின் உறுப்பு நலனைப் பாராட்டும் ஒரு தலைவன் கூற்று. இதனுள் 'பாகை' என்னும் ஊரில் வாழ்ந்த 'கறுப்ப முதலி' என்னும் வள்ளல் சிறப்பிக்கப் பெறுகிறான். இப் பாட்டும், பின் இரண்டடிகளில் திரிபணி யமைந்து சிறக்கிறது.

**(நேரிசை வெண்பா)**

**126. கோகனகத் திற்குநிகர் கொட்டியோ? குற்றமற்ற**
**மா,கனகத் திற்குநிகர் வல்லிரும்போ?—பாகை**
**கறுப்பமுத லிக்குநிகர் கன்னனோ? ஏழை**
**உறுப்புமுத லிக்குநிக ரோ?**

தாமரை மலருக்குக் கொட்டிப்பூ நிகராகுமோ? மாசில்லாத (அபரஞ்சித்) தங்கத்திற்கு வலிய இரும்பு நிகராதமோ? 'பாகை' என்னும் ஊரில் வாழும் கறுப்ப முதலிக்குக் கொடையிற் சிறந்த கன்னன் நிகராவானோ? (அது போலவே) இந்நங்கையின் உறுப்புக்களுக்கு, அடிக்கரும்பு நிகராகுமோ? அவை ஆகாவாறு போல இதுவும் ஆகாதென்பேன்.

[ஏழை = பெண், ஈற்றடியை, உறுப்பு—முதல்—இக்கு—நிகரோ எனப்பிரிக்க. முதல் = அடி; இக்கு = கரும்பு. 'வல்லிரும்பு' என்றதனால் கனகம் அபரஞ்சித்தங்கம் எனக்கொள்க.]

—o—

தோற்றுவாய்

நற்கணவன் வாய்க்கவேண்டுமென்று தெருமன்றத்தில் எருமுட்டித் திங்களை வழிபடும் பேதைப் பெண்டிரின் நிலைகண்டிரங்கும் ஒரு முதியவள் கூற்று. இதுவும் பின்னிரண்டடிகளும் திரிபணி கொண்டது.

(நேரிசை வெண்பா)

**127. தெருவடங்க நின்றுநின்று திங்கடொழு வேமென்**
**றெருவெறிந்து மூட்டுவதிங் கென்னோ-தருவடர்ந்த**
**பாகையரிச சந்திரனைப் பைந்தாமம் கேளாமல்**
**தோகையரிச் சந்திரனைச் சூழ்ந்து?**

மயில் போலும் சாயலையுடைய இப்பெண்டிர், சோலைகள் நிறைந்த 'பாகை' என்னும் ஊரில் விளங்கும் அரிச்சந்திரன் பூண்டிருக்கும் மாலையை உரிமையாகக் கேட்காமல், (விண்ணில் நிலவும்) இச்சந்திரனைச் சூழ்ந்துகொண்டு, 'தெரு முழுதும் நிறைந்து நின்று, திங்களை வணங்கி வேண்டுவோம்' என்று கூடி, எரு மூட்டி நிற்பது என்ன பயனைக் கருதி?

[இதனால் 'பாகை' என்னும் ஊரில் வாழ்ந்த 'அரிச்சந்திரன்' என்னும் பெருமகன் சிறப்புப் புலனாகின்றது. எரு = வறட்டி) இறுதியடியைத் 'தோகையர் இச்சந்திரனை' எனப் பிரித்துப் பொருள் கொள்க. "எருவெறிந்து மூட்டுதல்" என்றதன் மரபு புலனாகவில்லை.]

—o—

தோற்றுவாய்

தலைவன்மீது கொண்ட மையலால் வருத்தும் ஒருத்தி, மன்மதன் தன்பால் செய்யும் கொடுமைகளைக் கூறுவது; இதனுள் ஒரு உழத்தி கூறுவது போல் சிலேடை நயந்தோன்ற சொற்களை அமைத்திருப்பது சுவையாக உளது.

(நேரிசை வெண்பா)

**128. தேரடியில் முத்திக்குத் தீட்டுஞ் சிலைமதனன்**
**போரடியில் வந்து புரியறுத்தான்—காரடியில்**
**தாளடியை நட்டான் தன்வாரம் பாதியென்றான்**
**வாளுருவிக் கொண்டான் மதன்.**

தேரடியில் முன்பு நின்று, கரும்பு வில்லை வளைக்கும் மாரவேள், முதற்கண் என்மீது போர் தொடங்க அடியிட்டு வந்து, என் சங்கு வளையல்களை அறுத்தான்; பின்பு, கார் காலத் தொடக்கத்தில் வந்து, தன் முயற்சியை நிலைநாட்டினன். பின்னர், தன்னுடைய பங்கு 'சரி பாதி' என்று கூறிக்கொண்டே, அந்த மன்மதன் வாளை உருவிக் கொண்டு நின்றான். இஃதென்ன வியப்பு!

[போர் அடியில் = அடிப்படையான போர். புரி = சங்கு; புண்டு வளையலை உணர்த்தியது. தாளடி = முயற்சி. வாரம் = உரிமை. உடலும் உயிருமாகிய ஒன்றுள், ஒரு பகுதியை வேண்டி வெகுண்டான். "வாளுருவிக் கொள்ளல்" ஒரு பழமொழி. இதனுள் வைக்கோல் போரடிக்கின்ற போது வைக்கோள் புரிமை அறுத்தான்; கார்காலத்திலே வந்து தாளடியை நட்டான் என உழவுக் குடும்பத்துப் பூசல்போல அமைந்துள்ளமை காண்க.

—*—

தோற்றுவாய்

சாலையூர் 'விண்ணன்' என்பானின் கொடைத் திறத்தைப் புகழ்ந்தது.

(நேரிசை வெண்பா)

129. கூர்ந்த வறுமையிடைக் கோளரவம் ஈன்றமணி
சார்ந்த புலவர் தமக்களித்தார் — வார்ந்ததரு
மேலைவிண்ணில் மண்ணில் விளங்கு புகழ்படைத்த
சாலைவிண்ண னுக்கிணையார் தாம்?

மிகமிக வறுமையுற்ற காலத்தே (தன்னுயிர் போக்கிக் கொள்ளப் புற்றிடையே கை நுழைத்தபோது இவர்தம் அற வலிமை நோக்கி கொள்ளுதலைத் தப்பாத நாகமானது அளித்த உயர்ந்த அந்த நாகரத்தினத்தையும் தன்பால் இரந்துவந்த புலவர்க்கு ஈந்து மகிழ்ந்தார். 'சாலை விண்ணன்' என்னும்

வள்ளல். நீண்ட 'கற்பகத்தரு' என்பது விண்ணுலகத்தில் உள்ளது. இம் மண்ணுலகில் நிலைபெற்ற புகழ்படைத்த இந்த வள்ளலுக்கு வள்ளண்மையில் இணையாயவர் யார்; ஒருவருமில்லை.

—o—

தோற்றுவாய்

'பொய் நிலைபெற்ற இடத்தில், இம்மை மறுமைப் பயன்கள் நீங்கி நரகம் விளையும்' என விளக்குகின்றது, இப்பாட்டு.

**(நேரிசை வெண்பா)**

**130. இம்மை நலனழிக்கும் எச்சங் குறைபடுத்தும்**
**அம்மை அருநரகத் தாழ்விக்கும்—மும்மை**
**அறந்தேய்க்கும் செய்ய அலர்மகளும் நீக்கும்**
**மறந்தேயும் பொய்யொழுகும் வாய்.**

சோர்வுகாரணமாக, மறந்தும் பொய்யுரை ஒழுகும் வாயானது, இவ்வுலகத்திற்பெறும் இன்பத்தையும் புகழையும் அழிக்கும். மேலும், தன் எச்சமாகிய மக்கட்பேற்றினையும் பிறவற்றினையும் குறைந்தொழியச் செய்யும். மறுமை யுலகத்துச் சென்றகாலை, கொடிய நரகில், எழவொட்டாமல் ஆழ்த்திவிடும். முற்பிறப்பில் செய்த நல்வினையையும் புண்ணியங்களையும் தேய்த்து விடும். திருமகளையும் நீக்கும். (ஆதலின் ஏக்காலத்தும் எந்நிலையிலும் மறந்தும் பொய்கூறுதலைத் தவிர்க.)

[மும்மை அறம் என்பதற்கு 'அறம், பொருள், இன்பம்' எனப் பொருள் கொள்ளலுமாம்.]

—o—

தோற்றுவாய்

காஞ்சிபுரத்தில் வாழ்ந்த 'அம்மைச்சி' என்னும் கணிகை வீட்டின்மீது, காஞ்சி வரதராசப்பெருமாள் தேர், உலாவருங்காலை மோதியதுகண்டு, ஒரு புலவர் கூறியது. இது, பழிப்பதுபோலப் புகழும் அணிவகையைச் சார்ந்தது.

(நேரிசை வெண்பா)

131. பாப்புக் குரங்கைப் படையாகக் கூட்டிவந்தீர்
தேர்ப்பெருமா ளே! கச்சிச் செல்வரே!— [கோப்பமைந்த
கொம்மைச்சிங் காரலங்கைக் கோட்டையென்று
[கொண்டீரோ
அம்மைச்சிங் வாழும் அகம்?

தேரின்கண் ஊர்ந்து வரும் காஞ்சிபுரத்துச் செல்வராகிய பெருமாளே! உமக்குப் போர்த்துணைப்படையாக பார்ப்புக் குரங்கை உடனழைத்து வந்தீர். பல கோவையாகப் பிணைத்து எழுப்பப் பெற்ற பெருமையை உடைய அழகு பொருந்திய இலங்கை மா நகரின் கோட்டை எனக்கருதினீர் போலும். (இப்பொழுது நீர் நும் படையோடு மோதியது இலங்காபுரிக் கோட்டையினும் வலி யுடைய) இஃது, அம்மைச்சி வாழும் அகமென்பதை அறிக.

[தேர்ப் பெருமாள் என்பதில் 'ர்' கரம் ஆசெதுகை. 'தேப் பெருமாள்' எனப் பாடங்கொண்டு 'இனிய பெருமாளே' எனவும் பொருள் கொள்ளலாம். பாப்பு=பார்ப்பு; ஈண்டு அருச்சகரைக் கருதியது.]

—*—

தோற்றுவாய்

'நீ வெகுண்டு நோக்கிய இடம் தீப்பற்றும், ஊர் பாழாகும்' என ஒரு மன்னனின் போராற்றலைச் சிறப்பிக்கும் பாடல்.

(நேரிசை வெண்பா)

132. ஒருபக்கம் மாதர் அழகுரலும் ஓயா
ஒருபக்கம் ஓரிக் குரலும்—ஒருபக்கம்
தீக்கதுவும் அம்புகையும் ஆயிற்றே தெவ்வடு போர்
மாக்கதத்தால் நீமுனிந்த மண்!

அரசே! மிக்கெழுந்த வெகுளியால் நீ வெறுத்து நோக்கிய பகைவர் தேயம், ஒரு பக்கம் மாதர்கள் ஓயாமல் அழும் குரலும், மற்றொரு பக்கம் நரிகளின் ஊளைக் குரலுமாகி, ஒருபக்கம் தீப்பிழம்பு சென்று பற்றுதலால் எழும் பெரிய புகையுமாய் நிகழ்வதாயிற்றே.

[தெவ்—பகை. கதம்—கோபம். முனிவு—வெறுப்பு]

—o—

### தோற்றுவாய்

'தன்னலங்கருதுவார் தமக்கொரு பயனுண்டாயின் பிறர் வருத்தம் பாரார்' என்னும் உண்மையைக் கற்றாழைக் கள்ளியை வைத்துக் கூறியது.

### (நேரிசை வெண்பா)

133. **தீருமருந் தொன்றுளதேல் சென்றறிந்தோர் அம்மருந்தின்**
**வேரும் பறிப்பார் மெலிவறியார்—பாரிடத்துத்**
**தன்னே வறியாத் தருங்கள்ளித் தாழைகேள்**
**உன்னே வறியா துலகு.**

தனக்குற்ற துன்பத்தை எண்ணாமல் பிறருக்கு மருந்தாய்த் தன்னையே தருகின்ற கள்ளித் தாழையே! யான் கூறும் உண்மையைக் கேட்பாயாக! உலகோர் தமக்குற்ற நோயைத் தீர்க்கும் மருந்து ஒன்று இருக்குமானால், அதனைவருந்திச் சென்றடைந்தவர் அம்மருந்தின் இலை தழைகளையேயன்றி, வேரையும் பறித்துப் பயன்கொள்வார். ஆதலின், உன் துயரைச் சிறிதும் அறியமாட்டார்.

—*—

### தோற்றுவாய்

முருகன் வதியும் குறிஞ்சியில் வாழும் வேடர்களின் செல்வச் சிறப்பை உணர்த்தும் இப்பாடல்—குறவர் பிறருக்குக் கூலியாக அளிக்கும் பொருள், கொழித் தெடுத்த வேயீன்ற முத்துக்களாம், என்கிறது.

(நேரிசை வெண்பா)

134. பறவைப் பகைப்பகைஞர் பாதிப்பேர்க் காகக்
குறவர்கொடு வந்தளக்குங் கூலி—மறவர்
திறங்கடந்த வேல்முருகர் சீர்வேடர் நாட்டில்
முறங்கடந்த வேயீன்ற முத்து.

அசுரர்களின் பேராற்றலைக் கடந்து வென்றி கொண்ட வேற் படையை உடைய முருகக்கடவுள் வாழும் சிறப்பினை உடைய வேடர் நாட்டில் வாழும் குறவர்கள், பறவைப் பகையின் பகைவராம் பாதிப் பேர்க்காகக் கொண்டுவந்து கூலியாக அளிக்கும் பொருள் யாதெனின், முறங்கொண்டு கொழித்தெடுத்த மூங்கிலின் முத்துக்களேயாகும்.

[இப்பாடலின் முதலடிக்குப் பொருள் செவ்வையாக விளங்க வில்லை.]

—*—

தோற்றுவாய்

திருப்பனந்தாள் 'பட்டன்' என்னும் பெருமகன் பால் மையல் கொண்ட பெண்டிருள் ஒருத்தியின் கூற்று.

(நேரிசை வெண்பா)

135. வட்டமதி யைக், குயிலை மாரவே ளைப், பனந்தாள்
பட்டனை, நாம் நோவதென்ன? பாவியேம்-கெட்டவிழிக்
காகத்தைக், கண்ணுதலைக் கண்ணுதலுக் காரமாம்
நாகத்தை நோகாமல் நாம்,

திருப்பனந்தாள் பட்டனைக் கூடப் பெறாத பாவியேமாகிய நாம், ஒருவிழி கெட்டு ஒரு விழியால் இருபுறமும் நோக்கும் காக்கையையும், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானையும், அச்சிவபெருமானுக்கு மாலையாக விளங்கும் நாகத்தையும், நொந்து கொள்ளாமல், வட்டமதியையும், குயிலையும், மாரவேளையும், பனந் தாளில் வாழும் பட்டனையும் நோவது என்ன அறியாமை?

[இப்பாட்டு மயக்க நிரல்நிறையணி பெற்றுநின்றது. சிவபெருமான் அணிந்துள்ள பாம்பு இந்த வட்டமதியை விழுங்காமையானும், சிவபெருமான் மாரவேளை முழுதும் அழிக்காமையானும், காக்கை குயிலைக் கொல்லாமையானும், அவை இப்பொழுது நம்மை வருத்துகின்றன. எனவே; அவற்றை நோவதனால் பயனென்ன? என்றாள். பட்டனை நோவதென் என்பதற்குக் காரணம் 'பாவியேம்' என்பதனால் குறிப்பாகப் புலப்படுத்தினாள். 'தம் பகைக்குப் பகை தாமக்கு உதவவில்லையே' எனக் குறிப்பாற் புலப்படுத்தும் நயம் சுவைக்கத்தக்கது.

—★—

தோற்றுவாய்

'பரத்தையிற் பிரிந்து வந்துள்ளான்' எனத் தன் தலைவன் மீது ஐயுற்ற தலைவி, ஊடல் தோன்றக் கூறுவது.

## (நேரிசை வெண்பா)

**136. எங்கை யவளொருத்தி யாமிருவர் மூவரையும்**
**பொங்கும் அமளி பொறுக்குமோ? — சங்கங்**
**குழையவரால் பாயும் குருநாடர் கோவே!**
**பழையவரால் என்ன பயன்?**

நீர் நிறைந்த வயல்களிடத்துள்ள சங்குகள் உடல் மெலியுமாறு, வரால் மீன்கள் பாய்ந்து விளையாடும் மருத நிலவளம் நிறைந்த குருநாடர் தலைவனே! (நீ இப்பொழுது பிறரறியாவாறு) புதியவளாக வந்த என் தங்கை ஒருத்தியோடு நாமிருவருமாக இப்பொழுது மூவரானோம். எனவே, நம் மூவரையும் இந்த அழகு பொங்கும் படுக்கையானது தாங்குமோ? (தாங்காது, ஆதலின் ஒருவர் நீங்க வேண்டும்; அப்படி நீங்குவதாயின், யானே அதனைச் செய்தல் வேண்டும். ஏனெனின்) பழையவளாகிய என்னால் உமக்கு யாது பயன்? என ஊடினாள்.

—o—

தோற்றுவாய்

'செவிலியின் காவலில் தலைவியுள்ளாள்' எனத் தோழி கூறக் கேட்ட தலைமகன், 'இல்லத்தினின்று விடுபட்டு வந்தாலன்றித் தலைவிக்கு இன்பமில்லை' எனக் கூறுவது போன்று தலைவியை அழைத்துவருமாறு தோழிக்குக் குறிப்பாற் கூறியது. இது 'பகற்குறி நயத்தல்' என்னும் அகத்துறையைச் சார்ந்தது.

(நேரிசை வெண்பா)

137. அரிதா மரையி லிருந்தார் அமுதமுண்ப
தரிதா மரையிலிருந் தாலோ—அரிதாளை
நாடுகின்ற பிள்ளையன் நாரா யணபட்டன்
நீடுகின்ற மாதையில்மா னே!

திருமாலின் பாதங்களைச் சிந்தித்துப் போற்றும் பிள்ளையனாகிய நாராயணபட்டன் விளங்கி வாழும் 'மாதை' என்னும் ஊரில் திகழும் மான் போன்ற நங்காய்! வண்டுமொய்க்குந் தாமரை மலரில் விளங்கும் இலக்குமியாகிய தலைவி, தன் இல்லத்தில் உள்ள அரையில் இருந்தால் இன்பம் எய்துவதோ அரிதாம். (ஆதலின் என்பால் அழைத்தருள் புரிவாயாக.)

[முதலிரண்டடிகளும் 'மடக்கு' என்னும் சொல்லணியாம். அவற்றை, 'அரி தாம் மரை' எனப்பிரிந்து, 'வண்டுதாவும் (மொய்க்கும்) தாமரை மலர்' என்றும், 'அரிது ஆம் அரையில் இருந்தால்' எனப்பிரித்து 'அரையில் இருந்தால் இன்பம் பெறுதல் அரியது ஆம்' எனப் பொருள்கொள்க. தலைவியை இலக்குமியாகவே கருதினுதலின், 'தாமரையிலிருந்தார்' என்றான். அமுதம் ஈண்டுக் காம இன்பத்தைச்சுட்டும். 'அறை' எதுகை நோக்கி 'அரை' என நின்றது. 'இருந்தாலோ' என்னும் ஓகாரத்தை உண்டோ' எனக்கூட்டுக.]

—★—

### தோற்றுவாய்

நெய்தல்நிலப் பெண்டிர்யானைக் கொம்புகள் பெறுதற்காகப் பண்டமாற்றாகக் கொடுக்கும் முத்துவடங்களை, குறிஞ்சி நிலப் பெண்டிர் வாங்காது மறுப்பது இப்பாடலின் கருத்து. அதற்கு அவர் கூறும் காரணம் சுவையாக உளது.

## [நேரிசை வெண்பா]

**138. பூங்கோதை மாதர் புனைகின்ற முத்துவடம்**
**வாங்கோம் குடிக்கு வடுவென்று—யாங்கள்**
**முலைக்கோ டணியிலது முக்கணனார் சென்னித்**
**தலைக்கோடு பட்ட தழும்பு.**

பூங்கோதைகளை யணியும் மாதராகிய நாங்கள், நீவிர் புனை கின்ற முத்து வடங்களை வாங்கி எம்முடைய முலைமுகம் விளங்க அணிந்து கொண்டோமானால், அதனை முக்கண்ணனாகிய சிவ பெருமான் தன் முடியிலே சூடும் தலைக்கோடாகிய 'பிறைச் சந்திரன்' என்று உலகத்தார் கூறுவாராதலின். அக்கூற்று எமது குடிக்கு வடுவாமென்று கருதி வாங்க மாட்டோம்.

[வடு— குற்றம். கோடு — குவடு (உச்சி) "உலகத்தார் கூறுவர்" என்பது அவாய் நிலையால் கொள்ளப்பட்டது. முருகன் குறிஞ்சி நிலத்தார்க்கு மாப்பிள்ளையாதலின், முருகனின் தந்தை யணியும் பொருளைத் தங்கள் மார்பில் அணிவது குற்ற மென்றார்கள்.]

—o—

### தோற்றுவாய்

களவுக் காலத்துத் தலைவனைப் பிரிந்துள்ள தலைவி, நிலா வெளிப்பாடுகண்டு வருந்தி மெலியும் நிலையைத் தோழி கூறியது. இதனுள் கிழமைகள் ஏழும் தொனியாக நின்று சுவை பயக் கின்றது.

(நேரிசை வெண்பா)

139. என்னசனி ஞாயிறுபோல் இத்திங்கள் வந்துதித்தால்
மின்னியசெவ் வாய், மின் மெலியாளோ—உன்னரிய
மன்னுமத னம்புதனல் வாய்த்தவியா ழம்படைத்தாள்
அன்னையெதிர் வெள்ளியா னள்.

இது என்ன சனியன், இந்த நிலாவானது வெப்பமுடைய கதிரவனைப்போல வந்து தோன்றுமானால், ஒளிபொருந்திய சிவந்த வாயினையுடைய மின்னற்கொடி போன்ற தலைவி, மேனி மெலிய மாட்டாளோ? (மெலிவாள்), மேலும், எண்ணுதற்கரிய நிலைபெற்ற மன்மதனின் அம்புகளால் வாய்த்த பசலை நிறத்தை மேனிமுழுதும் படைத்தாள். அன்னையை எதிரே கண்டு (அஞ்சி) உடம்பு வெளுத்து விட்டாளே!

[சனி, ஞாயிறு, திங்கள், வியாழம், வெள்ளி, என்பன செஞ் சொல்லாகவும்; செவ்வாய், புதன் என்பன குறிப்புச் சொல்லாக வும் அமைந்துள்ளமை காண்க. வியாழம்—குரு. குரு—நிறம், ஈண்டு பசலை நிறத்தை உணர்த்தியது.]



தோற்றுவாய்

இசையும், இலக்கணமும் அறியாமல் செய்யுள் பாடும் 'பரமன்' என்பவனை எள்ளி நகும்வகையாற் கூறியது இப்பாடல்.

(நேரிசை வெண்பா)

140. பாட்டாய் மடத்துப் பரமாஉன் பாழ்ங்கவியைக்
கேட்பாரெல் லாம்புத்தி கெட்டபேர்—கோட்டாரும்
ஒணான் விழுந்தாலும் உண்டுபரி காரமிது
வாணான் அளவும் வரும்.

நல்ல செய்யுட்களை ஆராயும் மடத்திலே (அஃதுணராத அறிவிலியாகி) இருக்கும் பரமா! உன்னுடைய பாழுங் கவிகளைக் கேட்டோரெல்லாம் புத்திகெட்டவர்களே யாவர். (புத்தியுள்ளவர் கேளார். ஏனெனில்) மரக்கொம்புகளிலே ஆடித்திரியும் ஒருவன் ஒருவர்மீது விழுந்தாலும், மணிமந்திர மருந்துகளாகிய பரிகாரம் உண்டு. உன் பாடலால் வரும் தீமையோ ஒருவர் வாழ்நாள் முழுதும் தொடர்ந்து நிலைக்குமே!

[பரிகாரம்—குற்றத்தைத் தீர்க்கும் கருவி இப்பாடல் கல்வி வளர்ச்சியில்லாத ஒருவர் பாடியதாகத் தெரிகிறது.]

—★—

தோற்றுவாய்

"வந்த விருந்தினரைக் கூடியவரையிற் பேணுவதே அறம்; அதனைச் செய்யாதார்க்கு நரகமே கிடைக்கும்" என விருந் தோம்பலைச் சிறப்பிக்கின்றது, இப்பாட்டு.

## (நேரிசை வெண்பா)

**141. வருந்தி ஒருவன்பால் மற்றொருவன் வந்தாற்**
**பொருந்தி யகமலர்ந்து போற்றி—விருந்தென்று**
**தன்னா லியன்றளவு தானுதவா னாயினவற்**
**கின்னா நரகே யிடம்.**

ஒருவனிடத்திலே மற்றொருவன் வருத்தத்தோடு வந்தால், அவனை அகமும் முகமும் மலர வரவேற்றுப் பொருந்திய வகையில், தன்னாலியன்ற அளவு விருந்தென அளித்து உதவானாயின் அவனுக்கு மறுமையில் கிடைக்கும் இடம் கொடுமையான நரகமேயாம்.

—o—

தோற்றுவாய்

"சிவபெருமானை நோக்கித் தவம்புரியின், தமக்குச் சமணர்களால் தீங்குவருமே" என்று அஞ்சுவது போன்று, சமணர்கள் இழைத்த கொடுமைகளையெல்லாம் பயனற்றவையாகச் செய்த திருநாவுக்கரசு சுவாமிகளின் தவச் சிறப்பைக் குறிப்பாற் கூறுவது, இப்பாடல்.

(நேரிசை வெண்பா)

**142** **ஒன்றும் அறியேம்யாம் உம்மாணை அப்பரே!**
**சென்று தவம்புரியின் சீபதியார்—கன்றக்**
**கயிற்றினாற் கட்டிக் கடலிடத்தி லாழ்த்தி**
**இயற்றினு லென்செய்வேம் யாம்.**

பரமனின் பேரருளைப்பெற்ற அப்பரடிகளே! யாங்கள், மந்திர சாதனவிச்சைகள் ஏதொன்றும் உம் மீது ஆணையாக அறியேம். (ஆதலின் இந்நிலையில், உம்மைப்போல இறைவனருளை விரும்பிச்) சென்று தவம்புரிவோமானால், அருகனை வணங்கும் சமணர்கள், எம்மை வடக்கயிற்றால் உடல்நோவப் பிணித்துக் கடலிடையே ஆழ்த்திப் பல்வாறு கொடுமைகளைப் புரிவாராயின் என்செய்வேம்? அருள்வீராக!

[சீபதியார்—அருகனை வழிபடுவோர். இயற்றினால் என்பதற்கு ஏற்பக் கொடுமைகள் எனக் கூட்டிக்கொள்க.]

—★—

தோற்றுவாய்

பெரியதிருவடியாகிய கருடாழ்வாரை வணங்கி வழிபடுபவர்க்குப் பாவம் நீங்கி எண்ணிய இன்பமெல்லாம் கிட்டுமென்கிறது, இப்பாடல்.

(நேரிசை வெண்பா)

**143. பண்ணியதோர் பாவம் பறக்குமே, பார்மீதில்
எண்ணியதோர் நற்கருமம் எய்துமே—வெண்ணெய்த்
திருடனை ரைச்சுமந்த தீரனை ரைச்செங்
கருடனை ரைக்கண்டக் கால்.**

ஆயர்பாடியில் வெண்ணெயைத் திருடி உண்ட கண்ணனாகிய திருமாலைச் சுமக்கும், பேராற்றலையுடைய, செம்மேனியை உடைய, கருடாழ்வாரின் திருவடியைக் காணின்; காணுவோர் முற்பிறப்பிலும், இப்பிறப்பிலும் செய்த பாவங்களெல்லாம் பறந்தோடும். அதுமட்டுமின்றி, இவ்வுலகில் விரும்பிக்கருதும் ஒப்பற்ற நற்செயல்களெல்லாம் உடனே வந்துசேரும்.

[ஆதலால், 'காணுங்கள்; கண்டு வழிபடுங்கள்' என்கிறார். 'திருடனைரைச் சுமந்த தீரன், ஆரைச் செங்கருடனை' எனப் பிரித்து 'ஆரை'—'ஆரூர்' என்றும் பொருள் கொள்ளலாம்.]

—o—

தோற்றுவாய்

திருவாரூரிறைவனுக்கு ஒரு பெருமகனார் ஏற்பாடு செய்த அபிடேகக் கட்டளையைச் சிறப்பித்துப்பாடியது. சுவையான கற்பனை.

(நேரிசை வெண்பா)

**144. பச்சைத் திருமால் பசித்தழுது மண்தின்னார்
பிச்சைக்கும் ஈசன் புறப்படான்—நிச்சயமே
அட்டதிக் கும்புகழும் ஆரூர் அபிடேகக்
கட்டளைமுன் உண்டானக் கால்.**

'எட்டுத் திசையும் புகழ் பரவும்படி இப்பொழுது ஏற்படுத்திய ஆரூர் அபிடேகக் கட்டளை அறமானது, முன்பே ஏற்பட்டிருக்குமானால், பச்சைமாமேனித் திருமால், பசியால் அழுது மண்ணைத்

தின்றிருக்கமாட்டார். ஈசனும், கையில் ஓட்டினை ஏந்திப் பிச்சைக்கும் புறப்பட்டிருக்கமாட்டான்' என்பது உறுதியாம்.



தோற்றுவாய்

தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி, தான் வளர்க்கும் கிள்ளையிடம் கூறுவது. பின்னிரண்டடிகளில் திரிபணி அமைந்து சுவை பயக்கின்றது.

## (நேரிசை வெண்பா)

**145. கொத்தலருந் தாரான் குலசே கரன்கூடல்**
**பத்தி யிளங்கமுகின் பாளைதொறும்—தத்திவரும்**
**தாளஞ் சுகமே தலைவர் தமைப்பிரிந்த**
**நாளஞ் சுகமே நமக்கு.**

வேப்பமலர் கொத்தாக அலரும் மாலையையணிந்து விளங்கும் குலசேகரபாண்டியன் ஆளும் கூடலம் பதியில், வரிசையாக வளர்ந்தோங்கும் பாக்கு மரத்தின் இளம் பாளைகள்தோறும், தத்தித்தத்தி நடந்துவரும் கால்களை உடைய கிள்ளையே! தலைவர் நமைப்பிரிந்துறையும் ஒருநாள் நமக்கு ஐந்துயுகமேயாகும்.

['தாள் அஞ்சுகமே' என்றும், 'நாள் அஞ்சு உகமே' என்றும் பிரிக்க. அஞ்சு—ஐந்து என்பதன் போலி. உகம் = யுகம்.]



தோற்றுவாய்

'சோழன் வீதியுலாவந்து சென்றான்' எனக்கேட்ட பெதும்பை மகளிர், அவன் ஏறிவந்த தேரின் மணிக்குரலைக் கேளாமையின், 'அந்த மணிகள் செம்மையாக வார்க்கப்படவில்லை போலும்' எனத் தம் மையல் தோன்றக் கூறியது.

(நேரிசை வெண்பா)

**146. வீரோ தயன் அபயன் மேவுங் கடைமணியின்**
**தேரோதை கேட்கப் பெறுகிலோம்—சீரோத**
**வார்த்தான் ஒருவன் வலமுமிட மும்பிரித்துப்**
**பார்த்தானோ இல்லையோ பண்டு.**

வீரத்தால் உதயஞ் செய்தவனாகிய அபயன், திருவுலாவைப் பொருந்திவந்தபோது, அவன் ஏறிவந்த தேரின் கடைமணியின் ஓலியை நாம் கேட்கப்பெற்றிலோம். காரணம் என்ன? அபயன் உலாவரும் சீரினை ஒலித்துக் காட்டுவதற்காக மணிகளை வார்த்துச் செய்த கன்னான், 'வார்ப்புச் செம்மையாக அமைந்துளதா' என்று அவற்றின் வலப்பாகத்தையும், இடப்பாகத்தையும் முன்பே பிரித்து ஆராய்ந்து பார்த்தானோ இல்லையோ? பார்க்கவில்லை போலும்!

[வீர—உதயன் 'வீரோதயன்' எனக் குணசந்தியாய் நின்றது. ஓதை = ஒலி. சீர்ஓத = வருகையை ஒலித்துக்கூற. ஒருவன் — கன்னான்.]

—*—

தோற்றுவாய்

காவிரிசூழ் நாட்டின் மருதவளச் சிறப்பைப் புலப்படுத்தும் இப்பாடலில் கரிகாலன் செங்கோன்மையையும், நாட்டு மக்களின் இன்பவாழ்வையும் குறிப்பாகப் புலப்படுத்துகிறார், புலவர்.

(நேரிசை வெண்பா)

**147. கண்டன் கரிகாலன் காவிரிசூழ் நாடெல்லாம்**
**வண்டுங் கரும்புமிக மல்குமே-ஒண்டொடிக்கைப்**
**பூவையரே! மாரற்குப் போய்த்தேட வேண்டுமோ**
**பாவையர்மே லேவும் படை?**

சோழன் கரிகாற்பெருவளத்தான் ஆளும் காவிரி நீர்பாயும் நாடு எங்கும் உள்ள வாவியிலும், சோலையிலும், வண்டுகளும்; வயல்களில் கரும்பும் நிறைந்து விளங்கும். ஆதலின், ஒளிவீசும் தொடிகளை யணிந்துள்ள கைகளை யுடைய பூவை போல்வீர்! மாரவேள் பாவையராகிய நம்மீது தொடுப்பதற்கு, வில்லும் அம்பு மாகிய படைகளை வருந்திப்போய்த் தேடவேண்டுமோ? யாவும் ஈண்டே உள.

[கண்டன் = சோழன். 'வண்டுமல்கும்' என்றதனால் சோலையும், வாவியும் வருவிக்கப்பெற்றன. 'கரும்பு மல்கும்' என்றதனால் வயல் வருவிக்கப்பட்டது. மன்மதனுக்கு வில் கரும்பு; நாண் வண்டு. 'வண்டு மல்கும்' என்றதனால் மலர் அம்புகளும் குறிப்பாற் பெறப் பட்டன.]

—O—

தோற்றுவாய்

சேது நாட்டில் உள்ள திருப்புல்லாணியையும், அதன் தலவிருட்சத்தினையும், தீர்த்தத்தையும் சிறப்பிக்கும் பாடல் இது.

## (நேரிசை வெண்பா)

**148.** **இதுவே அரசிங் கிதுவேபுல் லாணி**
**இதுவே வருணன்வந் தெல்லை — இதுவேதான்**
**மாதுபொருட் டாகவள்ளல் வாரியணை கட்டுவித்த**
**சேதுவுக்கு முந்தினதீர்த் தம்.**

'அரசு' என்று சிறப்பித்துச் சொல்லத்தகும் அரசமரம் இதுவே, இங்குள்ள சிறந்த தலமாகிய புல்லாணி இதுவே, வருணன் வழி படுதவற்காக வந்த எல்லையும் இதுவே. சீதையின் பொருட்டாக அயோத்தி வள்ளலாகிய இராமன், கடலிடை கட்டுவித்த அணை யாகிய சேதுவுக்கு முந்திய தீர்த்தமும் இதுவேயாம்.

—★—

தோற்றுவாய்

எல்லையற்ற மனக்கவலையைத் தீர்த்தருளுமாறு முருகனை வேண்டும் ஒரு அடியார் கூற்று.

(நேரிசை வெண்பா)

149. ஆடுந் திரிகைசுழன் றுடுமுன்னம் ஆயிரஞ்சுற்
றோடுங் கவலைஎனக் கோடாதோ? — நீடுகிரிப்
பந்தாக வேலெறிந்தப் பாரமலை யைத்துளைத்த
கந்தா கருணா கரா.

பெரிதும் ஓங்கிய குருகு மலையைப் பந்துபோலச் சுழலச்செய்து, அப்பெரிய மலையை வேற்படையைக் கொண்டு துளையிட்டுப்பிளந்த கந்தனே! கருணைக் கடலே! ஆடும் திரிகையானது ஒரு சுற்றுச் சுழலுமுன், ஓராயிரம் எண்ணங்களைச் சூழ்ந்து வருத்தும் என் கவலைகள், என்னை விட்டு ஓடமாட்டாவோ? அவை ஓடும்படி அருள் புரிவாயாக.

—*—

தோற்றுவாய்

'சாமவேதப் பிரியனான சிவபெருமான், சார்பு கொண்டெழுந்தருளுவது, வளம் பொருந்திய திருவாரூரே' என ஆரூரைச் சிறப்பிக்கும் இப்பாடல், பின்னிரண்டடியும் முற்றுமடக்காய், முடுகு வண்ணத்தால், அமைந்து சுவையும் நயமும் பயக்கின்றது.

(நேரிசை வெண்பா)

150. கோடு தடமுலைமேல் குங்குமத்தால் கோதையர், நீர்
ஆடுதுறை மேடுபடும் ஆரூரே—நீடுகந்த
சாமச்சந் தத்தரத்தர் சாமச்சந் தத்தரத்தர்
சாமச்சந் தத்தரத்தர் சார்பு.

பெரிதும் உவப்புடைய அறுகையும், சந்தனத்தையும் தரித்த வரும், இறப்பாகிய அச்சத்தைத் தவிர்க்கும் பவள மேனியை உடையவரும், சாம வேதமாகிய சத்தத்தையுடைய வருமாகிய, தாதையார் சார்ந்து விளங்கும் ஊர்; கோதை போலும் நறிய பெண்டிர், தம் மலைக்குவடுபோல் உயர்ந்து பருத்த மார்பகங்களில் பூசியுள்ள குங்குமமானது, அவர்கள் நீராடும் நீர்த்துறைகளை மேடு படுத்தும்படியான வளஞ்சான்ற திருவாரூரேயாம்.

[பின் இரண்டடிகளை; நீடு உகந்த சாமம் சந்தம் தரத்தர்—சாம் அச்சம் தத்து அரத்தர்—சாம சந்தத்தர் அத்தர் எனப் பிரித்துப் பொருள்கொள்க. சாமம் = அறுகம்புல், சாமவேதம். சந்தம் = சந்தனம். தரத்தர்—தரித்தவர். தத்துதல் = நீக்குதல். அரத்தம்—பவளம் (அரத்தர் பவளம் போலும் செம்மேனியர்) அத்தர்—தந்தையார். குங்குமத்தால் மேடுபடுதலாவது: நீராடுங் கால் குங்குமங் கரைந்து, சேருகி, எக்கரிட்டு, நீர்த்துறையை மேடாக்குதல். இதனால் ஆரூர் மக்களின் செல்வவளம் புலப் படுத்தப்பட்டது.]

—o—

தோற்றுவாய்

இறைவன் உவந்துறையும் திருவாரூரைச் சிறப்பித்துப் பாடும் புலவர், பின்னிரண்டடியும் மடக்கணியும் முடுகு வண்ணமும் அமையப் பாடியுள்ளார்.

## (நேரிசை வெண்பா)

151. காலவட்டத் துச்சிக் கதிரோனுக் குக்கதலி
ஆலவட்டம் வீசுதிரு வாரூரே—ஞாலவட்டத்
தோங்கியநா கத்துடையா ரோங்கியநா கத்துடையா
ரோங்கியநா கத்துடையா ரூர்.

மண்ணுலகமாகிய இப்பெரிய எல்லையுள், ஓங்கித் திகழும் மேருமலையைத் தனக்கிடமாக உடையவரும், சினந்து தன்மேல் வந்த யானையின் தோலை உடையாக அணிந்தவரும், சிறந்த நாகங்களையே மாலையாகக் கொண்டவருமாகிய சிவபெருமான், உவந்துறையும் ஊர் யாதெனின்; காலத்தை அளவிடும் கருவியாகிய உயர்ந்த கதிரவனுக்கு வாழை மரங்கள், தம் பெரிய மடல்களால் ஆலவட்டம் வீசும்படியான திருவாரூரேயாம்.

[கதலி = வாழை ஆலவட்டம் = விசிறி. வாழை மரத்தைச் சிறப்பிக்கும் வாயிலாகத் திருவாரூரின் மருத நிலவளம் புலப் படுத்தப் பெருகின்றது. ஞாலவட்டம் = உலகம். ஓங்கிய நாகத்துடையார் மூன்றையும் முறையே (1) ஓங்கிய நாகம் அத்து உடையார்: ஓங்கிய = வளர்ந்த, நாகம்—பொன்மலை, உடையார்— உடைமையாகப்பெற்றவர் எனவும்; (2) ஓங்கிய நாகம் அத்து உடையார்: ஓங்கிய—சினந்த, நாகம்—(கய முகாசுரனாகிய) யானை (ஈண்டு அதன் தோலை உணர்த்திற்று), உடைஆர்—ஆடை யாகக் கொண்டவர் எனவும், ('அத்து' இரண்டு சாரியைகள்) (3) ஓங்கிய நாகம் தொடையார்: ஓங்கிய—சிறந்த நாகம்— பாம்பு, தொடையார்—மாலையாகக் கொண்டவர், ('தொடை செய்யுள் நோக்கித் 'துடை' என நின்றது) எனவும் பிரித்துப் பொருள் காண்க.]

—o—

தோற்றுவாய்

இச்செய்யுளும் முன்னதைப்போன்று மடக்கும் வண்ணமும் அமைந்து 'செம்பியன் மாதேவி' என்னும் ஊரை இறைவனுக் குகந்ததாக வைத்துச் சிறப்பிக்கின்றது.

(நேரிசை வெண்பா)

152. கரோட்ட மோட்டுங் கமுகுநிரை யேகதலி
தேரோட்டும் செம்பியன்மா தேவியே ஓரோட்டில்
ஓதனஞ்சே ரத்தனு ரோதனஞ்சே ரத்தனு
ரோதனஞ்சே ரத்தனு ரூர்.

பிரம கபாலமாகியதொரு ஒப்பற்ற ஓட்டில் உணவு இரந்து ஏற்ற அத்தனுயவரும்; பாற்கடலில் தோன்றிய நஞ்சினை(க் கண்டத்தில்) அழகுறக்கொண்ட அத்தனுய வரும்; சிறப்பித்துச் சொல்லப்பெறும் அன்னம்போல் வாளாகிய உமாதேவி, ஒரு பக்கத்தில் சேர்ந்திருக்கும் அத்தனுயவருமாகிய சிவபெருமான், உவந்துறையும் ஊர் யாதெனின்; கார்மேகத்தின் செலவை விரைவுபடுத்தும்வண்ணம் ஓங்கிய பாக்கு மரங்களும், தேர், செல்வதுபோல நிறைந்து விளங்கும் வாழை மரங்களும், வளந் தரும்படியான 'செம்பியன் மாதேவி' என்னும் ஊரேயாம்.

ஓர் ஓடு—பிரமதேவனின் மண்டைஓடு. ஓதனஞ் சேரத்தனுர் என்பவற்றை முறையே (1) ஓதனம் சேர் அத்தனுர்:— ஓதனம்—சோறு, சேர்—சேர்க்கும், அத்தனுர்—தலைவர், எனவும்; (2) ஓதம் நஞ்சு ஏர் அத்தனுர்:— ஓதம்—கடல், நஞ்சு—ஆலகாலவிடம் 'நஞ்சு' செய்யுள் நோக்கி 'னஞ்சு' என நின்றது), ஏர்—அழகு பொருந்திய), அத்தனுர்—முதல்வன் எனவும் (3) ஓது அ(ன்)னம் சேர் அத்தனுர்:— ஓது அன்னம்— (வினைத்தொகை, 'அன்னம்' உமாதேவிக்கு உவமையாகுபெயர்) உமாதேவியினை, சேர்— (ஒரு பக்கலில்) சேர்த்துக்கொண்டுள்ள, அத்தனுர்—சிவபெருமான், எனவும் பிரித்துப் பொருள்காண்க. 'செம்பியன் மாதேவி' ஒரு சோழமன்னன் மனைவியின் பெயரால் அமைந்ததொரு ஊர்.



தோற்றுவாய்

'செம்பியன் மாதேவி' என்னும் ஊர்ப்பெயரைச் 'சோழன் மனைவி' என்னும் பொருள்படவைத்து, அவ்வூரிற் கோயில் கொண்டுள்ள இறைவனை அவள்பால் விரும்பிச் சென்றதாக வைத்து இலிங்கமூர்த்தியாக விளங்கும் இறைவனைப் பிறர் மனைநயந்ததால் தலை (முடி) மொட்டையானதாக வைத்துச் சமத்காரமாகப் பாடியுள்ள நயம் மகிழத்தக்கது; எனினும் இழிசினர் பேசும் வழக்கும் சொல்லும் கொண்டு பாடியது குறைபாடேயாம்.

(நேரிசை வெண்பா)

**†53. செம்பியன்மா தேவியை நீர்சேர்வா னேன்சடைபோய்**
**அம்புவியில் நீர்மொன்னை யாவானேன்-நம்பரே**
**பாரத் தனம்போய்ப் பயலாகா ரோஒருவர்**
**தாரத்துக் கிச்சித்தார் தான்.**

விருப்பமிக்க பெருமானே! நீர் செம்பியன் மாதேவியை விரும்பிச் சேர்வானேன்? அது காரணமாக நீர்சடை (முடி)யற்று மொட்டை (த்தலை) யாவானேன்? நீராற் சூழப்பெற்ற இவ்வுலகில் மற்றொருவர் தாரத்தின்மேல் இச்சைகொண்டொழுகுபவர், தம்முடைய பெருமையெல்லாம் இழந்து சிறுமை எய்துவாரன்றோ?

[அம்புவி—அழகிய உலகமென்றும் ஆம். நம்பர்—விரும்பத் தக்கவர்; நம்மவர் என்றுமாம். மொன்னை—மொட்டை. இஃதோர் இழிவழக்குச்சொல். பாரத்தனம்—பெருமை. பயல்—ஈண்டுச் சிறுமையை உணர்த்திற்று. ஆகாரோ, தான், என்பன எண் மயக்கம்.



தோற்றுவாய்

'தலைமகன்' தன்னைப் பிரிந்து சென்று விடுவானோ' எனக் கவலைகொண்ட தலைவியை, 'பிரிவதற்குரிய காலத்திலும் உன்னைப் பிரியாதுறைந்த தலைவர், இப் பொழுது பிரிவாரோ? பிரிய மாட்டார்! எனத் தோழி ஆறுதலாகக் கூறியது.

(நேரிசை வெண்பா)

**154. எரிசொரியுந் தேமா இளந்தளிர்மேற் புன்கு**
**பொரிசொரியும் காலமோ போவார்—வரிக்குயிலும்**
**காமாகூ வென்னுத காலத்தி லும்பிரியல்**
**ஆமாகா தென்னு தவர்.**

'பொருளீட்டல் முதலிய காரணங்களுக்காகப் பிரிந்து செல்லலாம்' எனப் பெரியோர்கள் கூறியபோதும்; இசைக் குயில்கள் சோலையிலுள்ள மாமரங்களிலிருந்து கூவி யிசைபாடாத கார்காலத்திலும் (பிரிதல்) ஆகும்-ஆகாது எனச் சொல்லாமல் (நம்மிடையே) இருந்தவர்; நெருப்பைப்போல ஒளிவீசும் தேமாவின் இளந் தளிர்கள் மீது புன்கு மரங்கள் நெற்பொரி போலும் மலர்களைச் சிந்தும் வேனிற்காலத்திலா (உன்னைவிட்டுப் பிரிந்து) போவார்? போகமாட்டார்.

தேமாவின் இளந்தளிர் செம்மைநிறமுடைய வாகலின் 'எரி சொரியுந் தேமா' எனப்பட்டது. ''தென்ற லரும்பத் தீயரும்பும் தேமா'' என்றூர் குமரகுருபரர். ''தளிர்மேல் பொரிசொரியும்'' என்றது, தலைவன் தலைவி திருமணத்தை நினைப்பித்தது.

வரிக்குயில் :— வரி = இசை; கோடும் ஆம். கா.மா. கூ :— கா = சோலை; மா = மாமரம்; கூ = கூவுதல், ஆமாகாதென்றுதவர் = ஆ(கு)ம் ஆகாது என்றுதவர்.

—O—

தோற்றுவாய்

'யாக்கை நிலைபெற்றுள்ளபோதே இறைவனைச் சிந்தித் துய்ய வேண்டும்' எனக் கூறும் முகத்தான், யாக்கை நிலையாமையைக் கூறுகிறது, இப்பாட்டு.

## (நேரிசை வெண்பா)

155. மேலும் இருக்க விரும்பினையே வெள்விடையோன்
சீலம் அறிந்திலையே சிந்தையே—காலுக்குக்
கொட்டையிட்டுத் தக்கதுடைக் குத்திமெத்தைக் கிட்டவுடல்
கட்டையிட்டுச் சுட்டுவிடக் கண்டு

ஏ மனமே! ஆவி நீங்கியபின் கால்களுக்கு அணையிட்டுத் துடையிரண்டையும் குத்திக்(கட்டி) வைக்கோல் மெத்தையில்

கிடத்தி. இவ்வுடலை மரக்கட்டையிலே வைத்துத் தீயால் எரித்து விடுதலைக் கண்டிருந்தும், வெண்மையான ஆனேற்றினை ஊர்தியாக உடைய இறைவனின் பொய்தீர் ஒழுக்கத்தை அறிந்து நல்வினை செய்யாமல் இவ்வுலகத் துன்பங்களோடு மேலும் இருக்க விரும்பினையே. (இது நகைப்புக்குரியதே.)

[சீலம்: ஆன்மஒழுக்கம். 'கண்டும்' என்ற உம்மை தொக்கி நின்றது. கொட்டை = அணை.]

—o—

### தோற்றுவாய்

சேரிப் பரத்தையின்பால் காமுற்றொழுகிய ஒருவன், அவள் புறத்தொழுக்கத்தைக்கண்டு, மயக்கந்தெளிந்து கூறியதாக அமைந்துள்ளது, இப்பாடல்.

### (நேரிசை வெண்பா)

**156. மானுங் கலையும மருவிப் பிரிந்தக்கால்**
**மானைப் பிரிந்தகலை வாழுமோ? — மானும்**
**தனக்கினியா ரைத்தேடித் தானங் கிருந்தால்**
**ஏனக்கினியா ரிங்கே யினி.**

மாணனே! உழைமானும், கலைமானும் (உளமொத்துக்) கூடிப் பிரிந்திடுமாயின், அந்த மானைப்பிரிந்த கலையானது துன்பமின்றி வாழுமோ? (வாழாது; எனினும்) அம்மானனது (கூடிப்பிரிந்த கலையை மறந்து) தனக்கினிய வேறு ஒரு கலையை (பொருள் கருதித்) தேடி அங்கு கூடி இருக்குமானல் (காம மயக்கத்தால் முன்பு இனித்த) அம் மான் போல்வர் எனக்கு இனி இனிக்க மாட்டார் என்றுணர்க!

[இப்பாடல், அகப்பொருள் மரபுக்கு மாறாக உளதாகலின், ஒருவாறு பொருள் செய்யப்பெற்றுள்ளது.]

—*—

### தோற்றுவாய்

பொருள்வயின் பிரிய இருக்கும் தலைவன் இல்லத் தழுங்குவான், காமக்கிழத்தியொடு கூறியதாக அமைந்துள்ளது, இப்பாடல்.

## [நேரிசை வெண்பா]

**157. போகேன் உனைப்பிரிந்து போனாலும் வேறொ ருத்திக்**
**காகேனா னென்ப தறியாயோ—வேகா**
**நினைவிலும்நீ நெஞ்சிலும்நீ நித்திரையிற் றோன்றுங்**
**கனவிலும்நீ கண்ணிலும்நீ காண்.**

பெண்ணே! பொருளீட்டுதற்காக உனைப்பிரிந்து எக்காலத்தும் யான் போகமாட்டேன். ஒருகால் பிரிந்து போகநேரிடினும், வேறொருத்திக்குரியவனாக ஆகமாட்டேன் என்பதனை நீ அறியமாட்டாயோ? (அறிவாய்; ஏனெனில்) வேகாத பசுமையான நினைவிலும் நீ, நெஞ்சிலும் நீ, உறங்குங்காலத்திற் றோன்றுங் கனவிலும் நீ (விழித்த காலத்துப் பாவை உருவில்) கண்ணிலும் நீயே இருத்தலின்.

["பிரிந்து போனாலும் வேறொருத்திக்காகேன்" என்றாற்போலத் தலைவியினிடத்துக் கூறுதல், அகப்பொருள் மரபன்மையின், காமக்கிழத்தியிடம் கூறியதாகக்கொள்ளப்பட்டது. வேகா நினைவு =பசுமையான நினைவு—அஃதாவது மறவாமை. 'காண்' முன்னிலையசை.]



### தோற்றுவாய்

வேனிற்பருவம் வந்தும், பிரிந்து சென்ற தலைமகன் வராதிருத்தலை எண்ணி வருந்தும்தலைவி, மாமரத்தை நோக்கிக் கூறுவதாக அமைந்துள்ள இப்பாடலில், 'மாம்பூவால் எனக்கும் உனக்கும் 'வடு' வரும்' எனக்கூறும் சிலேடை நயம் சுவையாக உளது. இதனுள் 'கண்டன்' என்னும் வள்ளல் சிறப்பிக்கப்பெறுகிறான்'

(நேரிசை வெண்பா)

**158. உனக்கு வடுவுங் உறங்காமற் கொண்ட**
**எனக்கு வடுவும் இரண்டும்—நினைக்குங்கால்**
**காவே யனையகொடைக் கண்டன் கனகிரிமேல்**
**மாவே! நின் பூவால் வரும்.**

கற்பகச் சோலையை ஒப்ப, வரையாது கொடைபுரியும் வள்ளலான 'கண்டன்' என்பானுடையே பெரியமலையின் கண் விளங்கும் மாமரமே! உனக்கு வடுவும், உறக்கமின்றித் துயரேகொண்ட எனக்கு வடுவும் தோன்றுவதை உள்ளபடி ஆய்ந்து பார்த்தால் எல்லாம் உன்னுடைய பூக்களால் வருவனவேயாகும்.

[வடு—மாவடு (மாம்பிஞ்சு). தலைவிக்கு 'வடு' காமத்துன்பத்தால் மேனியிற்படரும் பசலைநிறம். இது "நாவினுற் சுட்டவடு" என்பது போல நின்றது. 'மன்மதன் எய்யும் ஐந்து மலரம்புகளுள் மாம் பூ வாளியைப் பசலை தோன்ற மார்பகத்தில் எய்வான்' என்பது புலனெறி வழக்காதலின், தலைவி இவ்வாறு கூறினள். கண்டன்—சோழர் குடிப்பெயர்களுள் ஒன்று.]

—*—

தோற்றுவாய்

மலையிடைவாழும் குறமகள் ஒருத்தியைத் தெருவிற் கண்ட காமுகன் ஒருவன், தன்னெஞ்சிற்குக் கூறும் கைக்கிளைக்கூற்று.

(நேரிசை வெண்பா)

**159. மையோதி ஒதி வருக! வளரிளங்கொங்**
**கையோ அளவதிக பாரமே—பொய்யோ**
**குருங்கைநம்பி மால்வரையிற் கோமளமே! இந்த**
**மருங்கைநம்பி நீநடவா மல்.**

மைபோலும் கூந்தலையுடைய அன்னம்போல்வாய்! 'குருங்கை நம்பி' என்பானது பெரிய மலையிடத்து வாழும் கோமனமே! நின் பால் வளரும் இளைய கொங்கைகளோ அளவில் பெரிதாவதோடு அதிக பாரமுடையனவென்பது பொய்யாகுமோ? ஆதலின் மெல்லிய இந்த இடையை நம்பி விரைந்து நடவாமல் மெல்ல வருவாயாக!

[ஓதி—ஓதிமம் என்பதன் கடைக்குறை. 'குருங்கை' என்பது ஓர் ஊர்போலும்.]

—o—

தோற்றுவாய்

பந்தடித்தாடும் இளையாளொருத்தியைக் கண்ட ஒருவன், அவள் மார்பழகைச் சுட்டிப்பேசியது. இதனைத் தன் காதலியிடமே கூறுகின்றானதலின் இப்பாடல் பெருந்திணையின்பாற் படும்.

## (நேரிசை வெண்பா)

**160. மையோதி ஓதி! குழல் மாமொழிபங் காளர்நாட்**
**டையோ தனிமருங்குல் ஆற்றுதே—கையாரப்**
**பொற்பந் தடிக்கும்மான் பூரித்த கொங்கையினும்**
**அற்பந் தடிக்குமா கில்.**

குழலிசை போன்ற பெருமை பொருந்திய மொழியினையுடைய உமாதேவியை ஒருபங்கிலேகொண்ட இறைவன் எழுந்தருளும் நாட்டில் விளங்கும், மைபோலும் கூந்தலையுடைய அன்னம் போல்வாய்! இங்கே தன் கையாரப் பொன்னாலாகிய பந்தினை அடித்து விளையாடும் இளமான் போல்வாளாகிய இவளுடைய பூரித்து விளங்கும் கொங்கையானது, இன்னும் சிறிது தடித்து வீங்குமானால், இவளுடைய மெல்லிய இடையானது தாங்கலாற் றுதே! இது மிகவும் இரங்கத்தக்கதாகும்!

[‘ஐயோ’—இரங்கற்பொருள் தரும் இடைச்சொல். அற்பம்—சிறுமை.]

—o—

தோற்றுவாய்

கடல்கடந்து பொருளீட்டப் பிரிந்துசென்ற தலைவன், குறித்த காலத்து வாராமையின் காமமிக்க கழிபடர் உற்றதலைவி, ஈச்ச மரத்தில் உள்ள குருகினை நோக்கி உளமகிழ்ந்து கூறியது.

(நேரிசை வெண்பா)

**161. தாங்கப் பணைத்த தனக்கப்பல் ரெண்டிருக்கப்
பூங்கப்ப லேறியன்பர் போனாரே—வேங்கையப்பர்
ஈஞ்சைக் குருகாரே இன்னும்வந் தாரிலையே
வாஞ்சைக் குருகா தவர்.**

வேங்கையப்பர் (நாட்டுக் கடற்கரையிலே ஓங்கி வளர்ந்துள்ள) ஈச்சைமரத்திலே வீற்றிருக்கும் குருகாரே! அவரைத் தாங்கிப் பேணுதற்கு என்பால் தனமாகிய இரு கப்பல்கள் இருக்கவும், என் வாஞ்சைக்கு உள்ளம் உருகாதவராய், ஒரு பூங் கப்பலில் ஏறிப்போன தலைவர், குறித்த பருவம் வந்தும் இன்னும் வினைமுடித்து வந்தாரில்லையே! என் செய்வேன்!

[தனக்கப்பல் — பொருள் நிறைந்த கப்பல் எனவும், பூங் கப்பல் — புல்லென்ற கப்பல் எனவும் தொனிக்கப் பாடிய நயம் மகிழ்தற் குரியது. 'அன்பர்' என்றது குறிப்பு மொழி.]

—✱—

தோற்றுவாய்

'தொண்டைமான் வேங்கடவன்' என்பானிடத்துக் காதல் கொண்ட தலைவி ஒருத்தி, வண்டினைத் தூதாக விட்ட செய்தியைத் தோழியிடம் கூறியது. இப்பாடலுள் தூதுசெல்வோர் அகத் தூய்மையும், ஒழுக்கமும் உடையராய் இருத்தல் வேண்டுமென்பதை, வண்டினைக் காரணமாக வைத்துக் குறிப்பாகப் புலப்படுத்தும் நயம் போற்றத்தக்கது.

## [நேரிசை வெண்பா]

**162. தொண்டைமான் வேங்கடவன் தோள்மாலை வாங்கிவர**
**வண்டையான் விட்டேன் வரக்காணேன்—பண்டே**
**கரும்புறமு மாயதிலே கள்ளுணவும் கற்றால்**
**சுரும்புறவாய் மீளுமோ தூது.**

தோழியே! தொண்டைமானாகிய வேங்கடவன் பால் என் காதலையும், நிலையையுங்கூறி அவன் தோள் மாலையை வாங்கி வருமாறு வண்டினைத் தூதாகப்போக விட்டேன். ஆயினும் இன்னும் அவ்வண்டு மீண்டுவரவில்லை. அவ்வண்டினது புறவுடம்பு இயல் பாகவே கருமையானது (இப்பொழுது அகமும் கருமையுடைய தாயிற்றுப் போலும்) அதுவேயன்றிக் கள்ளுண்ணுதலையும் கற்றுக் கொண்டமையால், இனி நமக்கு உறவாய் மீண்டுவருமோ? (அவன் தோள் மாலையில் கசியும் கள்ளினை உண்டு மயங்கிக் கிடக்கும் ஆதலின்) வாராதென ஐயுறுகின்றேன்.

[கள்—தேன், சுரும்பு — வண்டு.]

—o—

### தோற்றுவாய்

'திருவையாறு' என்னும் ஊர்க்குப் பெயர்க் காரணம் கூறுவது போல் நகைச்சுவையாகப் பாடியது. இதன் கருத்துச் செம்மையாக விளங்கவில்லை.

## [நேரிசை வெண்பா]

**163. நங்கை திருமுலைப்பால் நம்பிரான் வாய்நுரைநீர்**
**பொங்கு கடலின் புதுப்பனிநீர்— எங்குமொரு**
**மேகத்து நன்னீர் விரிசடையோன் புந்தியில்நீர்**
**ஆகத் திருவையா றும்.**

—O—

### தோற்றுவாய்

உறவுடையாளொருத்தியின் அழகிலே ஈடுபட்டு அவளை மணக்க எண்ணியவன், அவள் கிடைக்கப் பெறாமையால் நொந்து கூறியது.

### (நேரிசை வெண்பா)

**164. கறையுகுத்த வெண்பல்லும் கண்மலருங் கண்டும்**
**உறவிருக்க வேணுமென் றுன்னேன்—உறவிருந்தும்**
**தாமிருக்கப் பெற்றிலேன் தாமில்லா வூரதனில்**
**நாமிருப்ப தென்ன நலன்?**

மனமே! கறை சிறிதும் இல்லாத வெண்மையான பற்களின் அழகையும் கண்களாகிய தாமரை மலரின் அழகையும் கண்டிருந்தும் (முன்பு) மண உறவுகொள்ள வேண்டுமென்று எண்ணுதிருந்தேன். அவரை மணந்து கொள்ளும் உறவு எனக்கிருந்தும், (இப்பொழுது பிறனொருவனுக்கு வாழ்க்கைப்பட்டுச் சென்றுவிட்டமையால்) அவர் தாம் இவ்வூரில் இருக்கப்பெற்றிலேன். (என் உணர்வைக் கவர்ந்த) அவரில்லா இவ்வூரில் நாம் மட்டும் இருப்பதனால் என்ன நன்மை?

—o—

### தோற்றுவாய்

தலைவியின் பேரழகை எண்ணி மயங்கியபோதெல்லாம், 'இருவரும் ஒருவராம் நிலையெய்துகின்றோம்' எனத் தன் னெஞ்சிற்குத் தலைவன் கூறும் கூற்று இதனுள் பன்னிரண்டு இராசிப் பெயர்களையும் வைத்து அக்கருத்தினைப் புலப்படுத்துகின்றான்.

### (நேரிசை வெண்பா)

**165. பன்னிரண்டி லொன்றான பாவைமால் கொண்டக்கால்**
**பன்னிரண்டி லொன்றுபிணை பட்டதே—பன்னிரண்டில்**
**ஒன்றுபோ லேநுதலும் ஒன்றுபோ லேவிழியும்**
**ஒன்றுபோ லேமுலையும் ஓர்ந்து.**

பாவைபோல் வாளாகிய இக்கன்னியின் வில்லைப் போன்ற புருவமுடைய நெற்றியையும், கயல் போன்ற விழியையும், குடம் போன்ற தனத்தையும் எண்ணி மயக்கங்கொண்டபோதேயானும், அவளும் ஒன்றுபட்ட இரட்டையரானேம்.

['பன்னிரண்டு' என்பது ஈண்டு இராசிகளைக் குறித்து நின்றது. அவற்றுள், முறையே கன்னி, மிதுனம், தனுசு, மீனம், கும்பம் இவைகளைச் சுட்டி, பெண், புணர்ச்சி, நெற்றி, விழி, தனங்களை விளங்கினர். "பன்னிரெண்டில் ஒன்று பிணைபட்டதே" என்பதற்குக் 'கன்னிப்பெண் பால் மயக்கங்கொண்டதனல், கைகள் விலங்கிடப் பட்டன' என்றும் பொருள் கொள்ளலாம்.]

—★—

தோற்றுவாய்

பிரிந்த தலைவனை எண்ணிக் கூடலிழைத்து வருந்தும் தலைவியின் நிலைகண்டு கூறியது.

(நேரிசை வெண்பா)

166. வழுதி பதியை மணலி லெழுதி
எழுதி யழித்தோமென் றேங்கிப்—புழுதிதனை
ஆலிங் கனம்பண்ணி அந்திபட நிற்குமே
காலிங்கன் கப்பற் கரும்பு!

காலிங்க மன்னனுடைய கப்பலெனும் நாட்டிற் பிறந்த கரும்பு போல் வாளாகிய இத்தலைவி, 'தன்பதியாகிய வழுதி வந்து கூடுவான்' என்று மணலிற்கூடல் வளைத்துப் பலகால் அழித் தெழுதியும் கூடல் வாய்க்கப் பெருமையால் 'ஓம்' என்று அழுது ஏங்கி, அம்மணற் புழுதியைக் கட்டியணைத்து, அந்திப்பொழுது ஆனபின்பும் வருந்தி நிற்பாள்! இதற்கு என் செய்வது?

['கப்பல்' ஓர் ஊர்ப்பெயர். வழுதி — பாண்டியன், 'ஓம்' அழுகைக் குறிப்பு. அந்தி — மாலைக்காலம். கரும்பு — உவமை ஆகு பெயர்.]

—*—

தோற்றுவாய்

கச்சி ஆனந்தருத்திரேசர் வீதிஉலா வருங்கால் கண்டு தரிசித்த மங்கையர் இருவர், இறைவன்தேர் வீதியில் தம் இல்லத்திற்கு முன்னே நிற்பது கண்டு, நகைச்சுவையோடு அளவளாவியதாக அமைந்துள்ளது, இப்பாடல்.

## (நேரிசை வெண்பா)

**167. மனந்தான் தளர்ந்தார்க்கு வாயுண்டோ கச்சி
அனந்தா புதன்நாள் கலவோம்—சினந்தான்
வடித்தெடுத்த வேற்கண் மணியிரண்டு கொண்ட
கொடிதடுத்தால் ஆரேகு வார்?**

'கச்சி ஆனந்தருத்திரேசரே! மன உறுதி தளர்ந்தவருக்கு வாயாற்பேச வியலுமோ? (இயலாது போலும்; அதனாற்றான் என் மனைக்குமுன்னே, என்னை விரும்பி அகலாது நிற்கின்றீர் போலும்; நின்றுபயனென்?) நாங்கள், புதன்கிழமை கலவி செய்ய மாட்டோம். (நீர்போகலாம்' என்று ஒருத்தி கூற மற்றவள்) 'சினத்தை வைத்துக் கூராக்கியதொரு வேலைப்போல இரண்டு அழகிய கண்களை உடையதொரு கொடி, தடுத்தால் அதனைமீறி யாரால் செல்லமுடியும்?' என்றாள்.

[இதனுள் "வேற்கண் மணியிரண்டு கொண்ட கொடி" என்ற தொடர் 'இரு கண்களுக்கும் ஒருமணி கொண்ட காக்கை' எனவும் பொருள் தந்து 'காக்கை சகுனமாகத் தடுத்தாய் யார் ஏகுவார்' என்ற குறிப்புப்பட நிற்கும் நயம் சுவைத்தற்குரியது. கொடி—காக்கை. இப்பெண்டிர் பரத்தையர்.]

—o—

தோற்றுவாய்

'கருமாணிக்கன்' என்னும் குறுநில மன்னன் நாட்டுவளமும் செல்வமும் புலப்படுத்தும் வகையில் அமைந்ததிப் பாட்டு.

(நேரிசை வெண்பா)

168. மாலை விளக்கிடுவோம் மந்றதனை யேபின்னும்
காலை விளக்கிடுவோம் கண்டீரோ—கோலக்
கரியமா ணிக்கன்றன் கப்பல்சூழ் நாட்டில்
பரியமா ணிக்கம் பல.

அழகிய, வள்ளண்மை சான்ற கரியமாணிக்கனுடைய கப்பலூரைச் சூழ்ந்த நாட்டில், அளவாலும் ஒளியாலும் பெருமை சான்ற மாணிக்க மணிகள் பல எங்கள் பால் உள்ளமையால், மாலைக்காலத்துச் சூழிருள்போக்க விளக்காக வைத்து ஒளி பெறுவோம். பின்பு, அம்மணியை வைகறையில் காலை விளக்காகவும் வைப்போம் காண்பீராக. (காலை விளக்கிடுவோம் என்பதன் கருத்துச் செவ்வையாகப் புலனாகவில்லை.)

—o—

தோற்றுவாய்

கூடி மகிழ்ந்த தலைமகன், தன் ஆருக்காதல் தோன்ற' தலைவியின் அழகினைப் புகழ்ந்து பேசியது. இது 'நலம் பாராட்டல்' என்னும் அகத்துறையைச் சேர்ந்தது. பாங்கனுக்குக் கூறியதுமாம்.

(நேரிசை வெண்பா)

169. பூத்தால் முகிலொக்கும் பூங்குழற்கு மென்பிளவு
வாய்த்தால் மலையொக்கு மாமுலைக்குக்-காத்தான்
சிறுவைத் துடியிடையின் செம்முகத்திற் கொக்கும்
மறுவைத் துடைத்தால் மதி.

'காத்தான்' என்னும் வள்ளல் வாழும் சிறுவையூரில் விளங்கும், உடுக்கை போலும் இடையை உடைய நலைவியின் செம்மையான முகத்திற்கு, முழுமதியானது தன் மறுவை நீக்கி நின்றால் ஒருகால் ஒக்கும். அவ்வாறே, அவள் பொலிவுடைய கூந்தலுக்கு, கார்மேகமானது பூவோடு கூடி விளங்கினால் ஒக்கும்.

அவள், தன் பணைத்த தனங்களுக்கு, மலையானது இரு பிளவாகப் பிளந்து திரண்டு நிற்கும் வாய்ப்புப்பெற்ருல் ஒக்கும். இப்பொழுது இருக்கும் நிலையில், அவை தலைவியின் அவ்வவ் உறுப்புக்களுக்கு ஒவ்வா, என்ருன்.

[இச்செய்யுள் அற்புத உவமையின் பாற்படும்.]

—*—

தோற்றுவாய்

தஞ்சை, ஆனந்தவல்லியம்மையிடம் அடியார் ஒருவர், இவ்வுலகத் துன்பத்தைப் போக்கித் தம்மை ஆட்கொள்ள வேண்டிப் பாடியது.

## (எண்சீர் விருத்தம்)

**170. சமையுங் கோபுரம் தாங்கிய பாவைபோல்**
**தாரம் சுற்றம் தனயரைத் தாங்குவேற்(கு)**
**இமையும் நின்னயம் காணேன் வகுத்தநின்**
**இந்திர ஞாலம் எவர்க்குத் தெரியுமே**
**சுமையும் வைத்திளைப் பாறஒட் டாய்மிகும்**
**துக்க மன்றிச் சுகமறி யேனெனக்(கு)**
**அமையும் இக்குடி வாழ்க்கை என்னம்மே**
**அன்னமே தஞ்சை ஆனந்த வல்லியே.**

தஞ்சை மாநகரில் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் ஆனந்தவல்லி அம்மையே! அன்னமே!! என்தாயே!!! கோபுரத்தை தாங்கியுள்ள பொம்மைப் பாவையைப்போல (மாயையால்) இப்பிறவியில் சமைந்திருக்கும் மனைவி, மக்கள், உறவு ஆயவர்களைத் தாங்கி நிற்கும் எனக்கு, உன்னுடைய அருள் வரக்காணேன். இப்பிறவியில் எனக்காக நீவகுத்துள்ள திருவிளையாடல் எவருக்குத் தெரியும்? (தெரியாது) இத்துன்பச் சுமையை இறக்கி, யான் இளைப்பாறவும் அருள் செய்யாதுள்ளாய்.

இப்பிறவியில் யான், மேலும் மேலும் பெருகும் துன்பங்களையன்றிச் சிறிதும் இன்பத்தை யறியேன். இக்குடிவாழ்க்கையாகிய துன்பமே எனக்குப் போதும். இனி என்னை, இதனினின்று மீட்டு அருள் செய்வாயாக!

[இ(ம்)மியும் என்பது 'இமையும்' என நின்றது நயம். ஈண்டு அருளை உணர்த்திற்று. இந்திரஜாலம்—தெய்வத்தின் மாய விளையாட்டு.]



தோற்றுவாய்

திருமாலடியார் ஒருவர், குடந்தை சாரங்கபாணிப்பெருமாளின் பேரருளைச் சிறப்பித்துத் தம்மை ஆளும் திறத்தைக் கூறியது.

(எண்சீர் விருத்தம்)

**171. மலையெ டுத்ததிரு மேனி கோமள**
**வல்லி கண்டும னங்களி கூரவே**
**குலையெ டுத்ததமி யேனு ளத்தினுங்**
**கும்ப கோணமெ னக்குடி கொண்டவர்**
**அலையெடுத்தவி லங்கையில் விற்பிடித்(து)**
**அம்பு வாங்கிய அப்படி யேமுடித்**
**தலையெ டுத்துவ லக்கையும் நீட்டிய**
**சார்ங்க பாணியும், தாளும், என் ஆளுமே.**

கோவர்த்தன மலையைப் பெருங் கருணையால் குடையாகப் பிடித்த திருமேனியைக்கண்டு, கோமளவல்லி மனம் மகிழ்ந்தது போன்று, என் உள்ளம் பேரானந்தம் எய்துமாறு, குலை எடுத்து வழிபடும், என் மனத்தையும், திப்பிய சேத்திரமாகிய கும்பகோணத்தை ஒப்பக் கருதி குடிகொண்டபெருமான், கடலலையால் சூழப்பெற்ற இலங்கையில் வில்லைப்பிடித்து (ஆணவத்தால் ஓங்கிய இராவணன் அழியுமாறு) அம்பைவைத்து வளைத்த அத் திருக்கோலத்தோடே முடியோடுகூடிய தலை நிமிர்த்து நின்று காட்டும் வெற்றி பொருந்திய கையும், நீட்டியவில்லை பிடித்தக் கையும் கமலபாதங்களும் என்னை ஆட்கொள்ளும்.

[குலே—குல்லே என்னும் மலர்ப்பெயர் இடைகுறைந்து நின்றது. வலக்கை—வெற்றிக்கை. சாரங்கம்—வில். பாணி—கை.]

—★—

தோற்றுவாய்

தன்பால் காதலுற்று வந்திருக்கும் 'சிற்றம்பலவன்' என்னும் குறுநில மன்னனைத் திருமாலாகவே வைத்து, ஒரு தலைவி தன் அன்பு தோன்றப் பேசியது.

(எண்சீர் விருத்தம்)

**172.** **அலைவ ளைத்ததிருப் பாற்கட லில்லையால்.**
**ஆடர வின்னணை இல்லை பச்சை ஆல்**
**இலைவ ளைத்தமணி மண்டப மில்லைங்**
**இங்கு வந்தவா றென்னி யம்புவாய்?**
**குலைவ ளைத்தஇலங் கேசன் மாமலர்க்**
**கொத்து மாமுடி பத்துக்கும் என்றொரு**
**சிலைவ ளைத்தகார் நீல கங்கனே!**
**திங்கள் வெண்குடைச் சிற்றம் பலவனே!**

தன்னுடைய அரக்கர் சேனையோடு வளைத்துக் கொண்டு போரிட்ட இலங்கை வேந்தனின், பெருமை மிக்க மலர்க்கொத்து போன்ற பெரிய முடித்தலைகள் பத்துக்கும், இதுவே அமையும் என்று கருதி ஒப்பற்றதொரு அம்பினைவைத்து வில்லை வளைத்த, கார்நீலகங்கனே! முழுநிலா போன்ற வெண்கொற்றக் குடையை உடைய சிற்றம்பலவனாகிய அரசே! நீ விரும்பிப் பள்ளி கொள்ள, ஈண்டு அலைகள்சூழும் திருப்பாற்கடல் இல்லை. வெற்றிபொருந்திய ஆலமரம் இல்லை. மணிகளால் சூழப்பெற்ற மண்டபம் இல்லை. எனவே, நீ இங்கு வந்த நோக்கம் என்ன? இயம்புவாயாக!

[ஆடரவு—வெற்றியரவு; படம் விரித்தாடும் அரவு எனலுமாம். ஆல்இலை—ஆலமரம் இல்லை. வளைத்தமணி—மணிவளைத்த என

மாற்றுக. 'கங்கன்' 'சிற்றம்பலவன்' என்னும் சிவபெருமானுடைய பெயர்களைக்கொண்ட இவ்வரசனைத் திருமாலுடைய செயலிலே வைத்துக் கூறியது ஒரு நயம்.]

—o—

தோற்றுவாய்

இசைத்தமிழ் வல்லாள் ஒருத்தி பாடிய இன்னிசை கேட்டுப் பெருமகிழ்வுற்ருன் ஒரு சுவைஞன். அவள் தம் இனிய குரலையும், சொல்லையும், அதனை வெளிப்படுத்திய நாவையும், இதழையும் ஒருசேரக் கற்பனை வளந்தோன்றப் புகழ்ந்து கூறியது.

(எண்சீர் விருத்தம்)

**173. பாவை சர்க்கரைத ளுல்வ குத்துமுப்**
**பழத்தி ளுலிதழ் பண்ணிப் பவளவாய்**
**நாவை அண்டர்அமு தால மைத்துமெய்**
**நரம்பின் பண்ணும் நறவின் மகிழ்ச்சியும்**
**பூவை சொல்லுமென் கிளியின் மழலையும்**
**பூங்கு யிற்குர லும்பு கட்டியே**
**தாவை வேல்விழி மாசன மாணிக்கம்**
**தரவுதித் தனள்சங் கீத மங்கையே!**

இன்னிசையால் நம்மை மெய்மறக்கச் செய்த சங்கீத உருவாகிய இம் மங்கையானவள், தன்னுடைய பவளம் போன்ற வாயினையும், வாயிதழ்களையும், பாகாலும், சர்க்கரையாலும் வகைப் படுத்தி, முப்பழச் சாற்றினுல் பண்ணி; நாக்கினை தேவர் அமிழ் தத்தால் அமைத்து, யாழ்நரம்பின் பண்களையும், மதுவின் மகிழ்ச்சியையும், நாகண வாய்ப்பறவையின் மெல்லிய மொழியையும், மழலை மொழியையும் பொலிவுமிக்க குயிலின் குரலையும் ஒன்ருக்கிப் புகட்டி, வலிமைமிக்க கூரிய வேல்போலும் திருக்கண்களையுடைய மாசன மாணிக்கவல்லி அம்மையானவள் அருள, அவ் இறைவியின் அருளால் இவ்வுலகத்தில் உதித்தனள் போலும்!

[பாகு (பாகை) எதுகை நோக்கிப் 'பாவை' என நின்றது பாவை. பெண்ணெனக் கொண்டு அதற்கேற்பவும் பொருள் கொள்ளலாம். தா வை—தா—வலிமை. வை—கூர்மை. "மாசன மாணிக்கம்" என்றது ஈண்டு மாசனம் என்ற ஊரில் கோயில் கொண்டருளுவதால் அமைந்த இறைவியின் பெயர். இதனை இந்நூல் 29, 30 ஆம் பாடல்களிலும் காணலாம்.]

—O—

## தோற்றுவாய்

ஆடை குலைந்து நிற்கும் பெண்ணொருத்தியைக் கண்ட காமுகன் ஒருவன், தன் மையல் தோன்றக் கூறியதாக அமைந்துள்ளதிப் பாட்டு. இதனுள் தலைவி, நிராடையாக நிற்பதைத் தலைவன் புலப்படுத்தும் திறம் நயமாக உளது.

### (எண்சீர் விருத்தம்)

**174** **பருதி யாயிரங் கைதொழ மால்விழிப்**
**பத்து நூறெழப் பாணமொன் றேவிய**
**சுருதி யாகரன் சூரியன் தொண்டைமான்**
**தொல்லை மாக்கடல் மல்லைப் பொருப்பனீர்**
**கருதி யாலிலை யும்பட நாகமும்**
**கதலி யுங்கண்களி யாமலே**
**இரதி யாதரன் வையம்வந் திங்ஙனே**
**என்னைமால் செய்த தென்னகண் மாயமே?**

கதிரவன், தன் கைகளாகிய ஆயிரங்கதிர்களாலும் தொழுது மகிழ, பெரிய விழிபோலும் ஓர் அம்பே பத்து நூறாக எழுமாறு (இராவணன்மேல்) எய்த வேதங்களுக்கெல்லாம் நாயகனான, சூரியனாகிய தொண்டைமானுக்குரிய, பழமை பொருந்திய கடலானது சூழும் மாமல்லபுரத்து அழகிய மல்லை போலும் வளம் சான்ற மங்கையீர்! உங்கள் பால் தோன்றும் ஆலிலையையும்,

படம் பொருந்திய நாகத்தையும், கதலியையும் சருதித் தன் கண்களாரக் கண்டுகளிப் பெய்தாமல், இரதி தேவியின் கணவனாகிய மன்மதன், இவ்வுலகில் என்னிடத்தே வந்து, உன் பால் பெரிய மயக்கங்கொள்ளச் செய்தது, எத்தகைய கண்காணு விந்தையாக உளது?

["மால் விழிப்பத்து நூறெழப் பாணமொன்றேவிய" என்பதன் பொருள் நன்கு புலனாகவில்லை. 'பத்துநூறெழ' என்பதற்கு 'ஆயிரமாக எழ' எனவும் பொருள் காணலாம். 'சூரியன்' தொண்டைமானுடைய இயற்பெயர் போலும். மல்லை—மாமல்ல புரம். 'ஆலிலை' வயிற்றையும், 'படநாகம்' அல்குலையும், 'கதலி' இரு துடைகளையும் உவமையால் உணர்த்தி நின்றன. 'இத்தகு பேரழகு வாய்ந்த உறுப்புகளைக் கண்ட பின்னும், மன்மதன், தான் மயங்காமல், என்னை மயங்கச் செய்தானே! இது என்ன கண் மாயம்!' என்றான். கண்மாயம்—பெருவிந்தை.]



தோற்றுவாய்

குத்தளி (குற்றளி) என்னும் ஊரின் மன்னனான 'திருவேங்கட நாதன்' என்பான்மீது காதல் கொண்ட மங்கை ஒருத்தியின் கைக்கிளைக்கூற்று. இதனுள், 'காவல் புரியவேண்டிய மன்னனே தன்பால் களவு செய்வது தகுமோ?' எனத் தலைவி பேசுவது நய முடையது.

(எண்சீர் விருத்தம்)

175. அற்பி டித்துமணம் காட்டி மாலைவேய்ந்
தளிநி ரைத்தஅள கத்தி ருப்பெருங்
கற்பி டித்துமதி லுட்பு குந்துநாண்
களவு கொள்வதுங் காவற் கடுக்குமோ?
மற்பி டித்துமத வேழஞ் செற்றுமா
வாய்வ கிர்ந்துமலை தாங்கி வாணன்முன்
விற்பி டித்துவிளை யாடு குத்தளி
வேந்த னே!திரு வேங்கட நாதனே!

மற்போரை மேற்கொண்டு கம்சனால் ஏவப்பெற்ற (அசுரராகிய) மதயானையைக் கொன்றும், கொடிய விலங்கினது வாயைப் பிளந்தும், (ஆனிரையையும் ஆயரையும் காக்க) மலையைக் குடையாக எடுத்தும், வாணாசுரனின் ஆயிரந் தோள்களும் வீழ விற்பிடித்தும் விளையாடிய குத்தளி வேந்தனே! 'திருவேங்கட நாதன்' என்னும் மன்னவா! இருளைப் பிடித்துவைத்து, மணம் கூட்டி, மலர் மாலையைச்சுற்றி, வண்டுகளை நிரைத்த கூந்தலாகிய அழகிய கற்களைப்பற்றி (நெஞ்சமாகிய) மதிலுள் புகுந்து, நாண மாகிய பெரும் பொருளைக் களவாடிக்கொள்வது, உமது காவற் றொழிலுக்குப் பொருத்தமாகுமோ? கூறுவீராக.

['அற்பிடி ..........களவு கொள்வது' என்பது 'இரவுக் காலத்தை மேற்கொண்டு கந்தருவம் என்பதொரு மணத்தைக் காட்டி, மாலை சூட்டிக் கருணைசெய்து, களவொழுக்கம் புரிவது' எனவும் பொருள் தந்து நிற்பது சிறப்பாக உளது. மெய்தொட்டுப் பயில்தல—அளகத் திருப்பெருங் கல்பிடித்து என்றாள். 'கூந்தலைத் தொட்டான்' எனவே நாண் நீங்கிற்று. மதிலுட் புகுந்து என்பது இடக்கர் — பிறநயங் களும் ஓர்ந்துணர்க.]

—*—

தோற்றுவாய்

இரிஞ்சிபுரத்து இறைவன் பால் மையலுற்ற தலைவி ஒருத்தி, தனக்காகத் தூது சென்று, பொருத்திடுவாரின்மையின், 'காமத் தீயானது கொழுந்துவிட்டெரிகின்றது' என விரகந்தோன்றக் கூறுவது. இதனுள் தீப்புண்ணிற்கு வாழைக்குருத்தும் பனிநீரும் மருந்தென்னும் குறிப்புப் புலப்படுகின்றது.

[அறுசீர் விருத்தம்]

176. எருத்திலே பவனிவரும் இரிஞ்சிபுரத்
தான்றனையும் எனையும் சந்து
பொருத்திடுவார் ஒருத்தரிலைத் தாயென்றால்
மார்ச்சரியம் பொருப்பேர் வாழைக்

**குருத்திலே கிடத்திடினும் கொப்பளிக்கும்**
**பனிநீரும் கொதிக்கும் என்றன்**
**கருத்திலே கொழுந்துவிட்டுத் திகுதிகுகென**
**நின்றெரியும் காமத் தீயே.**

இடப வாகனத்தில் அமர்ந்து உலாவரும், இரிஞ்சிப்புரத்து இறைவனையும், என்னையும் (மணமக்களாக) இணைக்கத் தூதாகிச் சென்று, ஒன்றுபடுத்துவார் ஒருவரும் இல்லை; பெற்றதாயோ என்மீது மார்ச்சரியங் கொண்டிருக்கிருள். இந்நிலையில், அழகிய மலைவாழையின் குருத்திலே கிடத்தினலும் உடல் கொப்புளிக்கின்றது, பனிநீரைக் கொண்டுவந்து கொட்டினுல், அதுவும் வெம்மையாய்க் கொதிக்கின்றது. எனவே, என்னைப் பற்றியிருக்கும் இக்காமத்தீயானது என் கருத்திலே ஏறிக் கொழுந்துவிட்டுத் 'திகுதிகு' என நின்றெரிகின்றது; இனி என் செய்வேன்.

[எருது என்னும் உயிர்த்தொடர்க்குற்றியலுகரம், உருபுவர ஒற்றிரட்டி 'எருத்து' என நின்றது. எருது—காளை. சந்து—தூது. மார்ச்சரியம்—அழுக்காறு. பொறுப்பு—மலை. 'திகுதிகு' என்பது இசைக்குறிப்பு. இவ் இடம் ஏட்டில் சிதைந்துள்ளது. இரிஞ்சிபுரம்—திருவிரிஞ்சிபுரம் போலும்.]

—*—

தோற்றுவாய்

'வைத்தீசுவரன்கோவில்' என்னும் புள்ளிருக்கு வேளூர் இறைவன்பால் காமுற்ற நங்கை ஒருத்தி, மரத்தில் இருக்கும் நாரைகளைப் பார்த்துத் தன் காதல் நோயை, அத்தலைவன்பால் சொல்லித் தீர்த்தருளுமாறு செய்யுங்கள்' எனக்கூறுவது. இது 'நாரைவிடு தூது' என்னும் துறையைச் சேர்ந்தது.

**(அறுசீர் விருத்தம்)**

**177. பொருப்புள் ளிருக்குந் தென்றல்வரப்**
**புகைவிட் டெழுந்து படர்விரக**

**நெருப்புள் ளிருக்கும் (மெழுகொத்தேன்**
**நினைவில்) லிருக்க முடியாதே**
**விருப்புள் ளிருக்கும் புள்ளினங்காள்!**
**வினைதீர்ப் பார்க்கென் மெலிவகலத்**
**திருப்புள் ளிருக்கு வேளூர்க்குச்**
**செல்வீ ராகிற் சொல்வீரே!**

உள்ளவிருப்பால், என்பால் நேயங் கொண்டிருக்கும் பறவைகளே! புகழ்மிக்க புள்ளிருக்கு வேளூருக்கு நீங்கள் செல்லுவீராயின், "பொதியமலையினின்றும் வரும் தென்றற் காற்றானது வீசுமாயின், தலைவியின் விரகத்தீயானது புகைவிட்டுக் கணிந்தெழுந்து படருவதால், எரியும் நெருப்பிலே இருக்கும் மெழுகை ஒப்பாள்; இனித்தன் நினைவோடு இருக்க அவளால் முடியாது (இறந்து படினும் படுவாள்)" எனத் தன்னை நினைவாருடைய பிறவி முதலாய பிணிகளைத் தீர்க்கும் இறைவனிடம் கூறுங்கள்.

[பொருப்பு—பொதியமலை நினைவிலிருக்க முடியாதென்பதற்கு 'அறிவுதிரிவாள்' என்று கருதியதாகவும் கொள்ளலாம். புள்ளிருக்கு வேளூர் இறைவன், வைத்தியநாதன் ஆதலின் 'வினை தீர்ப்பார்' என்றாள். அதனால் தனக்குற்ற காமநோயையும் தீர்க்கவேண்டு மென்று குறிப்பாற் புலப்படுத்தினாள். இரண்டாமடி இடையிலே சிதைந்துள்ளது.]

—★—

தோற்றுவாய்

இறைவன் புகழைப்பாடி, அவன் அருளைப்பெறவும் தகுதியற்றவரானோம்; இவ்வுலகில் வாழ மந்திர தந்திர வித்தைகளையும் பயிலாதவரானோம் என் செய்வது என இரங்கும் ஒருவர் கூற்று.

(அறுசீர் விருத்தம்)

**178. தடப்பாரிற் பரவையகத் தாரூரிற்**
**செந்தமிழ்ச்சுந் தரர்க்காய்த் தூது**

**கடப்பாரின் சன்னிதியில் கவிபாடிப்**
**பரிசுபெற நாமார்? சொல்லின்**
**குடப்பானை தனில்மூழ்க, வளைகரணம்**
**போட, கம்பக்கக் கூத்து மாடக்,**
**கடப்பாரை தனைவிழுங்கச், செப்பிடுவித்**
**தைகளாடக் கற்றி லோமே!**

பெரிய இவ்வுலகின்கண் பரவை நாச்சியாரின் ஊடலைத் தீர்ப்பதற்காகத் திருவாரூரிலே, செந்தமிழ்ப்பாசுரம் பாடிய சுந்தர மூர்த்தி சுவாமிகளின் பொருட்டுத் தூது சென்றவராகிய தியாகேசர் சன்னிதியில் நின்று, கவிபாடி இம்மை மறுமை இன்பங்களாகிய பரிசுகளைப் பெற நாம் யார்? (அவர்களைப்போன்ற தெய்வப் புலவர்களா, ஞானிகளா? இல்லை.) இனிச் சொல்லப்போனால், இவ்வுலகில் (வாழ்வதற்குக்கூட நாம் கற்றேமில்லை.) குடத்துள்ளும் பானையுள்ளும் மூழ்கவோ, வளைந்து கரணம் போடவோ, கம்பத்திலேறிக் கூத்தாடவோ, கடப்பாரையை விழுங்கவோ, பல செப்பிடு வித்தைகளாடவோ கற்றேமில்லை.

[தட = பெருமை. 'குடப்பானை தனில் மூழ்க' என்பது முதல் செப்பிடுவித்தை வரை உள்ளவை தந்திர விளையாட்டுகள்: அகடிதகடனு சாமர்த்தியமின்றி, இவ்வுலகில் வாழ முடியாதென்பதைக் குறிப்பாற் புலப்படுத்துகிறார் இப்பாடலாசிரியர்.]

—O—

தோற்றுவாய்

உலகத் துன்பங்களினின்றும் விடுபடவேண்டிக் கதிர்காமத்தில் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளிடத்து ஓர் அடியார் கூறும் முறையீடு.

**(எண்சீர் விருத்தம்)**

**179. என்னாலே முடிவதொரு செயலு மில்லை**
**ஏழையடி யேன்படும்பா டெல்லாம் விண்டு**

**சொன்னாலும் அதுவிரும்பிக் கேட்பா ரில்லை**
**துன்பமன்று இன்பமுறு சுகமோ காணேன்**
**முன்னாளில் அயன்விதித்த விதியோ? உன்பால்**
**முறையிட்டால் நீயிரங்கா முனிவென் சொல்லாய்?**
**பொன்னாடா ளுங்கதிரை முருகா! வாசப்**
**பூங்கடப்பந் தார்புனைந்த புயத்தி னானே!**

தேவருலகையெல்லாம் ஆளுகின்ற, கதிர்காமத்தில் எழுந்தருளி யிருக்கும் முருகப் பெருமானே! மணம் வீசும் கடம்ப மலர் மாலைகளை அணியும் (பன்னிரு) தோள்களையுடைய பெருமானே! இவ்வுலகில், இப்பிறப்பில் என்னாலே செய்து முடிக்கப்படுவதொரு செயலுமில்லை. (எல்லாம் உன செயலேயாம்.) உன் அடிமையாகிய இவ் ஏழைபடும் பாடெல்லாம் எடுத்து விரித்துச் சொன்னாலும் செவிசாய்த்துக் கேட்டு நீக்குவாரில்லை, பிறந்தது முதல் துன்பத்தையன்றி இன்பமோ, பெரிய சுகத்தையோ யான் காணவில்லை. இவை யெல்லாம் முன்னாளில் பிரமதேவன் எனக்காக விதிக்கப்பட்ட விதியோ? இவற்றிற்கு ஆற்றாமல், உன்பால் வந்து முறையிட்டால், நீயும் இரங்காமல் உள்ளாய். என்பால் உனக்கு வந்த வெறுப் வென்ன? சொல்வாயாக!

—*—

தோற்றுவாய்

திருநெல்வேலித் திகிரி வனத்தில் எழுந்தருளியிருக்கும் பரமேசுவரியிடம், தன் துயரத்தைக்கூறி மாற்றியருளுமாறு, ஓர் அடியார் வேண்டிக்கொள்வது இப்பாடல்.

[அறுசீர் விருத்தம்]

180. **மாறாச் சலிப்பும் நெடுமூச்சும்**
**வடிவே வடிவே வடிவேயென்(று)**
**ஆறாப் பெருகுங் கண்ணீரை**
**அம்மே நீகண் டாளாயோ?**

**வீருய்க் கயல்கள் குதிபாய்ந்து**
**விரிபூ மலர்த்தத் தேனுடைந்து**
**சேருக் கிடக்கும் நெல்வேலித்**
**திகிரி வனப்பெண் பெருமாளே!**

நீரிலுள்ள கயல்மீன்கள் வீறுடனே குதிபாய்ந்து, விரியும் பருவமுள்ள மலர்களை மலரச் செய்தலாலே, அவற்றின் உள்ளிருக்கும் தேன் உடைந்து பெருகிப் பாய்வதனுல் வயல்களெல்லாம் சேருகிக் கிடக்கும், வளஞ்சான்ற திருநெல்வேலித் திகிரி வனத்தில் எழுந்தருளிருக்கும் பெண் தெய்வமே! தாயே! சிறிதும் மாருத சலிப்பும், அதனுல் பெருகும் நெடுமூச்சுமே என் வடிவாகும், வடிவாகும் என்று கூறி, ஆற்றுவெள்ளமென வடிக்கும் என்னுடைய கண்ணீரைக் கண்ட பின்னும், என்னை நீ ஆளமாட்டாயோ? (இப்பொழுதே ஆண்டருள் புரிவாயாக).

[சலிப்பு—வேண்டியது கிட்டாமையால் வரும் வெறுப்பு. நெடுமூச்சு—அளவுகடந்த துயரத்தால் பிறக்கும் மெய்ப்பாடு.]

—*—

தோற்றுவாய்

வறுமை வாய்ப்பட்டு வாழ்வு மெலிந்த ஒருவர், திருவாடானையிற் கோயில் கொண்டிருக்கும் உமாதேவியிடம் முறையிட்டு வேண்டுவது, இப்பாடல்.

## (அறுசீர் விருத்தம்)

**181. சருகாய் உலர்ந்தேன் வறுமையினுல்**
**தாயே! தாயே! தாயேயென்(று)**
**உருகா துருகி அழுகண்ணீர்**
**ஓடத் துடைத்தென் றனையாள்வாய்!**
**(....அருகா ..) பாரி சாதவனத்**
**தய்யர் ஆடா னைச்சிவனுர்**
**உருகா வளர்பச் சைக்கொடியே**
**(உமையே அன்)பிற் பிரியாளே.**

குறைவற்ற பாரிசாத வனத்தே திகழும் அய்யர், திருவாடானைச் சிவபெருமான் உள்ளம் உருகாநிற்க வளரும் பசுங்கொடி போல்வாய்! உமாதேவியே! அடியாருடைய அன்புளத்தினின்றும் நீங்காதவளே! என் தாயே! வறுமையினால் என் மேனியெல்லாம் காய்ந்த சருகு போலாகி உலர்ந்தேன். அதனால், தாயே! தாயே! என்று பன்முறையும் உருகி உருகி, யான் அழுகின்றேன். என் கண்ணீரைத் துடைத்து, என்னை ஆண்டருள்வாயாக!

[உருகாதுருகி — பெரிதும் உருகி. பசுமை நிறங்கொண்ட தேவியின் திருமேனியழகால், சிவனார் உள்ளமுருகியதாகக் கொள்க. அடைப்புக் குறியிட்டுள்ள பகுதிகள் சிதைந்துள்ளன.]



தோற்றுவாய்

காந்திமதியம்மையிடம் தம் பிறவிப் பிணியையும், வினையழுக்கையும் போக்கியருளுமாறு, ஓர் அடியார் வேண்டிக் கொள்வது.

(அறுசீர் விருத்தம்)

182. தலையி லழுக்கும் மனத்தழுக்கும்
சார்.................................ந்த,
கலையி லழுக்கும் தீரவுன்றன்
கருணைக் கடலுள் மூழ்கேனோ?
அலைகள் புரட்டுங் கங்கைநனீர்
அருவி குதிக்கும் இமையகிரி
மலையி லுதித்த பசுங்கொடியே
வடிவே காந்தி மதித்தாயே!

பனிப்பாறைகளை அலைகளால் புரட்டும் கங்கையாற்றின் நன்னீர் அருவிகள் குதித்துப் பாயும் இமயகிரியாகிய மலையிடத்தே

அவதரித்த பசுங்கொடி போல்வாய்! அழகே உருவாகிய காந்திமதி யம்மையே! என் தலையில் உள்ள அழுக்கும், மனத்தழுக்கும், ஆடையின் அழுக்கும் தீருமாறு, உன் அருளாகிய பெருங்கடலில் மூழ்கித்திளையேனோ? மூழ்கித்திளைக்க அருள் புரிவாயாக!

[தலையிலழுக்கு — பிராரத்துவ வினைகள்; மனத்தழுக்கு — ஆணவம் கன்மம் மாயையாகிய மும்மலம். முதலடியின் இறுதி சிதைந்துள்ளது கலையிலழுக்கு — "கல்வி என்னும் பல்கடல் பிழைத்தும்" என்பதனால் உலகியற் கல்விகளால் வரும் செருக்கு முதலியவை என்றும் பொருள்கொள்ளலாம். 'அழுக்கு' என்றதற் கேற்ப கருணையைக் கடலாக உருவகஞ் செய்த நயம் மகிழ்தற் குரியது.]

—O—

தோற்றுவாய்

'குருந்தவன' மென்னும் திருப்பெருந்துறையில் கோயில் கொண்டருளும் இறைவன், தன் உடம்பின் பாதியாக உமா தேவியை வைத்திருப்பதற்குக் காரணம் கண்டு கூறுவதுபோல, சிவபெருமானின் அர்த்த நாரீசுவர மூர்த்தத்தைச் சிறப்பித்துப் போற்றுகின்றது. இப்பாடல்.

(பன்னிருசீர் கழிநெடி லாசிரிய விருத்தம்)

183 பூவா ரிதழி மலர்த்தாது
பொங்குந் தரங்கக் கங்கைவெள்ளம்
பூத்த பசும்பொன் நுரைதயங்கப்
பொலியத் துதைந்த சடைக்காட்டில்
தேவா ரமிழ்தப் பிறைக்கீற்றும்
செக்கச் சிவந்த வடிவழகும்
திருநேத் திரமும்கண் டாசை
தீரச் சேர வைத்தாற்போல்
மீவான் முகடு கடந்தமக
மேரு கிரியில் பாரதப்போர்

விளையுங் கதையைப் பொறித்தநறுஞ்
செங்கை வெங்கோட் டொருகைமத
மாவா ரணத்தைத் தந்தமலை
யணங்கை யொருபா கம்வைத்த
மறையின் பொருளே பெருந்துறையின்
வாழ்வே! குருந்த வனத்தானே!

நிறைந்த கொன்றை மலர்களின் தாதுக்கள் உதிர்ந்து பொங்கும் அலைவீசும் கங்கைவெள்ளம் பொலியும், பசிய பொன் போன்ற நுரை விளங்க, அழகுறச் செறிந்த சடா மகுடமாகிய சடைக்காட்டில் விளங்கும் இனிய அமுத கிரணங்களையுடைய பிறைத் திங்களையும், மிகச் சிவந்த திருமேனியினழகையும், அழகார்ந்தமுக்கண்களையும் (உடனிருந்து) ஆசைதீரக் காணும் பொருட்டு(த் தன் திருவடிவிற் பாதியாகச்) சேர வைத்தாய் போலும் எனக்கருதுமாறு, மிக உயர்ந்த வானத்தின் உச்சியைக் கடந்து விளங்கும் மகாமேரு மலையின்கண் பாரதப் போராக விளையும் (பாண்டவர்) கதையை எழுதிப் பொறித்த சிறப்புடைய, செவ்விய கையினையும், செவ்விய கொம்போடு விளங்கும் ஒப்பற்ற து(த்)திக் கையையும் உடைய மதவாரணத்தை (விநாயகனை)ப் பெற்று, உயிர்கள் உய்யத்தந்த மலையணங்காகிய, பார்வதி தேவியை ஒரு பாகத்தேகொண்டு விளங்கும், வேதங்களின் உட்பொருளாய பரம்பொருளே! 'திருப்பெருந்துறை' என்னும் பதியில் விளங்கும் பெருவாழ்வே! குருந்தவனத்துறையும் இறைவனே! (உன் அருளைப்போற்றி வியந்து வணங்குகின்றோம்.)

['மகமேரு..................மாவாரணம்' என்றது, வியாசமுனிவர் கூற, பாரதத்தை விநாயகப்பெருமான் தன் தந்தங்களுள் ஒன்றை ஒடித்து, மேருமலையில் எழுதிய நிகழ்ச்சியாகும். அர்த்தநாரீசுவர மூர்த்தத்திற்கு இவ்வாசிரியர் கூறும் நயம் சுவையாக உள்ளது.]

—★—

## தோற்றுவாய்

வேதவழி வந்த ஆறு சமயங்களுள், பரம்பொருளைச் சக்தி யாகக் கொண்டு வழிபடும் சாக்தமதச் சார்புடைய, தமிழ்ப் புலமை சான்ற, ஒரு பக்தர் பாடியவை; இதுமுதல் ஒன்பது பாடல்கள். இவற்றை, ஒன்ருக இணைத்து **'நவமணிமாலை'** எனச் சொல்வார்கள் பாட்டியல் நூலார். ஒவ்வொன்றும் ஒவ்வொரு கருத்தாகச் சுவைநயத்தோடு விளங்குகின்றது. இம்முதற்பாடல், 'மும்மூர்த்திகளும் காணுதற்கரிய மலரடிகளை என் சிரத்தில் வைத்து, யான் காண அருள்செய்தாள்' என இயம்புகின்றது.

## (கட்டளைக் கலித்துறை)

**184.** **நீணத் தவற்கும் சரோருகத்**
**தோனுக்கும் நின்மலற்கும்**
**சேணுற் றவர்க்குமெட் டாதபொற்**
**ருளென் சிரத்தில்வைத்தே**
**காணத் தவந்தந் தடிமைகொண்**
**டாளண்டங் காக்கும்நவ**
**கோணத் தவளிவ ளேஎனை**
**யாளுங் குலதெய்வமே!**

வெற்றி நாதம் முழக்கும் சங்கினை ஏந்தியுள்ள திருமாலுக்கும், தாமரை மலரில் வீற்றிருப்பவனுகிய பிரமனுக்கும், நின்மலனுகிய உருத்திரனுக்கும் எட்டாத, பொன்போலும் ஒளி கமழும் திருப் பாதங்களை அடியேனுகிய என் தலையில் வைத்தருளித் தவத்தால் யான் காணும் வண்ணம் அடிமை கொண்டாள். எல்லா அண்டங் களையும் காத்தருள் செய்வாள், நவ கோணச் சக்கரத்துள் ஒளிர்வாள், ஆகிய இவளே, எனை ஆண்டருள் புரியும் குலதெய்வ மாவாள்.

[நீணத்தவன்—நீள் + நந்து + அவன். நந்து—நத்தை. ஈண்டு பாஞ்சசன்னியத்தை உணர்த்திற்று. சரோருகம்—தாமரை. நவ கோணம்—நவகோணச் சக்கரம். பெரிய முக்கோணத்துள்

தலைகீழாக ஒரு சிறிய முக்கோணம் வரைந்தால், நவகோணமாம்; அதனுள், மந்திர ஒலி எழுத்துக்களை அமைத்து, தேவியை எழுந்தருளச் செய்தல். பிறவிளக்கம் மந்திரம் வல்லார் வாய்க் கேட்டுணர்தல் வேண்டும்.]



### தோற்றுவாய்

தேவியானவள், தம் அடியாரை எவ்வகையிலும் புறக்கணிக்க மாட்டாள்; அடியாரைச் சார்ந்துள்ளார்க்கும் எல்லா நலங்களையும் புரிந்தருள்வாள் என்கின்றது, இப்பாடல்.

### (கட்டளைக் கலித்துறை)

185. நடுத்திருப் பாற்கடற் கேயிருப்
பாளெம்மை நாளுமுகம்
கடுத்திருப் பாளல்லள் காய்ந்திருப்
பாளல்லள் காய்பவரை
அடுத்திருப் பாளல்லள் தம்மடி
யாரை அடுத்தவர்க்கும்
கொடுத்திருப் பாளவ ளேஎன்னை
ஆளுங் குலதெய்வமே.

சீர்த்தி மிக்க பாற்கடல் நடுவே விளங்குவாள், எம் தாயாகிய பராசக்தி. எந்நாளும், முகங்கடுத்திருக்க மாட்டாள். தம் மக்களைக் காய்ந்திருக்கவும் மாட்டாள். தம் மாட்டு அன்பிலாதவர் (உள்ளத்தின்) பால் தங்கியிருக்கவும் மாட்டாள். தம் அடியாரைச் சார்ந்திருக்கும் பாமரர்க்கும் தன் பேரருளைக் கொடுத்திருப்பாள் ஆகிய இவளே, என்னை ஆண்டருள் புரியும் குலதெய்வமாவாள்.

['பாற்கடல் நடுவே விளங்கும் பராசக்தி மூர்த்தம் ஒன்றுண்டு' என்பது இதனால் புலனாகிறது. கடுத்தல்—அகவெகுளி; காய்தல்—புறவெகுளி.]

—o—

## தோற்றுவாய்

'தேவியின் பேரருளாற்றலை நம் சிற்றறிவினால் அறிய இயலாது' எனக் கூறுகிறது, இப்பாடல்.

## [கட்டளைக் கலித்துறை]

**186.** **நாமவள் எல்லை அறியப்ப**
**டாநவ கோணத்தளாம்**
**சாமள வல்லிச தானந்த**
**வல்லி சதுர்மறைக்கே**
**யாமள வல்லி இமையாத**
**வல்லி இமயவல்லி**
**கோமள வல்லி இவளிவ**
**ளேநங் குலதெய்வமே.**

சிற்றறிவுடையோமாகிய **நம்மால்,** அவள் ஆற்றலின் எல்லையை அளவிட இயலாது. நவ கோணத்தவளாகிய சாமள வல்லி, சதானந்தவல்லி, நான்கு வேதங்களாலும் அளந்தறிய இயலாதவள். இமையாநாட்டமுடையவள். இமைய மலையிற் றோன்றிய கொடிபோல்வாள் **கோமளவல்லி ஆகிய** இவளே நம் குலதெய்வமாவாள்.

['அறியப்படாது' என்பது 'அறியப்படா' எனக் குறைந்தல் விகாரமாய் நின்றது. இனி இம் முதலடிக்கு, நாம் அவள் ஆட்சி எல்லைக்குட்பட்ட சிற்றுயிர்கள்; அவள், புலன்களாலும், அந்தக் கரணங்களாலும் அறியப்படா நவகோணத்தவள், என்றும் பொருள் கொள்ளலாம். சாமளவல்லி என இரண்டாமடியிற் கூறியதனால்; சதுர்மறைக்கே ஆம் அளவு அல்—எனப்பிரித்து எல்லாவற்றையும் அளக்கும் வேதங்களாலும் அளத்தற்காம் அளவற்றவள் என மூன்றுமடிக்குப் பொருள் கொள்ளப்பட்டது. 'இமையாதவல்லி இமையவல்லி' என்பது முரண்தொடை. சியாமளம் — பச்சை; கோமளம் — இளமை; வல்லி — வன்மையுடையவள், கொடி.]

—O—

### தோற்றுவாய்

'பரமேசுவரன் விரும்பி நினைக்கும்போது சென்று, அவரோடு சமமாய் வீற்றிருக்கும் பெருமையுடையவள்; முறையறியாது யான் செய்யும் பூசனையையும் நாடிவந்தாள்' எனத் தேவியின் அடியார்க்கு எளிமையுறும் திறங் கூறுகின்றது, இச்செய்யுள்.

## (கட்டளைக் கலித்துறை)

**187. பொறையற்ற சிந்தையும் யானுமிங்**
**கேசெய்யும் பூவொடுதேன்**
**நறையற்ற பூசைக்கு நாடிவந்**
**தாள்எங்கள் நாதரிடம்**
**நிறையற்ற பேரின்ப வாழ்வுக்கெ**
**லாம்வந்து நேர்பட்டொன்றாய்க்**
**குறையற்றி ருப்பவ ளேயன்னை**
**யாளுங் குலதெய்வமே!**

தவவொழுக்கம் முதலாய பாரமில்லாத என் சிந்தையும், யானும், இங்கே செய்கின்ற, பூவும், தேனும், சந்தனமும் இல்லாத பூசனைக்கு இரங்கி அருள் கூர்ந்து வந்தாள். எங்கள் பெருமானாகிய இறைவனிடம் அளவற்ற பேரின்ப வாழ்விற்கு, அவர் அன்போடு நினைக்கும் போதெல்லாம் வந்து ஒன்றாகப் பொருந்திக் குறை யற்றிருப்பவளாகிய அவளே என்னை ஆண்டருள் புரியும் குல தெய்வமாம்.

[பொறை—பாரம். நறை—சந்தனம். நிறை—அளவு.]



### தோற்றுவாய்

'நவகோணத்துள்ளொளிரும் தேவியானவள், தம் அடியாரைக் கலி வருத்தாமல் கையில் அங்குசபாசமேந்திப் பார்த்திருப்பாள்' என்கின்றது, இப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

188. வீற்றிருப் பாள்நவ கோணத்துள்
எங்களை வேண்டுமென்றே
காத்திருப் பாள்கலி வந்து
காமல்எம் கண்கலங்கப்
பாத்திருப் பாளல்லள் ஆங்கெழும்
அங்குச பாசங்கையில்
கோத்திருப் பாளிவ ளேஎன்னை
யாளுங் குலதெய்வமே.

நவகோணத்துள் வீற்றிருப்பாளாகிய தேவி, நாங்கள் உய்ய வேண்டுமென்று, எங்களைக் கலி வந்து புகுந்து வருத்தாமல் காத்திருப்பாள். ஆதலின், எம்கண் கலங்கப் பார்த்திருக்க மாட்டாள். (கலக்கம் உண்டாயின்) ஆங்கே விளங்குகின்ற அங்குச பாசங்களைக் கையில் ஏந்திப் பாதுகாத்திருப்பாள். அவளே, என்னை ஆண்டருள் புரியும் குலதெய்வமாம்.

[கலி—வறுமை நோய். கண்கலக்கம்—தவிர்க்க இயலாத துன்பத்தைச் சுட்டும் மரபுச் சொல். அடியார்களின் துன்பங்களைக் களையவே கையில் அங்குச பாசத்தை ஏந்தியிருக்கிருள்.]

—o—

தோற்றுவாய்

'இரக்கமே வடுவுகொண்ட தேவி, என் கருத்திலே குடிகொண்டு, என்செயலெல்லாம் தன் செயலாகவே கொண்டிருப்பாள்; நான்படும் துயர் ஒன்றுமில்லை' என்பதைக் குறிப்பாகப் புலப்படுத்துகின்றது, இப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

189. பண்டிருப் பாள்நவ கோணத்துள்
யாங்கள் படுந்துயரம்

**கண்டிருப் பாள்ஒரு கன்னெஞ்ச**
**ளோஎன் கருத்தினுள்ளே**
**கொண்டிருப் பாள்வந் திருந்துகொண்**
**டென்செயல் தன்செயலாக்**
**கொண்டிருப் பாளிவ ளேயென்னை**
**யாளுங் குலதெய்வமே.**

முன்பு நவகோணத்துள் வீற்றிருப்பவளாகிய தேவி, நாங்கள் படுந்துயரம் யாவும் கண்டிருப்பாள். கண்ட பின்னும் அவள் கல் நெஞ்சினளோ? (இல்லை. அருள்வடிவானவளாதலின்) என் சிந்தையுள்ளே வந்து குடி கொண்டிருப்பாளாயினுள். அவ்வாறு வந்திருந்து கொண்டு, என் செயல் யாவும் தன் செயலாகவே கொண்டிருப்பாள். அவளே என்னை ஆண்டருள் புரியும் குல தெய்வமாவாள்.



தோற்றுவாய்

'சீர்த்த நவகோணத்துள்ளிருப்பவளின் அடியாருடைய கருணை எனக்குக் கிட்டியமையால், அவள் என் மனக்குடிலிலே வீற்றிருக்கின்ருள் என்கிறது இப்பாட்டு.

## (கட்டளைக் கலித்துறை)

190. **வடிவாருஞ் சீருறு கோணத்தள்**
**வாழ்விக்க வாழ்வுபெறும்**
**அடியார் பெருமைக் கவமுமுண்**
**டோஅடி யாருமொரு**
**படியாக என்னைத்தம் கண்ணின்**
**கருணை படைப்பமனக்**
**குடிலாகக் கொண்டிருப் பாளென்னை**
**ஆளும் குலதெய்வமே.**

வடிவு நிறைந்த, சீர்த்தி யமைந்த நவ கோணத்தவள், வாழ்வித்தலால் வாழ்வு பெற்றேருங்கும் அடியார் தம் பெருமைக்கு அழிவுண்டோ?(இல்லை.) அத்தகைய அடியார்கள் யாவரும் ஒரு தன்மையராய், என்னையும், தம் கண்ணின் அருள் நோக்கால் கருணை செய்தலால், அவள் என் மனத்தையே குடிலாகக் கொண்டிருப்பாள். அவளே என்னை ஆண்டருளும் குல தெய்வமாம்.

—o—

தோற்றுவாய்

'தலைமுறை தலைமுறையாக, எங்கள் குடியைக்காத்தருள, இங்கே இருக்கின்ருள்' எனத் தேவியின் கருணைத்திறத்தை விளக்குகின்றது, இப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

**191. இங்கிருந் தைந்து தலைமுறை**
**யாண்டவள் எங்குடிக்கா**
**நங்கிருந் தாள்நவ கோணத்து**
**ளேஎங்கள் நாதரிடப்**
**பங்கிருந் தாளிவ ளெப்போதும்**
**நான்மறைப் பங்கயப்பூங்**
**கொங்கிருந் தாளிவ ளேஎன்னை**
**யாளுங் குலதெய்வமே.**

ஐந்து தலைமுறையாக இங்கே எழுந்தருளி, எம் முன்னேரை ஆண்டருள் செய்தவள். எமது குடி உய்ய, நவ கோணத்துள் நன்கு இருந்தாள். எங்கள் இறைவனுகிய பரமேசுவரன் திருமேனியில் ஒரு பங்கிருந்தாள். எனினும்; இவள் எப்போதும் நான்கு வேதங்களாகிய 'தாமரைப்பூவின் தாதுவிலே இருந்தாள்' என்று முனிவர்கள் கூறும் இவளே, என்னை ஆண்டருள் புரியும் குலதெய்வமாம்.

[ஐந்து என்பது எண்ணைச் சுட்டாமல் 'பல' என்னும் பொருளில் நின்றது. 'நன்கு' என்பது எதுகை நோக்கி 'நங்கு' என நின்றது.]



தோற்றுவாய்

இறைவன் திருமேனியிற் பாதியாக இருக்குந் தேவியானவள், என் மனத்தும் குடியிருப்பாள எனகின்றது, இப்பாடல்.

### (கட்டளைக் கலித்துறை)

192. படியிருப் பாளரன் பூசிக்க
வார்பதஞ் சேர்நிதம்பக்
கடியிருப் பாளரன் கைத்தலத்
தேயென் கருத்தினுள்ளே
அடியிருப் பாய்வந் திருந்துகொண்
டேபர மானந்தமாய்க்
குடியிருப் பாளிவ ளேயென்னை
யாளுங் குலதெய்வமே.

இறைவன் பூசிக்கும் வடிவாக இருப்பாள். வார் பதஞ்சேர் நிதம்பக் கடியிருப்பாளான் கைத்தலத்தே, என் சிந்தையுள்ளே அடிப்படையாக வந்திருந்து கொண்டு மேலான ஆனந்தத்தோடு குடியிருப்பாள். இவளே என்னை ஆண்டருளும் குலதெய்வமாவாள்.

[படி - படிமம், வடிவு. முதல் இரண்டடிக்கு, ஆசிரியர் கருத்து விளங்கவில்லை. கடி—நறுமணம். அடியிருப்பு—அஸ்திவாரம்.]



தோற்றுவாய்

மதுரையில் கோயில் கொண்டருளியிருக்கும் அங்கயற்கண்ணி (மீனாட்சி)யம்மையின்பால் பக்திபூண்ட அடியார் ஒருவர், இம்மைத் துன்பங்களும், பிறவிநோய் முதலாயவையும் நீங்க, அவள்

பாதங்களை அடைக்கலமாக வேண்டிப்பாடுகிறார். தொடர்ந்து பத்துப்பாக்கள் உள. யாவும் ஈற்றடியில் ''அங்கயற் கண்ணமே யானுன் அடைக்கலமே'' என முடிகின்றன. பாட்டியனுள் பப்பத்தாக, ஒரு பொருள் குறித்துப் பாடப்பெறின், அவற்றிற்கு அப்பொருளைச் சேர்த்துப் 'பத்து' என்று பெயரிடல் இலக்கணம் என்று கூறப்படுதலின், இத்தொகுதியும், **அங்கயற்கண்ணம்மை அடைக்கலப்பத்து'** எனக்குறிக்கப்பட்டுள்ளது. இதனுள் முதற் பாடலும், ஐந்து, எட்டு, ஒன்பதாம் பாடல்களும் இடையே சிதைந்துள்ளன. முதற்பாடல் அழியும் உடம்பை 'மெய்' என்று கொண்டு, பட்ட துயரத்தைச் சுட்டுகின்றது.

(அறுசீர் விருத்தம்)

**193.** **சமைத்த உடலை மெய்யென்று**
**சாகப் பயந்து தடுமாறி**
**இமைத்து விழியாற் பிறப்பதன்றி**
**எண்ணு தெண்ணி இடையலுற்றேன்**
..........................................................................
**அமைந்த காத லங்கயற்கண்**
**ணம்மே யானுன் அடைக்கலமே.**

[இதன் இரண்டாமடி பாடம் சிதைந்துள்ளது—மூன்றும் அடி இல்லை.]

—o—

தோற்றுவாய்

'உலக வழக்காக அமைந்த சாதிமுதல் யாவும் இழந்து, உள்ளம் அழிந்து நிற்கும் எனக்கு நீயே அடைக்கல' மென்கின்றது, இப்பாடல்.

(அறுசீர் விருத்தம்)

**194.** **சாதி யழிந்தும் மிடுக்கழிந்தும்**
**சங்கை யழிந்தும் சதுரழிந்தும்**

**நீதி யழிந்தும் அறிவழிந்தும்**
**நெஞ்சம் உழன்று நிற்கின்றேன்**
**ஓதி யுணர்ந்த பெரியோர்கள்**
**உறவே உயிரே....எங்கள்**
**ஆதி முதலே அங்கயற்கண்**
**அம்மே யானுன் அடைக்கலமே!**

மரபுவழிவந்த சாதித் தன்மையையும், குடிப்பிறப்பு முதலாயவற்ருல் வந்த பெருமிதத்தையும், சால்பு முதலியவற்ருல் வந்த நாணத்தையும், ஆராய்ச்சியால் வந்த பகுத்தறிவையும், நடுவு நிலையால் வந்த நீதியையும், அனுபவத்தால் வந்த அறிவையும், இல்வுலகத் துன்பங்களால் இழந்து, மனந்தடுமாறிச் செயலற்று நிற்கின்றேன். மெய்ஞ்ஞானங்களை ஓதி உணர்ந்து, அவ்வழி நிற்கும் பெரியோர்களின் உறவாக விளங்குபவளே! யாவற்றுக்கும் உயிராக விளங்குபவளே!.... எங்களுடைய முழு முதலே (அழகிய கயல் போலும் கண்ணிணையுடைய தாயே!) அங்கயற்கண்ணம்மையே! யான் உன் அடைக்கலப் பொருள்; ஆதலின் ஆண்டருள் வாயாக.

[மிடுக்கு: சங்கை, உலக வழக்காய்ப் பெருமிதத்தையும் நாணத்தையும் உணர்த்தின. சதுர்-சதுரப்பாடு, தூய ஞானம்.],

—★—

தோற்றுவாய்

'ஆசை முதலாயவற்ருல் சித்தங்கலங்கி, மாயையாகிய பெருங் கானில் பரிதவிக்கும் என்னைக் கடைக்கணிப்பாய்' என்கின்றது இப்பாடல்.

(அறுசீர் விருத்தம்)

**195. சித்தக் கவலை மிகப்பெருத்துத்**
**தீண்டற் கரிய கானகத்தே**

**மெத்தக் கலங்கிப் பரிதவித்து**
**வேற்று முகம்பார்த் தழுகின்றேன்.**
**பத்தர்க் கெளிதாய் அருளுமிரு**
**பாதாம் புயத்தி பராபரையே**
**அத்தர்க் கிடமாம் அங்கயற்கண்**
**அம்மே யானுன் அடைக்கலமே.**

உள்ளத்தில் கவலையானது மிகமிகப் பெருத்ததனுல் செல்லு தற்கரிய (துன்பமாகிய) காட்டகத்தே மிகவும் கலங்கி, அறிவு தடுமாறி(த்தாயாகிய உன்னையன்றி) வேற்று முகங்களையே பார்த்துப் பார்த்து அழுகின்றேன். பக்தர்களுக்கு எளிதாக அருள் செய்கின்ற இரண்டு பாத கமலங்களையுடைய பராபரையே! எம் அத்தனுகிய இறைவனுக்கு இடப்பாகத்தே அமர்ந்தருளும் அங்கயற்கண்ணம்மையே! யானுன் அடைக்கலப் பொருள்; ஆதலின் என்னை ஆண்டருள்வாயாக.

[பரை—சக்தி. பாரபரை—மேலான சக்தி. இஃது அம்மைக்கு ஒரு பெயர்.]

—*—

### தோற்றுவாய்

'ஞானிகளால் வெறுக்கத்தக்க நிலையில்' ஒரு குழந்தைபோல உலக ஆசைகளில் சிக்கித் தடுமாறும் என்னைக் காத்தருள்வாயாக' என்கின்றது இப்பாடல்.

### (அறுசீர் விருத்தம்)

**196. சீயென் றுமிழ்ந்து சிரித்திடவே**
**தினமும் அடியேன் பரிதவித்து**

**வாயுங் குழறித் தடுமாறி**
**மதலே போல மயக்குற்றேன்**
**பாயும் எருத்தின் மீதேறும்**
**பரமர் இடத்தில் இருப்பவளே,**
**ஆயும் பொருளே, அங்கயற்கண்**
**அம்மே யானுன் அடைக்கலமே.**

மெய்ப்பொருளுணர்ந்த ஞானிகள் 'சீ' என்று உமிழ்ந்து கூறிச் சிரிக்கும்படியாக, மனோ வாக்குக் காயங்கள் நிலை பிறழ்ந்து தடுமாறி, அறியாப்பருவத்துக் குழந்தையைப்போல, உலக நடையிடத்தே மயங்கிக் கிடக்கின்றேன். தாவிச் செல்லும் இடப வாகனத்தின் மீதேறி அருளும் பரமசிவனின் இடப் பாகத்தே வீற்றிருப்பவளே! வேதங்கள் ஆராயும் பெரும்பொருளே! அங்கயற்கண்ணம்மையே! யான் உன் அடைக்கலப் பொருள், ஆதலின் என்னை ஆண்டருள்வாயாக!

['வாயும் குழறி' என்ற உம்மையால், மனமும், மெய்யும் சேர்க்கப்பெற்றன. 'ஞானிகளால் ஆயப்பெறும் பரம்பொருள்' என்றும் கொள்ளலாம்]



**தோற்றுவாய்**

இப்பாடல் மூன்ருவது அடி சிதைந்தமையால் பொருள் விளங்கவில்லை.

**[அறுசீர் விருத்தம்]**

197. **சுழியா டிவரும் கடுங்காற்று**
**சுற்றும் முற்றும் அதுவாகி**
**ஒழியாப் புவனம் பதினலும்**
**ஒழிந்தே ஒன்ருய் வந்திடினும்**
**......................ஒளியா வினை முதலே**
**..................................................**
**அழியாப் பிறப்பே அங்கயற்கண்**
**ணம்மே யானுன் அடைக்கலமே.**



### தோற்றுவாய்

'இருவினைத் தீயுள் அகப்பட்டுத் துன்புறும் என்னை, பரிந்தெடுத்து அருள்வாய்' என்கின்றது. இப்பாட்டு.

## (அறுசீர் விருத்தம்)

**198. சூழ்ந்த வினைக்குள் அகப்பட்டுத்**
**துள்ளித் துடித்துப் பரிதவித்து**
**வீழ்ந்து மிகவும் அகநடுங்கி**
**வேற்று முகம்பார்த் தழுகின்றேன்.**
**தாழ்ந்த சடையார்க் கிடமாகும்**
**தாயே கூடற் சங்கரியே!**
**ஆழ்ந்த பொருளே அங்கயற்கண்**
**அம்மே யானுன் அடைக்கலமே.**

பிறவிகள் தோறும் சூழ்ந்து வந்துள்ள இரு வினைகளுக்குள்ளே சிக்கி வீழ்ந்து, துள்ளித்துடித்து, அறிவு தளர்ந்து, தடுமாறி, நெஞ்சம் மிகவும் நடுநடுங்கி, வேற்றுமுகம் பார்த்து அழுகின்றேன். நீண்ட சடாமுடியை உடைய சிவபெருமானுக்கு இடப்பாகமாய் இருந்து அருளும் தாயே! நான்மாடக்கூடலில் விளங்கும் சங்கரியே! அறிவால் தேடிக் காணுதற்கரிய பரம்பொருளே! அங்கயற்கண்ணம்மையே! யான் உன் அடைக்கலப் பொருள்; ஆதலின் என்னை ஆண்டருள்வாயாக!

[கூடல்—மதுரை. சங்கரி (சங்கரனுக்குப் பெண்பால்) உமாதேவி.]

—O—

### தோற்றுவாய்

"மதியாதார் வாயிலிற் சென்று, இழிவு பெற்று மீளும் வறியாரைப் போல, அடியார் கூட்டத்தில் புக்குப் 'பொல்லான்' என மீண்டு தடுமாறும் என்னை ஆள்வாய்" என்கிறது, இப்பாடல்.

### (அறுசீர் விருத்தம்)

199. செல்லா வாசல் இடஞ்சென்று
திட்டுண் டேங்கித் திரிவார்போல்
பொல்லா னெனவே உடம்பெடுத்துப்
புரை .... எனப்போந்தேன்
நல்லா ருள்ளத் துள்ளிருக்கும்
நாலு மறையின் உட்பொருளே!
அல்லார் குழலீ அங்கயற்கண்
அம்மே யானுன் அடைக்கலமே.

தன் மதிப்புச் செல்லாத செல்வர் வாயிலிடத்தே சென்று, அவரால் வசவுபெற்று ஏங்கித் திரியும் இரவலர் போல, ஞானிகளால் 'இவன் பொல்லாதவன்' என்று இழிக்கும் வண்ணம் உடம்பெடுத்து, (துயர்மிக்கு உன் அடியேன்) வந்து புகுந்தேன். தவசிகளின் நெஞ்சத்தே விளங்கும் நான்கு வேதங்களின் உட்பொருளாக விளங்குபவளே! இருள் போலும் கூந்தலை உடையாய்! அங்கயற்கண்ணம்மையே! யான் உன் அடைக்கலப் பொருள்; ஆதலின் என்னை ஆண்டருள் புரிவாயாக.



தோற்றுவாய்

இப்பாடலும் அடுத்த பாடலும் இடையே சிதைந்துள்ளமையால் பொருள் செவ்வையாகப் புலப்பட வில்லை.

### (அறுசீர் விருத்தம்)

200. சேக்கை யிழந்த புள்ளதுபோல்
தினமும் அடியேன் பரிதவித்துக்
காக்கை தொடர நரிதொடரக்
கழுகு தொடரக் கால்தளர்ந்தேன்
ஆக்கை யதனைச் சுமந்தலுத்தேன்
.................................................
.................................................அங்கயற்கண்
அம்மே யானுன் அடைக்கலமே.

[சேக்கை—பறவைகள் தங்கும் கூடு. புள்—பறவை. ஆக்கை—உடம்பு. "காக்கை தொடரக்..........கழுகு தொடர" என்றது 'இவ்வுடல் என்று விழும், அப்பிணத்தை உண்ணலாம்' என்று தொடரும், என்றபடி: இதனுல் யாக்கை நிலையாமை உணர்த்தப்பெற்றது. கால் தளர்ந்தேன் என்றது, பல பிறவிகள் எடுத்தேன் என்றபடி.]

—*—

(அறுசீர் விருத்தம்)

**201.** **சைச்சை யெனவே உடம்பெடுத்துத்**
**தள்ளத் தலைசாய்ந் துள்ளமெலாம்**
**இச்சை யேற்றுக் கொச்சையினுல்**
**ஏமாந் திருந்து இடையலுற்றேன்**
..............................................................
..............................................................
**அச்ச மிடைச்சி அங்கயற்கண்**
**அம்மே யானுன் அடைக்கலமே.**

[சைச்சை—சீச்சீ என்ற குறிப்பு- கொச்சை—இழிவு. அச்சமிடைச்சி—மென்மையால் அஞ்சத்தக்க இடையை உடையவள்.]

—O—

தோற்றுவாய்

'உலக போகங்களுக்காக மயங்கித் துயர்கொண்டு மாற்றுந்தாயிடைப்பட்ட குழவியைப் போல், இரக்கங் காட்டுவாரின்றி வருந்தும் என்னை ஆண்டருள்வாயாக' என்கிறது, இவ் இறுதிப் பாட்டு,

(அறுசீர் விருத்தம்)

**202.** **சோற்றுல் தளர்ந்து மதிமயங்கிச்**
**சோபம் பெருத்துப் பீடையினுல்**

**மாற்ருள் கையில் அகப்பட்ட**
**மதலே போல மயக்குற்றேன்**
**பார்த்தா லிரங்குந் துணேகாணேன்**
**பாதாம் புயத்தி பராபரையே**
**ஆத்தாள் குறத்தி அங்கயற்கண்**
**அம்மே யானுன் அடைக்கலமே.**

சோற்ருல் வளரும் இவ்வுடம்பு காரணமாக, உலக போகங்களே எண்ணி, அறிவு கலங்கித் துயரமே பெருக்குகின்ற பாவங்களால், மாற்ருந்தாய் கையில் அகப்பட்ட சிறு குழந்தைபோல (அன்புக்கு ஏங்கி) மயக்கமுற்றுள்ளேன், தாயில்லாக் குழந்தை என்று கண்டு மனமிரங்கித் துணேபுரிவார் ஒருவரையும் காணேன். (அடைந்தார்க்கு அருள் பாலிக்கும்) பாத தாமரைகளே யுடையவளே! பராபரையே! தாயே! குறமகளாகிய அங்கயற்கண்ணம்மையே! யான் உன் அடைக்கலப் பொருளாதலின் என்னே ஆண்டருள்வாயாக!

[மாற்ருல்—சிற்றன்னேயாக வந்தவள், பகை ஆள் எனலுமாம். ‘குறத்தி’ என்றது மலேயத்துவசன் மகளாதலின் — பார்வதி என்னும் பொருளேச் சுட்டி நின்றது. இப்பாடல் முன்னிரண்டடி ஓரெதுகை யாகவும் பின்னிரண்டடி மற்ருேரெதுகையாகவும் வந்த மையின் “இரண்டடி எதுகை” எனக் கொள்ளலாம்.]

—o—

தோற்றுவாய்

‘தென்கைலே’ யென்னும் திருவையாற்றிற் கோயில் கொண்டருளும் ஐயாறப்பராகிய பஞ்சநதீசரரின் தோற்றங்களுள் ஒன்ருகிய அர்த்தநாரீசுவர மூர்த்தத்தின் அழகை, அம்மையின் தோற்றமும் அப்பனின் தோற்றமும் விளங்கத் தன்மை நவிற்சியோடு வருணித்துப் போற்றுகிறது, இப்பாடல்.

[பதினான்குசீர் ஆசிரிய விருத்தம்]

203. ஒருபாதி பச்சையும் ஒருபாதி பவளமும்
ஒருபாதி களபங்களும்
ஒருபாதி வெண்ணீறும் ஒருபாதி முல்லைநகை
ஒருபாதி முளரிநகையும்,
மருவார்ம லர்க்கூந்தல் ஒருபாதி ஒருபாதி
மறையளக பாரமுடியும்
மையிட்ட கண்ணுமைக் கீற்றிடாக் கண்ணுமோர்
அழற்கண் ணரைக்கண்களும்
பொருவா ரணப்போர் புரிந்தமுலை யொன்றுமப்
போர்த்தொழிலை விட்டதொன்றும்
பொன்னுடை யொன்றுமிடை மின்னுடையொன்று
மெதிர்
போராடு மகுட முடியும்,
பரராசர் முடியிடறு பங்கயத் தாளுமென்
பாவலைக் குள்ளாகுமோ;
பஞ்சநதி முடிவைத்த பஞ்சநதி வாணனே!
பஞ்சாட் சரரூபனே!!

பஞ்சநதியை (கங்கையை) முடியிலே தரித்துத் திருவையாற்றில் வாழும் இறைவனே! ஐந்தெழுத்துக்களாகிய மந்திர ரூபமாக விளங்குபவனே! (உனது ஒப்பற்ற திருமேனியிலே) ஒருபாதி பச்சை நிறமும், ஒருபாதி பவளநிறமுமாய்; ஒருபாதியில் சாந்தும், ஒருபாதியில் வெண்ணீறும் பூசி; (வதனத்தில்) ஒருபாதி முல்லைச் சிரிப்பும், ஒருபாதி தாமரைச் சிரிப்பும் கொண்டு; (உச்சியில்) ஒருபாதி மணங்கமழும் மலரணிந்த கூந்தலும், ஒருபாதி வேதமாகிய சடைமுடியுமாய்; (முகத்தில்) மையிட்ட கண்ணொன்றும், மைக்கீற்றிடாத ஒரு கண்ணோடு, ஒப்பற்ற தணல் வீசும் அரைக் கண்ணாகிய நெற்றிக் கண்ணோடும்; (கயமுகாசுரனாகிய) யானையோடு பொருத மார்பகம் ஒன்றும், அவ்வாறு போரிடாத முலையொன்றுமாய்; (இடையில்) பொன்னுடை ஒரு

பாதியும், மின்னுடை ஒருபாதியுமாய் அணிந்து; தலையில் ஒன்றோடொன்று மாறுபடும் மகுடம் ஒருபாதியும், சடைமுடி ஒருபாதியுமாய்க்கொண்டு விளங்கும் ஒப்பற்ற தோற்றத்திலேகாணப்படும், (ஆணவத்தால் தலைநிமிரும்) பிற தேவர்களின் முடிகளை இடறும் ஒரு பாதமும், தாமரை மலர்போல் விளங்கும் ஒரு பாதமும் ஆகிய இருபாத மலர்களும், அடியேன் தியானிக்கும் எண்ணத்தில் நிலைபெறுமோ? (நிலைபெறுமாறு அருள்வாயாக.)

[பஞ்சநதி—ஈண்டுத் தாற்பரியத்தால் கங்கையை உணர்த்திற்று. முளரி—தாமரை. அழற்கண்—நெற்றிககண். 'ஆரைக்கண்' என்றது ஒருபாதி நெற்றி உமையவளுடையதாகலின். 'வேதசிகை' என்பது தத்துவமாகலின் 'மறையளகம்' எனப் பட்டது. மின்—மின்னல். 'மகுடமுடி' என்றது உம்மைத் தொகை. 'முடியிடறு தாளும்', 'பங்கயத்தாளும்' எனத் தனித்தனி கூட்டப்பட்டது. அருவுருவாகிய 'பஞ்சநதிவாணனே' என விளித்து, உருவாகிய 'சிவசத்திவடிவின்' னைக்காட்டி, அருவாகிய 'பஞ்சாட்சரரூபனே' என முடித்துக்காட்டியநயம் சிந்தித்து மகிழற்பாலது.]

—o—

### தோற்றுவாய்

இப்பாடலும், ஐயாறப்பரின் அர்த்தநாரீசுவர வடிவத்தைப் போற்றுவதே. இதனுள், முற்பாடலுள் விடப்பெற்ற சில உறுப்புக்களோடு பிறவற்றையும் விளக்கி, அவ்வடிவை மனமுருகி வழிபட அருள வேண்டுமென்கின்றது.

### (பன்னிருசீர் ஆசிரிய விருத்தம்)

204. நெய்யொழுகு சூலமும் நிணமொழுகு மழுவுமதில்
நீணொழுகு செங்குருதியும்
நிலவொழுக ஒருவிழியில் வெயிலொழுக ஒருவிழியில்
நெருப்பொழுக நின்றநிலையும்

**மையொழுகு களபமும் அனலொழுகு மெய்யமுதம்**
**வழிந்தொழுகு பால்மதியமும்**
**மதுரமுரு குந்தேறல் மழையொழுகு கொன் றையும்**
**மணமொழுகு பாதமலரும்**
**கையொழுகு மலரோடு கண்ணொழுகு நீரோடு**
**கண்டுதொழு தேத்த (நெஞ்சக்)**
**கல்லுக்குள் அன்பு.................................**
**கசிந்துருகு தென்செய்குவேன்**
**பையொழுகு பணமுடியில் மணியொழுகு பன்னகா**
**பரணந்த ரித்தபுயனே!**
**பஞ்சநதி முடிவைத்த பஞ்சநதி வாணனே!**
**பஞ்சாட் சரரூபனே!**

படம் விரியும் உச்சியில் மாணிக்கமணிகள் ஒளிவிடும் நாகங்களை ஆபரணமாகத் தரித்து விளங்கும் தோள்களையுடையவனே! பஞ்சநதியை (கங்கையை) முடியிலே தரித்துத் திருவையாற்றில் வாழும் இறைவனே! ஐந்தெழுத்துக்களாகிய மந்திர ரூபமாக விளங்குபவனே! (உனது ஒப்பற்ற திருவடிவிலே விளங்கும்) ஒரு கையினிடத்தே நெய்பூசிய முத்தலை வேலும், மறுபக்கத்து ஒருகையினிடத்தே நிணங்கியச் செங்குருதி நின்றொழுகும் மழுவாயுதமும் தாங்கி; (முகத்தில் விளங்குங் கண்களுள்) சந்திரனாகிய ஒருவிழியிலே நிலாவொளிவீச, சூரியனாகிய ஒரு விழியிலே வெயிலொளி வீச, அக்கினியாகிய நுதல்விழியிலே பாதி நெருப்புச் சுடரோங்க நிற்கும் நிலையையும்; திருமேனியில் ஒரு பாதியில் கருமை விளங்கும் சாந்தினது பொலிவும், அனல் போலும் செந்நிறமுடைய ஒருபாதியில் பால்மதியின் அமுதகிரணங்கள் வழிந்தொழுகும் பொலிவும்; இனிமை முற்றிய தேன்மழையொழுகு கொன்றை யணிந்த முடியும், தாமரை மணங்கமழும் பாதமலருமாய் விளங்கி நிற்கும் நிலையையும் கண்ணாரக்கண்டு, மலரைத் தூவுகின்ற கைகளோடே கண்களில் ஆனந்த நீர் பெருகத் தொழுது ஏத்துதற்கு, என் நெஞ்சமாகிய கல்லுக்குள் அன்புநீர்சுரந்து............ கசிந்து உருகுவதனை்ல் பிற செய்வதறியேன்; அருள்வாயாக.

['மழு' எனப்பிற்கூறுவதால் சூலம் சக்தியினுடையதாகக் கொள்ளலாம். இன்றேல் இப்பாடல் முழுதும் சிவபெருமானின் வடிவத்தையே வருணிப்பதாகவும் கொள்ளலாம். மூன்ருவது அடியில் "கண்டுதொழு.......... தென்செய்குவேன்" என்ற பகுதி பிறழ்ந்துள்ளதாகத் தெரிகிறது. உருகவேண்டுமெனக் கேளாமல் "உருகுது என்செய்வேன்" எனக்கூறுவதில் குறிக்கோளில்லை யாதலின். பன்னகம்—பாம்பு.]

—o—

தோற்றுவாய்

தன்னை வருத்தும் ஒரு பெண்ணின் கண்களை வியந்து கூறும் ஒருதலைவனின் கைக்கிளைக்கூற்று.

(கட்டளைக் கலித்துறை)

205. **கருக்கறுக் குங்குழல் காரே**
**சொரியுங்கங் காளர்வெற்பில்**
**மருக்கறுக் குங்குயில் வல்லிநல்**
**லீர்! கொல்லர் வல்லபங்கொண்**
**டுறுக்கறுத் திட்டுலை வாயிட்டுச்**
**காய்ச்சிகை யொப்பமிட்டுத்**
**திருக்கறுக் குங்கதிர் வேலோ**
**உனது திருக்கண்களே?**

மிகக் கருமைபெற்று விளங்கும், உனது கூந்தல் போலும் கார்மழை சூழ்ந்து திகழும் கங்காளர்தம் மலையிடத்தே, என் உடம்பை வருத்தும்படியாக விளங்கும் குயில்போலும் இனிய மொழியையுடைய வல்லி நல்லீர்! இரும்பைப் பயன்படுக்கும் கொல்லர்தந் திறமையெல்லாங்கொண்டு, எஃகினை அராவி, அதனைத் தீயுலையிற் காய்ச்சி, கைக்கு ஒப்பாக அளவிட்டுச்செய்த, குறையில்லாத, ஒளிவீசும் வேற்படைகள் தாமோ, உமது அழகிய கண்கள்?

['கருகருக்குங்குழல்' எனற்பாலது எதுகைநோக்கிக் கருக் கறுக்கும் என நின்றது. 'கருவைக்கறுக்கும் கங்காளர்' எனக் கூட்டிப் 'பிறவியை, அற்றுப் போகச்செய்யும் கங்காளர்' எனவும் பொருள்கொ ள்ளலாம். மருக்கு—உடம்பு. வல்லபம்—அருந்திறல். உருக்கு—எஃகு. திருக்கு—குற்றம்.

—o—

தோற்றுவாய்

ஒருதலைக்காமத்தால் வருந்தும் ஒருவன், தன்மையலுக்குக் காரணமாகிய நங்கையிடம் தன் விரக நோயைத் தெரிவிக்குமாறு, வண்டுகளைப் பார்த்துக் கூறுவதாக அமைந்துள்ள இப்பாடல், பெருந்திணையின் பாற்படும்.

## (கட்டளைக் கலித்துறை)

**206.** **நறுக்கித் தரித்த பிறைச்சொக்க**
**நாயகர் நாட்டமர்ந்த**
**சிறுக்கிக் குருகிச்சொ லீர்! வண்டு**
**காள்! என்ன செய்வெனோ**
**நறுக்குக் குறுக்கென் றறுக்குங்**
**கழுத்தைக் கதிர்வெண்ணிலா**
**சுறுக்குச் சுறுக்கென்று தைக்குது**
**காமன் தொடுசரமே.**

வண்டுகாள்! நறுக்கித் தரித்த பிறைச் சந்திரனையுடைய சொக்கநாதரின் கூடல்மாநகரில் விரும்பி வாழும் சிறுக்கிக்கு, என் காதல் நோயையெல்லாம் நீங்கள் நெஞ்சுருகிச் சொல்லுங்கள். ஐயோ! இனி வெண்ணிலாவின் ஒளிக்கதிர்கள் என் கழுத்தை 'நறுக்குக்குறுக்' கென்று அறுக்கும், இப்பொழுதோ மன்மதன் தன் கருப்பு வில்லிலே வைத்துத்தொடுத்த அம்புகள்வேறு, 'சுறுக்குச் சுறுக்' கென்று தைக்கின்றன; என்ன செய்வேன்?

[சிறுக்கி—இளமங்கை எனப் பொருள் தரும் குறைமொழி. 'நறுக்குக்குறுக்கு', 'சுறுக்குச் சுறுக்கு' இசைக் குறிப்புக்கள்.

—*—

தோற்றுவாய்

ஒருமங்கை, தன் உணர்வை வயப்படுத்திய நிலையைக் குறிப்புச் சொற்களால், ஒருதலைவன் கூறும் கைக்கிளைச் செய்யுள்

**(கட்டளைக் கலித்துறை)**

**207. மாலடி தேடியுங் காணுத**
**சொக்கர் வரையிடத்தே**
**பாலடி தேடி வருங்கிள்ளை**
**காள்! ஒரு பாவைநல்லாள்**
**வேலடிக் கேகுத்தி வேயடிக்**
**கேகட்டி மேருகிரி**
**ஆலடிக் கீழ்வெளிக் கேபறித்**
**தாளென்றன் ஆருயிரே!**

நிலத்தைக் குடைந்து தேடியும் காணவியலாத திருவடிகளை யுடைய சொக்கநாதரின் மலையிடத்தே, (தினையின்) பாற்கதிர் களைத் தேடிவரும் கிள்ளைகளே! ஒப்பற்ற பாவைபோல்பவளாகிய ஒருமங்கை, என்னை வேலடிமுள்ளாற்குத்தி. மூங்கிலடியிற்கட்டி. மேருமலையின் கீழ்உள்ள ஆலடியின் கீழ்உள்ள வெளியிடத்திலே, என் உயிரைப்பறித்துக்கொண்டாள். என் செய்வேன்!

['பாலடி' பாலடிசில் என்பதன் குறையாகவும் கொள்ளலாம். வேலடிக்கேகுத்தி—கடைக்கண்ணால் நோக்கி (வேல் கண்ணிற் குவமை). வேயடிக்கேகட்டி—தோள்களால் வளைத்து (வேய்—மூங்கில் - தோளுக்கு உவமை). மேருகிரி ஆலடிக்கீழ்வெளி—தனங்களுக்கும் வயிற்றிற்கும் கீழ்உள்ள அல்குற்பகுதி (மேருகிரி — தனங்களுக்கும். ஆல் (ஆலிலை)—வயற்றுக்கும் உவமை). வெளி —இடக்கராய் நின்று அல்குலை உணர்த்திற்று. உயிர்—ஈண்டு

உணர்வு. இதனுள் உறுப்புக்களை மரங்களின் பெயராகக் கூறிக் குறிஞ்சிநிலத்து வாழ்வார் செயலுக்குஏற்ப வைத்து இருபொருள் பட இயற்கைப் புணர்ச்சியைப் பாடியுள்ள நயம் மகிழற்பாலது.]



தோற்றுவாய்

தலைவியின் ஊடலைத் தணிப்பதற்காக, அவள் வளர்க்கும் கிள்ளையிடம், தலைவியின் பழைய நிலையையும், புதுநிலையையும் கூறும் தலைவன் கூற்றாக அமைந்ததிப்பாடல்.

(கட்டளைக் கலித்துறை)

208. வில்வமும் கொன்றையும் சூழ்நெல்லை
 நாதர் வியன்சிலம்பில்
செல்வமும் பாலன மும்பெறுங்
 கிள்ளாய்! தினந்தினமும்
வெல்லமும் சர்க்கரை யும்போல்
 இருந்தவிம் மெல்லிநல்லாள்
எல்லமண் பத்திரி யுமபோல்
 இருந்ததென் என்னளவே.

இறைவனுக்குரிய வில்வமரமும் கொன்றை மரமும் சூழ்ந்தோங்கும் நெல்வேலிநாதரின் அகன்ற மலையிடத்தே விளங்கும் செல்வமும், (இங்கே, இத்தலைவி தரும்) பாலுணவும் பெற்றுவளரும் கிளியே! நாள்தோறும் எனக்கு வெல்லமும், சர்க்கரையும் போல இனிமையோடிருந்த இம் மெல்லியல் நங்கை, இந்நாள், இவ் விரவில், என்னளவில், அமண்முனியும் பத்திர காளியும் போல இருப்பதற்குக் காரணமென்ன? அறிந்து கூறுவாயாக.

[பாலனமும்—பாற்சோறும். எம்மை ஆளும் நிலையும் என்ற குறிப்பும் காண்க. வன்மையும் மென்மையும் தோன்ற 'வெல்லமும் சர்க்கரையும்' என்றான். எல்—இரவு. அமண்—சமண முனிவரை

உணர்த்திற்று. அவர் சடைமுடி களையாராதலின் அவர்போல் கூந்தலவிழப் பிணங்கியிருந்த தலைவியை நோக்கினன். பத்திரிகாளி, தலைவியின் வெகுண்ட தோற்றத்தை உணர்த்தினன் 'என்னளவு' என்றான், கிள்ளையிடம் வெகுளாள் எனக்கருதி.

—o—

தோற்றுவாய்

வடிவழகால் தன்னை வருத்திய ஒருத்தியின், வாயிதழ்ச் சுவையை வேண்டும் ஒரு காமுகன் கூற்று.

**(கட்டளைக் கலித்துறை)**

**209.** **கலைகொண்ட வல்குற் கரும்பாம்பு**
**தீண்டிக் கடித்தவிடம்**
**தலைமண்டைக் கேறித் துயருறு**
**வேன்சக்ர வாளமெட்டும்**
**நிலைகொண்ட வண்ணப் பெருமாள்**
**அளந்த நிலவுலகே**
**விலைகொண்ட வாயிதழ் முத்தந்தந்**
**தால்விடம் விண்டிடுமே.**

பெண்ணே! ஆடையுள் மறைந்திருக்கும் அல்குலாகிய கரிய பாம்பானது, என் உணர்வைத் தீண்டிக் கடித்ததனாற் பரவிய விடமானது, என் தலைமுழுதும் ஏறி அறிவைத் திரித்தமையால் துயருறுவேன். சக்கர வாளமலை சூழ்ந்த பரப்பு முழுதும், நீலவண்ணனாகிய பெருமாள், தன் ஓரடியால் நிலைகொண்டளந்த இந் நிலவுலகத்தையே விலையாகக்கொண்ட, நின் வாயிதழின் முத்தமொன்று தருவாயாயின் அக்கொடியவிடம் விண்டு நீங்கிவிடும்; ஆதலின் அருள்வாயாக.

[நெஞ்சத்தை முன்னிலையாக்கி, அதற்கேற்பவும் பொருள் காணலாம்.]

—o—

தோற்றுவாய்

'புலன்கள் ஒடுங்கி, அறிவழிந்து, மூவாசையும் போய், சுற்றத்தார் அழ, எமன் வருங்கால் 'இராசை' என்னும் ஊரில் விளங்கும் இறைவனே அடைக்கல மாவான்' எனச் சான்றோர் ஒருவர், தன்னெஞ்சிற்குக் கூறுவது.

(கட்டளைக் கலித்துறை)

210. மீராசை நாமெண்ணி மேல்மூச்
செறிந்து விழிமயக்காய்ப்
பாராசை பொன்மக்க ளாசைலம்
போய்ப்பலர் பாய்ந்தலறப்
போராசை சூலத்தர் வந்தெய்தி
ஞலப் பொழுதுநெஞ்சே!
ஆராசை யும்மில்லைச் சீராசை
மன்னர் அடைக்கலமே.

நெஞ்சமே! பற்பல பயன்களை நாம் எண்ணி எண்ணி மேல் மூச்சுவிட்டு, விழிசெருகி, மயங்கி, மண்ணாசையும், பொன்னாசையும், மக்களாசையும் போய்க்கிடக்குங்கால், சுற்றத்தார், நம்மீது விழ்ந்தலற, பேராசைமிக்க சூலத்தை ஏந்திய கூற்றுவன் வந்து எய்தினால், அப்பொழுதும், யார் ஆசையும், எத்தகைய ஆசையும், பயன்படுதலில்லை; திரு இராசையின்கண் விளங்கும் இறைவன் ஒருவனே நமக்கு, அடைக்கல மாவான் என்று தெளிவாயாக.

[மீராசு—பிரயோசனம். பொன்மக்களாசை—உம்மைத் தொகை. 'மக்களாசை' என்றது பெண்ணாசையைக் கருதிற்று. மன்னர்—நிலைபேறுடைய இறைவர்.]

—*—

தோற்றுவாய்

தலைவியோடு மகிழ்ந்துறையும் ஒருதலைவன், அவள் வடிவழகைப் புனைந்து கூறுவது. இது 'நலம் பாராட்டல்' என்னும் துறையைச் சார்ந்தது.

(கட்டளைக் கலித்துறை)

211. பாலோ மொழி. பசும் பொற்குட
மோதனம், பார்க்கிலிடை
நூலோ, திருவயி றாலிலை
யோ. நுடங் காதுபுகழ்
வேலோன் எனவந்த விக்ரம
சோழன் வியன்சிலம்பில்
சேலோ விழிச்சந்த்ர மண்டல
மோ,நின் றிருமுகமே?

அசைவில்லாது நிலைத்த புகழையுடைய 'செவ்வேள்' எனப் போற்றும்வண்ணம் வந்துதித்த விக்கிரம சோழனின் பெரிய மலையிடத்தே விளங்கும் பாவை நல்லாய்! நின்மொழி இனிக்கின்ற பால்தானோ? தனங்கள் பசும் பொன்னாலாகிய குடங்களோ? ஆராயுங்கால் (காணப்படுதலின்) இடையானது நூல்தானோ? அழகிய வயிறு ஆலிலையோ? கண்கள் கயல் மீன்களோ? அழகிய முகமானது சந்திரமண்டலமோ? விளக்குவாயாக.

[விக்ரமசோழன், சந்த்ரமண்டலம்—இவை ஓசை நோக்கித் தற்பவமாக நின்றன. பார்த்தல்—ஆராய்தல், நுடக்க—அசைவு.]

—O—

தோற்றுவாய்

தலைவியை இடந்தலைப்பாட்டிற் சென்று காணப்பெறாத தலைவன், தன் விரகந்தோன்றக் கூறுவது.

(கட்டளைக் கலித்துறை)

212. போரேற்று வந்தடும் மாரவேட்
கஞ்சிப் புகுந்தவென்னைக்
காரேற்று நீலக் கருங்குழ

**லேற்றிக் கதிர்த்தகொங்கை**
**மேரேற்றி உந்திச் சுழிகுளத்**
**தேற்றி விரகவல்குல்**
**தேரேற்றி வாழ்விக்கும் மானைப்**
**போகண்டு சேருவதே?**

நெஞ்சே! என்னோடு போர் செய்தலை மேற் கொண்டு வந்து, வதைபுரியும் மாரவேள் கணைக்கு அஞ்சிப் புகுந்த போது, என்னை வரவேற்று, கார்மேகம் போற்றும்படியான நீலநிறம் பொருந்திய கரிய கூந்தலே பாயலாகவைத்து ஏற்றியும், பொங்கித் திகழும் கொங்கையாகிய மேருமலையிலே ஏற்றியும், உந்திச் சுழியாகிய குளத்திலே ஏற்றியும், விரகதாபத்தையுடைய அல்குலாகிய தேரின்கண் ஏற்றியும், வாழ்வளிக்கும் மான்போன்றவளாகிய தலைவியை எப்பொழுது கண்டு சேருவேன்?

[கார்—மேகம். 'மேருஏற்றி' என்பது குறைத்தல் விகாரமாய் நின்றது. அஞ்சியோரைக்காக்கும் இடமாக உறுப்புக்களின் உவமையை அமைத்து விளக்கிய நயம், போற்றத்தக்கது.]

—o—

தோற்றுவாய்

நீராடிச்செல்லும் ஒரு நங்கையைக்கண்டு காமுற்ற ஒருவன், கைக்கிளை வகையாற் றன்நெஞ்சிற்குக் கூறியது.

**(கட்டளைக் கலித்துறை)**

**213. சீரான கச்சியார் தேரோடும்**
**வீதித் தெருநடுவே**
**நீராடிப் போகின்ற நேரிழை**
**யீர்! என்றன் நெஞ்சவிடாய்**
**தீராமல் செங்கனி வாய்திற**
**வாமல் திரும்பிமுகம்**
**பாராமற் போயின் சுமத்தற்**
**கரிதாம் பழியுமக்கே.**

சீர்த்தி மிக விளங்கும் காஞ்சிபுரத்து இறைவனது தேரோடும் அகன்ற வீதியின் நடுவே, நீராடிவிட்டுச் செல்லும் நேரிழையீர்! என்னுடைய நெஞ்சம் கொண்ட வேட்கை நோயைத் தீராமலும், சிவந்த கொவ்வைக்கனி போன்ற வாயைத்திறவாமலும், முகத்தைத் திருப்பிப் பார்க்காமலும் மேலே செல்வீராயின், உமக்கது சுமத்தற்கரிய பெரும்பழியாகும்.

['தேரோடும்வீதி' என்றது குறிப்பாற் பரத்தையர் வீதியை உணர்த்திற்று. சுமத்தல்—தாங்குதல். பழி—கொலைப் பாவம்.]

---

தோற்றுவாய்

'குறுங்காபுரி' என்னும் ஊரிடத்துக் கோயில் கொண்டுள்ள பெருமானைக் கண்டு வணங்கி வந்த தன் மகள், அவ்விறைவன் மாட்டுக் கொண்ட காதலால், உடல் வேறுபட்டாளெனச் செவிலி வருந்திக் கூறுவதாக அமைந்துளதிப்பாட்டு.

**(கட்டளைக் கலித்துறை)**

**214.** **கோடே புரியும் குறுங்கா**
**புரிநம்பி கோவில்சென்று**
**ஈடேறி வாழ்ந்தனர் எல்லார்**
**மகளிரும் என்மகள்போய்த்**
**தோடே சரியத் துணைமுலை**
**சோரக்கை சோர்ந்துவிழ**
**நாடே விளைய நடுச்சாவி**
**போனது நம்மளவே!**

எல்லா உயிர்களையும் காக்கும் சங்கநாதம் புரியும் குறுங்காபுரி என்னும் ஊரில் விளங்கும் நம்பியினது கோவிலுக்கு வழிபாடியற்றிக் கண்டு மகிழச்சென்ற எல்லா மகளிரும், தத்தம் மன வேட்கை நிறைந்தேறி வாழ்வு பெற்றனர். அவருடன் சென்ற

என் மகள் மட்டும், அங்குபோய் வந்ததனால் காதணி தானேய் விழ, தனமிரண்டும் சோர்வடைய, கைகள் மெலிய நலிந்து, மேனி வேறுபட்டாள். என் செய்வோம். உழுது வித்திப் பயிர் செய்தார்க்கெல்லாம் விளைய, அதன் நடுவே, நம் நிலத்தளவு மட்டும் சாவிபோனது போலும். (எனவே இந்நிலைபோலாயிற்று என்றபடி)

[குறுங்காபுரி—ஓர் ஊர், நம்பி—பெருமாள். "நலிந்து மேனி வேறுபட்டாள்" என்பது அவாய் நிலையாக நின்றது. ஈற்றடி வேற்றுப்பொருள்வைப்பு. வயலெங்கும் விளைந்து நிற்க, நடுவே சாவிபோனதுபோல எல்லா மகளிரும் வாழ, என் மகள் மட்டும் மெலிந்தாள் என்பது கருத்து. சாவி—பால்முற்றி விளையாத தாள்.]



தோற்றுவாய்

'அறிதுயில் கொள்ளும் திருமால் விழிக்குங்கால், தேவர்கள் துயர் தீரும்' என்னும் ஆன்றோர் மொழியினை அறிந்த ஓர் அடியார் தன் துயரைத்தீர்க்க வேண்டுமென்று இராமபிரானை வேண்டுவது.

(கட்டளைக் கலித்துறை)

215. மாதண்ட ராதல பாரக்
கிரீட மணமுடியின்
மீதண்ட ராமிசை நீதுயில்
ஞான விழுதிறந்த
போதண்ட ராகுலந் தீர்க்கின்ற
தென்ன? இப் போதெனைக்கா
கோதண்ட ராகவ! ராமா!
எளியர் குலதெய்வமே!

எளியவர் குலத்தைக் காத்தருளும் தெய்வமே! கோதண்டத்தை ஏந்திய திருக்கைகளையுடைய இராகவ! இராமா! பெரியதும் குளிர்ந்ததுமாகிய இவ்வுலக பாரத்தைத் தாங்கும்

மணிக்கிரீடமாகிய மகுடத்தை உடைய ஆதிசேடன்மீது துயிலும், நீ உனது ஞான விழியைத்திறந்த காலத்தெல்லாம் தேவர்களின் துயரங்களைத் தீர்க்கின்றதென்ன? (அஃது உண்மையாயின்) இப்பொழுது என்னைக் காத்தருள் செய்வாயாக.

[கடலால் சூழப்பட்ட பெரிய உலகம் என்பார் மா தண் தராதலம் என்றார். கிரீடமணிமுடி—மணிகளாகிய கிரீடத்தை அணிந்துள்ள தலை என்றும் ஆம். தரா தலபாரம் மீதண்டும் மணிமுடியின் அரா எனக் கொண்டுகூட்டுக. அரா—பாம்பு (ஆதிசேடன்). அண்டர்—தேவர். ஆகுலம்—துயரம். 'தீர்க்கின்றதென்ன' என்றது. தேவர்கள் துயரம் தீர்ப்பது ஒரு பேரருளாகாது, பாவியேனாகிய என்னைக்காப்பதே பேரருளாகும் என்று கருதி].

—O—

தோற்றுவாய்

'ஒரு தலைவனோடு தன் மகள் உடன் போயினள்' என்பதறிந்து தேடிச்செல்லும் செவிலி ஒருத்தி, பாலை நிலத்தில் கள்ளிகள் நிறைந்துள்ள ஒரு வழியில் தன் மகளின் அடிச்சுவடுகண்டு ஆற்றாமல், அக்கள்ளிச் செடிகளிடம் கூறுவதாக அமைந்துள்ளதிப் பாடல்.

## (கட்டளைக் கலித்துறை)

**216. வேய்க்கள்ளி கூறிய மாக்குல**
**சேகரன் விஞ்சைவெற்பில்**
**தீக்கள்ளி யாகப் புனத்தே**
**எழுந்து திருகிநிற்கும்**
**காக்கள்ளி காள்! கள்ளி காள்! இங்க**
**னேவந்த கள்ளிக்கியான்**
**தாய்க்கள்ளி காணிவ் வடிகண்டென்**
**ஆவி தவிக்கின்றதே.**

மூங்கிலும் கள்ளிச் செடிகளும் மிக்கு வளர்ந்துள்ள பெருமை, பொருந்திய குலசேகர மன்னனது வெற் பிடத்தே, தீப்பரவும் கள்ளியாக (கரிந்து) இப்பாலையிலே தோன்றித் திருகிநிற்கும் கள்ளிகளே! (என்னையும் தோழிகளையும் மறந்து தலைவனே துணை யாக) இவ்விடத்தே வந்து கள்ளிக்கு (பெண்ணுக்கு) யான் தாய் என்னும் உறவுடைய கள்ளியாவேன் காண்பீர்! இவ்விடத்தே காணும் (என் மகளுடைய) அடிச்சுவடுகண்டு என் உயிர் தவிக் கின்றதே என்செய்வேன். (அவள் சென்ற வழியைக் கூறி யருளுங்கள்.)

[வேய்க்கள்ளி—வேயும் கள்ளியும்; உம்மைத்தொகை. தீக் கள்ளி—பாலையின் வெப்பத்தால் தீயும் கள்ளி. திருகி நிற்றல்— திருகுகள்ளி வகையைச் சேர்ந்தது. காக்கள்ளி—சோலைபோல வளர்ந்துள்ள கள்ளிகள். கள்ளிகாள்! எனத் தன் ஆற்றாமை தோன்ற இருமுறை அழைத்தாள். தலைவி களவொழுக்கத்தால் உடன் போயினமையால் 'கள்ளி' என்றாள். தன்னை வஞ்சித்துச் சென்றமையின் அவ்வாறு கூறினளும் ஆம். அவளுக்குத் தாயெனவே தன்னையும் கள்ளி என்றால். 'கள்ளி' என்னும் சொல்லைப் பலமுறை கையாண்டமைதவிர, இப்பாடலில் வேறு நயமொன்றுமில்லை. 'காண்' என்பது தாப்பிசையாகப் பொருள் தந்து நின்றது.]

தனிப்பாடற்றிரட்டு முதற் பாகம் முற்றும்.

—0—

# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை



| பாடல் முதற்குறிப்பு | பக்கம் |
|---|---|

